## உண்மையாக அது
## சுவைமிக்கதுதான்
## ரொட்டியின் மேலே தடவி
## உபயோகிப்பதற்கு




## — ஆனால் புளூ பாண்ட்
## உபயோகித்து எப்பொழுதாகிலும் கேக் முதலியவைகளைச்
## சுட்டிருக்கிறீர்களா?



நல்ல சுவைக்கும், புஷ்டியைத் தருவதற்கும், புளூ பாண்ட் மார்கரீனை ரொட்டி, சப்பாத்திகளின் மேல் தடவுங்கள். குடும்பத்திலுள்ள எல்லோருமே மிகவும் விரும்புவார்கள்—புளூ பாண்டிலுள்ள விடமின் 'ஏ'யும், 'டீ'யும் அவர்களுக்கு ஆரோக்கியத்தைத் தரும். புளூ பாண்டை உபயோகித்து கேக், பைன், பேஸ்டிரீஸ் முதலியவைகளை தயார் செய்வதற்குக்கூட உபயோகியுங்கள். நீங்களே தெரிந்துகொள்வீர்கள், அது எப்படி நீங்கள் சுட்ட எல்லா தின்பண்டங்களுடைய ருசியையும் பரிமளிக்கச் செய்கிறதென்று.

வெகு சுத்தமான தாவர எண்ணெய்களிலிருந்து புளூ பாண்ட் தயாரிக்கப்படுகிறது.




# புளூ பாண்ட் மார்கரீன்

— குறைந்த செலவு, ஆனால் மிகவும் நல்லது!

BB. 23-50 TM

# கல்கி பொருளடக்கம்

மலர் 16
இதழ் 17

1955 நவம்பர் 27



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

முன்பு

"என் உடைகள் சீக்கிரமாகக் கிழிந்துவிட்டன!"

இப்போது

"என் உடைகள் சுத்தமான வாஷ்வெல் பார் சோப்பை உபயோகிப்பதால் அதிக வெண்மையாக இருப்பதுடன் அதிக நாள் நீடித்து வருகின்றன.

நூறு சதவிகிதம் சுத்த எண்ணெயை அடிப்படையாகக் கொண்ட வாஷ்வெல் பார் சோப், உடைகளில் அழுக்குகள் அடையாமல் தடுப்பதற்கு உத்தரவாதமாக இருப்பதுடன், அடிக்காமலும் கசக்காமலும் உடைகள் முற்றிலும் சுத்தமாக வெளுக்கும்படி செய்கின்றன.

எனவே, வாஷ்வெல் சோப் உங்களுடைய உடைகளை நன்றாக வெளுப்பதுடன் நீடித்த காலம் உழைக்கவும் உதவியாக இருக்கிறது.

# கேரளா வாஷ்வெல் பார் சோப்




கேரளா சோப் இன்ஸ்டிட்யூட்
கோழிக்கோடு



சென்னை சர்க்கார் கைத்தொழில் & வியாபார இலாக்காவின் ஒரு பகுதி



மலர் 15 | இதழ் 17

தமிழ்த்திரு நாடு தன்னைப் - பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மன்மத ஆண்டு | கார்த்திகை 11

# மொழி நெருக்கடி முற்றுகிறது!

இலங்கையில் பாஷை பற்றிய நெருக்கடி நாளுக்கு நாள் முற்றி இப்போது உச்ச நிலையை அடைந்திருக்கிறது.

ஆஸ்திரேலியாவில் உல்லாசப் பிரயாணம் செய்து வரும் இலங்கைப் பிரதமர் சர் ஜான் கொத்தலாவலைக்கு, உடனே திரும்பி வரும்படி தந்திகள் பறந்து கொண்டிருக்கின்றனவாம்.

இதிலிருந்து இலங்கையில் பாஷை விஷயம் எத்தகைய விபரீதமான கட்டத்துக்கு வந்திருக்கிறது என்பதை ஊகித்துக் கொள்ளலாம்.

தமிழைப் புறக்கணித்து விட்டு, சிங்களம் மட்டுமே அரசாங்க பாஷையாக இருக்கும்படி செய்வதற்காகத் தீவிர சிங்களவாதிகள் முயற்சி செய்து வருகிறார்கள்.

இந்தக் குழுவினருக்கு, முன்னாள் பிரதமர் ஸ்ரீ டட்லி சேனநாயகா சட்டாம் பிள்ளையாக விளங்கி வருகிறார்!

"சிங்களத்துடன் தமிழுக்குச் சம அந்தஸ்து அளிக்கக் கூடாது. சிங்கள பாஷை மாத்திரமே இலங்கையின் ராஜாங்க பாஷையாக இருக்க வேண்டும். இக் கொள்கையைச் சர்க்கார் அங்கீகரிக்காவிடில், சர்க்கார் கட்சியிலிருந்து விலகிவிட நான் தீர்மானித்திருக்கிறேன்" என்று ஸ்ரீ டட்லி சேன நாயகா முழங்குகிறார்.

ஸ்ரீ டட்லி சேனநாயகா போன்ற தீவிரவாதிகளைத் திருப்தி செய்வதற்காக இலங்கை சர்க்கார், ராஜ தர்மத்தையும் நீதியையும் ஜனநாயக முறையையும் புறக்கணிக்கத் துணிவார்களா?

ஸ்ரீ டட்லியின் தந்தையும் இலங்கையின் முதலாவது பிரதம மந்திரியுமான ஸ்ரீ ஸ்டீபன் சேனநாயகா காலத்திலிருந்து, சிங்களம், தமிழ் இரண்டும் ராஜாங்க பாஷைகளாக இருக்க வேண்டும் என்பதே இலங்கை சர்க்காரின் கொள்கையாக இருந்து வந்துள்ளது.

டட்லி சேனநாயகா பிரதம மந்திரியாக இருந்தபோதுகூட இதே கொள்கையில் எவ்வித மாறுதலும் ஏற்படவில்லை.

அப்படியிருக்க, இப்போது அவர் திடீரென்று தமது மௌனத்தைக் கலைத்து விட்டு, தீவிர சிங்களவாதியாக மாறியிருப்பது ஆச்சரியமாக இருக்கிறது.

இந்நிலையில், இலங்கை சர்க்கார் கட்சியின் தூண்போல் விளங்கி வந்த உதவி மந்திரி ஸ்ரீ வி. குமாரஸ்வாமி, சென்ற வாரம் வெளியிட்டுள்ள அறிக்கை இலங்கை அரசியல் வட்டாரங்களில் பெரும் பரபரப்பை உண்டு பண்ணியிருக்கிறது.

"இலங்கையில் சிங்களத்தைப் போல் தமிழும் அரசாங்க பாஷையாக அங்கீகரிக்கப் படாவிட்டால், தனி ராஜ்யம் ஏற்படுத்திக் கொள்வதைத் தவிரத் தமிழர்களுக்கு வேறு வழி எதுவுமில்லை" என்று ஸ்ரீ குமாரஸ்வாமி தமது அறிக்கையில் குறிப்பிட்டிருக்கிறார்.

இலங்கை பார்லிமெண்டின் தமிழ் அங்கத்தினர்களும், தமிழ் ராஜாங்க பாஷையாக்காவிடில், தனித் தமிழ் ராஜ்யம் கோருவதென்று உத்தேசித்திருக்கிறார்களாம்.

இதே கருத்தை, இலங்கைத் தமிழர்களின் சிறந்த தலைவர்களில் ஒருவரான ஸ்ரீ சி. சுந்தரலிங்கம் வலியுறுத்தி அறிக்கை விடுத்துள்ளார்.

ஏற்கனவே இலங்கையில் பிரஜா உரிமை விஷயமாக ஏற்பட்டுள்ள பிரச்னை இன்னும் தீர்ந்தபாடில்லை. இந்நிலையில், அங்கு பாஷைப் பிரச்னை பெரும் நெருக்கடியாக உருவாகி வருவது வருந்தத் தக்கது.

சிங்களத்தைப் போல் தமிழும் ராஜாங்க பாஷையாக அங்கீகரிக்கப் படும் என்று இலங்கைப் பிரதமர் சில தினங்களுக்கு முன் கூறிய உறுதி மொழி

நிறைவேற்றினலன்றி, அங்கு உருவாகி வரும் நெருக்கடி இலங்கை சர்க்காருக்குப் பெருமையைக் கொடுப்பதாக இராது.

பௌத்த தர்மத்துக்கும் நீதிக்கும் நேர்மைக்கும் முரணுகத் தீவிரவாதிகள் போடும் கூச்சலுக்கு இலங்கை சர்க்கார் செவி கொடுக்காமல் தங்களுடைய நீண்டகாலக் கொள்கையை, அதாவது தமிழும் ராஜாங்க பாஷையாக இருக்க வேண்டும் என்ற கொள்கையைக் காலதாமதமின்றி நிறைவேற்ற முற்பட வேண்டும்.

# புல்கானின் வரவேற்பில் மொழிச் சங்கடம்

ருஷ்யா தேசத்தில் ஸோவியத் ஆட்சியின் கீழ், பல பாகங்களில் உள்ள பல்வேறு பழக்க வழக்கங்களையும் பலவேறு பாஷைகளையும் சமமாக ஆதரித்து வருகிறார்கள். அதுவே ஸோவியத் அரசாங்கம் அடிக்கடி எடுத்துக் காட்டிப் பெருமைப்படுகிற ஒரு விஷயம். அப்படியிருக்க, ஸோவியத் தலைவர்கள் இங்கே சுற்றுப் பிரயாணம் செய்யும்பொழுது வரவேற்பு ஏடுகள் ஹிந்தி பாஷையிலேதான் கொடுக்க வேண்டும் என்றும், தமிழ் தெலுங்கு முதலிய ஸ்தல பாஷைகளில் கொடுக்க வேண்டாம் என்றும் எச்சரிக்கை அறிக்கைகள் மேலேயிருந்து வந்திருப்பதாகக் கேள்விப்பட்டுத் திகைப்படைந்தோம். உண்மையில் இது மிகவும் வருந்தத் தக்க நிகழ்ச்சி. ருஷ்யத் தலைவர்களுக்கு நம்முடைய நாட்டில் பல மொழிகள் வழங்கி வருகின்றன என்பது தெரியாதா? அதை மறைக்க முடியுமா? மறைத்தாலும் அதனால் என்ன லாபம்? என்ன சிறப்பு? அந்தந்தப் பிரதேச மொழியிலும், அதிகாரப் பொது மொழியிலும், இரண்டிலும், தயாரித்துக் கொடுத்தால் உண்மைக்கும், புகழுக்கும், சேதம் இல்லாமல் காரியம் நிறைவேறும். பிரதேச மொழிகளையும் பாரத ஸர்க்கார் மதித்தும் காப்பாற்றியும் வருகிறார்கள் என்பதை வெளிநாட்டார் அறிந்து கொள்ள முடியும்.

இதை யெல்லாம் நன்கு உணர்ந்து பிடிவாதமாகத் தமிழிலேதான் வரவேற்பு வழங்குவது என்று சென்னைக் கார்ப்பரேஷனும், கோயம்புத்தூர் நகராண்மைக் கழகமும் மற்றும் சிலரும் தீர்மானித்திருப்பதைப் பாராட்டுகிறோம். புல்கானின் சம்பந்தப்பட்டவரை ஹிந்தியும், தமிழும் அவருக்கு ஒன்றுதான்! இரண்டுமே புரியப் போவதில்லை. ஆனாலும் வெளி நாட்டுத் தலைவரை வரவேற்றுக் கௌரவிக்கும் ஒரு சடங்கில் நம்முடைய மொழிகளையும், அவற்றின் மூலம் நம்மையுமே, நாம் கௌரவித்துக் கொள்வது நியாயமே யாகும்.

# பாலர் பகுதியில் ராஜாஜி எழுதும் கதைகள்

எளிமையும், சிறுவர்களுக்குச் சுவைதரக் கூடிய கற்பனை ரஸமும், வளரும் உள்ளங்களைப் பண்படுத்தும் தர்ம நலமும், ஒன்று சேர்ந்து அமைகிற குழந்தைக்கதைகள் எல்லா நாட்டின் இலக்கியங்களிலுமே உயர்ந்த இடம் பெறும்.

நமது நாட்டில் 'ஹிதோபதேச'மும், 'பஞ்ச தந்திர'மும் மற்றும் அவற்றைவிடச் சிறந்த, ஆனால் எழுத்து வடிவத்தில் இறங்காத, பாட்டிக் கதைகளும், மேலே சொன்ன சிறப்புக்கள் அனைத்தும் பொருந்தியனவாக, வாய் மொழியாகச் சொல்லியும் கேட்டும் நமது பண்பாடு வளர்வதற்குப் பரம்பரை பரம்பரையாக உதவி வந்திருக்கின்றன.

மேனாட்டு இலக்கியங்களில் ஈசாப் கதைகள் என்று அழைக்கப்படும் கதைக் கொத்தும் இந்த இனத்தையே சேர்ந்தது. இக் கதைகளின் விசேஷம் என்னவென்றால், சிறு குழந்தைகளுக்காக எழுதப்பட்டவை போன்று தோன்றினாலும், இந்தக் கதைகள் எல்லாம் பெரியோர்களுக்கு வேண்டிய உபதேசப் பொருளையும் அழகாகப் பொதிந்து தருகின்றன. தேடிப் பார்த்தால், படிக்கும் பருவம் கடந்தவர்களும் இந்தக் கதைகளில் உயர்ந்த அற விளக்கங்களைக் காண்பார்கள்.

நமது தலைவர் ராஜாஜி அவர்கள் இப்பொழுது எழுதி வரும் காந்தி வசனமஞ்சரி என்ற தொடரோடு, இனி பாலர் பகுதியில் வாரந்தோறும் சிறுவர்களுக்கு என்று ஒரு புதிய கதைத் தொடரும் வெளியாகும். இந்தக் கதைகள் மேலே குறிப்பிட்ட பழங்கதைகளைப் போலவே, சிறுவர்களுக்காகத் தோன்றியனவாக இருந்தாலும், பெரியவர்களும் படித்துப் பயன்பெறும் வகையில் அமைந்திருக்கும்.

"சக்கரவர்த்தித் திருமகன்" தொடர் முடிந்ததும், குழந்தைகளிடமிருந்து நமது காரியாலயத்துக்கும், ராஜாஜி அவர்களுக்கும் பல கடிதங்கள் வந்தன. கதைகள் எழுத வேண்டும் என்றே குழந்தைகள் கேட்டுக் கொண்டிருந்தார்கள். அவர்கள் எதிர் பார்த்திருப்பதும், ராஜாஜி தாமாகவே தீர்மானித்திருந்ததும் ஒன்றாக அமைந்தது ஒரு விசேஷமே.

டிஸம்பர் 11-ந் தேதி 'கல்கி' இதழில் இத் தொடரின் முதலாவது கதை வெளியாகிறது.

அட்டைப் படம்

## கூத்தும் பிரார்த்தனையும்

மலைப் பளிஞரின் குடியிருப்பில் கோமாளிக் கூத்து நடைபெறுகிறது. அதேசமயம் லால்குடியில் பிரார்த்தனைக் கோலத்தில் நிற்கிறாள் கல்யாணி. இவ்வாரம் ரவிசந்திரிகாவில் வரும் இந்தக் காட்சியை அட்டையிலே சித்திரித்திருக்கிறார் ஓவியர் மணியம்.

# சிறுகதைப் போட்டி முடிவு

லண்டன்மா நகரத்து டாக்ஸி ட்ரைவர் ஒருவர் தம்முடைய ரஸமான அநுபவங்களைக் கொண்டு ஓர் அருமையான நூல் எழுதியிருக்கிறார். இந்தப் புத்தகம் ஒரு சிறந்த நாவலைவிட ரஸமாக இருக்கிறது என்று சமீபத்தில் ஒரு நண்பர் மிக மிகப் பாராட்டிப் பேசிக் கொண்டிருந்தார்.

'ஒவ்வொரு மனிதனும் நிச்சயம் ஒரு நல்ல நூல் எழுத முடியும், அது அவனுடைய சுய சரிதந்தான்' என்று மேனாட்டு நிபுணர் ஒருவர் சொன்னது இந்த இடத்தில் நினைவுக்கு வருகிறது. என்றாலும், உலகில் உள்ள எல்லா மனிதர்களும் தங்கள் அனுபவங்களை எழுத்திலே எழுதிவிட முடியாது. லண்டனிலுள்ள எல்லா டாக்ஸி ட்ரைவர்களும் தங்கள் அநுபவங்களை இலக்கியமாக "மொழி பெயர்த்து" விட முடிந்ததா! இல்லை. எழுதுவதற்குரிய வசதி கொடுத்தால், எல்லாருமே இலக்கியத்தை சிருஷ்டித்துவிட முடியும் என்பதில்லை. படித்த மனிதர்களிலேயே சிலரால்தான் தங்கள் அறிவை நாலு பேருக்கு எடுத்து வழங்க முடிகிறது.

கதை எழுதும் கலையும் மற்றக் கலைகளைப் போல ஓரளவு இயற்கையிலேயே அமைந்திருக்க வேண்டிய ஆற்றல். இந்த ஆற்றல் விருத்தியாவதற்கு வாழ்க்கையும் அதன் அநுபவங்களும், படிப்பும், அதன் வியாபகமும் துணை செய்கின்றன.

இத்தனையும் எதற்காகச் சொல்லுகிறோம் என்றால் தமிழ்நாட்டு வாழ்க்கை முறையானது சம்பவங்கள் நிறைந்ததாக இல்லை என்றும், கதாசிரியர்களுக்கு வேண்டிய ரஸமான சம்பவங்கள், மற்ற நாடுகளிலே போல் நமது நாட்டில் நிகழ்வதில்லை என்றும் ஒரு இலக்கிய விமர்சகர் சில நாட்களுக்கு முன்பு ஓர் ஆங்கிலப் பத்திரிகையில் எழுதியிருந்தார்.

இந்த ஆவலாதிக்குச் சான்றாகத் தமிழில் வந்துள்ள சிறுகதை இலக்கியத்தைச் சுட்டிக் காட்டி, "ஐயோ!" என்று பரிதவித்திருந்தார் அவர்.

உண்மையில் அப்படியெல்லாம் பரிதவிக்க வேண்டியதில்லை என்று சொல்லி அந்த நண்பருடைய கண்ணீரைத் துடைக்க விரும்புகிறோம். தமிழில் எழுந்துள்ள சிறு கதை இலக்கியம், வேறு எந்த இந்திய மொழியில் எழுந்துள்ள சிறுகதைகளையும் விடத் தாழ்ந்து விடவில்லை. நம்மை நாமே குறைத்துக் கொள்ளும் வழக்கத்தை விட்டுவிட்டுப் பார்த்தால், தமிழில் இது வரை வந்துள்ள சிறுகதைகளில் உலக இலக்கியத்தில் வேறு எந்த மேனாட்டுச் சிறுகதையோடும் ஒப்ப நிற்கக் கூடிய சிறப்புப் பொருந்தியவை பல உண்டு. சந்தேகமே இல்லை. ஆங்கிலத்தில் எழுதப்பட்ட ஒரு விஷயத்தைக் கையில் எடுத்துப் படிக்கும்போதே நமக்கு நம்மையும் அறியாத ஒருமயக்க உணர்ச்சி மேல் எழுகிறது. பாஷை நமக்கு அன்னியமாக இருப்பதினாலேயே மொழிகளின் வேகத்தினால் ஒரு மயக்கம் உண்டாகிறது. இந்த மயக்கத்திலிருந்து தெளிந்து நின்று, எடை போட்டோமானால், நமது நாட்டுச் சிறுகதை இலக்கியத்தின் வளர்ச்சியைக் குறித்து நாம் நிச்சயம் பெருமை அடையலாம்.

இந்த உண்மை இப்பொழுது சிறுகதைப் போட்டிக்கு வந்த இரண்டாயிரத்துக்கும் மேலான கதைகளைப் பார்க்கும்போது நமக்கு உறுதிப் பட்டது என்பதை இங்கே நேயர்களுக்குக் குறிப்பிடுகிறோம்.

போட்டிக்கு என்று வந்த கதைகளில் பன்னிரண்டு கதைகளே பரிசுக்குத் தேர்ந்தெடுக்கப் பட்டன. என்றாலும், நூற்றுக் கணக்கான கதைகள் படிப்பதற்கு ரஸமாக இருந்தன; போட்டி என்ற முறையிலே அநேக கதைகள் தேர்விலே கழிக்கப்பட்டன. எனினும் தமிழின் மறுமலர்ச்சி அந்த இரண்டாயிரத்து ஐநூறு கதைகளிலும் நன்கு புலனாயிற்று.

இன்னொரு விஷயம்: இக் காலத்தில் நம்முடைய இளைஞர்கள் எழுதும் தமிழ் நடை எத்தனை திருத்தமாகவும் வேகம் கொண்டதாகவும் இருக்கிறது என்கிறீர்கள்! பேராசிரியர் ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் இந்த முன்னேற்றத்துக்காக சதாவும் கனவு கண்டு கொண்டிருந்தார். நன்றாக எழுதக்கூடிய ஒரு இளைஞரைக் கண்டுவிட்டால் அவருக்கு அளவு கடந்த உத்சாகம் உண்டாகும்! அவருடைய நினைவாக ஏற்படுத்தப்பட்ட இந்தச் சிறு கதைப் போட்டியில் அவருடைய ஆசைகளில் ஒன்று நிறைவேறுவதற்கு உரிய அறிகுறி கண்டு மிகவும் மகிழ்ச்சி அடைகிறோம்.

இனி, கதைகளில் அடங்கியுள்ள விஷயத்தைப் பற்றி ஒரு வார்த்தை. பொதுவாக உலகில் உள்ள கதைக் கற்பனைகளை எல்லாம் அலசி ஆராய்ந்து, மொத்தம் இத்தனை நிகழ்ச்சிகளுக்குமேல் கிடையாது என்று ஓர் ஆசிரியர் கணக்குப் போட்டு ஒரு மிகச் சிறிய தொகைக்குள் அடக்கி யிருக்கிறார். எந்தக் கதையைக் கொடுங்கள். இந்தச் சிறு எண்ணிக்கைக்குள் அடங்கிவிடும். எனவே புதுமை புதுமை என்று சொல்லுவதெல்லாம் விஷயத்தை எடுத்துக் கையாண்டுள்ள முறையிலேதான்! இந்த வகையில் பார்த்தால் பரிசுக்குத் தேர்ந்தெடுக்கப் பட்ட பன்னிரண்டு கதைகளும் வெவ்வேறு வகை என்று சொல்ல வேண்டும்.

கதைகளைத் தேர்ந்தெடுத்த விதத்தில் பஞ்சாயத்தார் கையாண்ட முறையைப் பற்றி ஒரு வார்த்தை: கதையைப் பரிசீலனை செய்யும் போது கதைக்கு உரிய எண்களை வைத்தே பஞ்சாயத்தார்கள் பார்த்தார்கள். கதைகளின் தலைப்புகளும் எழுதியவரின் விலாசங்களும் தனியாகப் பதிவு செய்யப்பட்டிருந்தன. பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுத்த பின்னரே அவற்றின் தலைப்புக்களும், எழுதியவரின் விலாசங்களும் பார்வையிடப்பட்டன. இன்னொரு ரஸம் என்னவென்றால், பரிசுக்கு உரிய கதைகள் பன்னிரண்டையும் தேர்ந்தெடுத்து வரிசைப் படுத்துவதில் பஞ்சாயத்தாரிடையே

எவ்வித அபிப்பிராய பேதமும் ஏற்படவில்லை. முடிவு ஏகமனதாக இருந்தது என்பதை மகிழ்ச்சியோடு தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

தமிழில் சிறுகதைகள் எழுதும் கலையில் முப்பது ஆண்டுகளுக்கு முன்பே பல நூதன உத்திகளைக் கையாண்டு, மறுமலர்ச்சி இலக்கியத்துக்கு வழி காட்டிய பேராசிரியர் கல்கி கிருஷ்ணமூர்த்தி அவர்களின் பெயரால் ஏற்படுத்தப்பட்ட இந்தப் போட்டியில், அவர் எதிர்பார்த்த இலக்ஷியங்கள் நிறைவேறும் முறையில் கதைகளின் தரம் அமைந்திருக்கிறது என்பதே பஞ்சாயத்தாரின் எண்ணம். முடிவின் விவரங்கள் மற்றொரு பக்கத்தில் பிரசுரமாகியிருக்கின்றன. முதற் பரிசுக் கதை, பேராசிரியர் கிருஷ்ணமூர்த்தி அவர்களின் ஆண்டு நினைவை யடுத்து அவருடைய நினைவு மலராக டிஸம்பர் 5-ந் தேதி வெளியாகும் 'கல்கி' மலரில் படிக்கலாம். மற்றக் கதைகளும் தொடர்ந்து வாரந் தோறும் ஒவ்வொன்று வெளியாகும். காலஞ் சென்ற பேராசிரியரின் நினைவுக்கு நமது காணிக்கையாகக் கருதி இந்தக் கதைகளை வெளியிடுவதில் திருப்தியும் மகிழ்ச்சியும் காண்கிறோம்.

இந்தப் பணியில் மிக்க ஊக்கத்துடன் ஈடுபட்டு இத்தனை கதைகளையும் படித்து மதிப்பிடும் பெரும் காரியத்தில் பூரண அன்புடன் ஒத்துழைத்த பேரறிஞர்களுக்கு நமது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். பரிசுக் கதைகளைத் தவிரப் பிரசுரத்துக்கு என்று தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள கதைகளும் 'கல்கி' இதழ்களில் வெளியாகும்.

இந்தப் போட்டியில் கலந்து கொண்டு இதை ஒரு வெற்றியாகச் செய்த எழுத்தாள நண்பர்கள் அனைவருக்கும் நமது நன்றி உரியது.




இளம் சங்கீத வித்வான்களை ஊக்குவிப்பதற்காகவும், சங்கீதக் கலையின் வளர்ச்சிக்காகவும் அகில இந்திய ரேடியோ ஸ்தாபனத்தார் சங்கீதப் போட்டி ஒன்று நடத்தினார்கள். இந்தப் போட்டியில் வெற்றி பெற்றவர்களுக்கு ஜனாதிபதி ராஜேந்திர பிரசாத் அவர்கள் பரிசுகள் வழங்கினார். சங்கீதப் போட்டியில் தந்தி வாத்தியத்தில் முதற் பரிசு வீணை திருமதி ஜி. மீனு அவர்களுக்கும், வாய்ப்பாட்டில் பெண்கள் வரிசையில் முதற் பரிசு திருமதி எம். ஜெயலக்ஷ்மி அவர்களுக்கும், ஆண்கள் வரிசையில் முதற் பரிசு திரு ரங்கநாதன் அவர்களுக்கும், காற்று வாத்தியத்தில் முதற் பரிசு நாகசுரம் திரு ஜெயசங்கரன் அவர்களுக்கும் கிடைத்தன. லலித சங்கீதத்தில் முதற் பரிசு பெற்ற குமாரி புஷ்பாவுக்கு ஜனாதிபதி அவர்கள் பரிசு வழங்குவதையும், சங்கீதப் போட்டியில் வெற்றி பெற்றவர்களையும், குழந்தைகள் இசையரங்கு நடப்பதையும் படங்களில் காணலாம்.

மிருதங்கப் போட்டியில் முதற் பரிசு பெற்ற திரு கிருஷ்ணமூர்த்தி குழந்தைகள் இசையரங்கில் பின்னணியில் மூன்றாவதாக உட்கார்ந்திருப்பதைக் காணலாம்.

## துக்லக் திகைக்கிறார்!

இதுயார்? நமக்குப் போட்டியாளா?

புதிய ஏற்பாடு

துக்லக்

## மாப்பிள்ளை வருகிறார்! மாலை தயார்!





# தேர்ந்த கைகளுக்கே
## தெள்ளெனத் தெரியும் வைரத்தின் குணாதிசயங்கள்



கனியிலிருந்து எடுத்த கற்களை காலம் கடந்து நிற்கும் அழகும் பொருளாக்குவது தேர்ந்த கைகளே!

கண்களால் காண முடியாததும், அதிர்ஷ்டக் குறைவாகக் கருதப்படுவதுமான தோஷங்களை எளிதில் கண்டு சொல்வதும் அக்கைகள்தான்.





நெடு நாட்களாகவே நீங்கள் வாங்க விரும்பும் வைரங்களின் மதிப்பைச் சரிவரச் சொல்வதும் அத் தேர்ந்த கைகளேதான்.

சுராஜ்மல்லினால் தயார் செய்யப்படும் வைரங்கள் உயர்ந்த ரகத்திற்கும், சிறந்த வேலைப்பாட்டிற்கும், சகாயமான விலைக்கும் பெயர்பெற்றவை

டெலிபோன்: 2250

**Surajmals**

313, ESPLANADE · MADRAS-1

PIONEERS OF THE DIAMOND TRADE IN INDIA

தந்தி: "மொராவிட்டி"

சுராஜ்மல்ஸ் — பாரதத்தின் பழமையான வைர வியாபாரிகள்
313, எஸ்பிளனேட், மதராஸ்-1.

முக்கியமாக கவனிக்க: சுராஜ்மல்லில் வாங்கும் எந்தப் பொருளும் உங்களுக்கு திருப்தி அளிக்காவிடில் பணத்தை நீங்கள் திரும்பப் பெற உத்திரவாதமுண்டு.

"1395 லிருந்து 1955 வரை பாரதத்தின் சேவையில் 60 வருடங்கள்"

GRANT. MS.

# என்ன சேதி?

## கீழை நாட்டுக் கல்வி மகாநாடு

அண்ணாமலை நகரில் டிஸம்பர் 26, 27, 28 ஆகிய மூன்று தினங்களும் கீழை நாட்டு அகில இந்தியக் கல்வி மகாநாடு நடக்கப் போகிறது. அகில இந்தியாவிலிருந்தும், இலங்கையிலிருந்தும் சிறந்த அறிஞர்கள், ஆராய்ச்சியாளர்கள் மேற்படி மகாநாட்டில் கலந்து கொள்ளப் போகிறார்கள்.

சாதாரணமாகப் பல விஷயங்களைக் கற்றுணர்ந்த பெரியார்கள் ஓர் இடத்தில் கூடினால் தங்கள் தங்கள் மேதையைக் காண்பித்து விட்டு மகாநாடு வெற்றிகரமாக நடந்து விட்டதாகத் திருப்திப் பட்டுக் கொண்டு போய்ச் சேருவது வழக்கம்.

ஆனால் அண்ணாமலை நகரில் கூடப் போகும் மகாநாடு அத்தகைய வெறும் மேதையை மட்டும் காண்பிக்கும் பழைய பத்தாம் பசலி மகாநாடாக இராது.

வேதம், ஈரானியன், ஸம்ஸ்கிருதம், இஸ்லாம் பண்பாடு, அரபியும்-பார்ஸியும், பாலியும் - பௌத்தமும், பிராகிருதமும் - ஜைனமும், சரித்திரம், புதைபொருள் ஆராய்ச்சி, இந்திய பாஷைகள், திராவிடப் பண்பாடு, தத்துவம்-மதம், விஞ்ஞான நுணுக்கங்கள்—கலைகள் முதலிய பதின்மூன்று விஷயங்களைப் பதின்மூன்று பிரசித்தி பெற்ற அறிஞர்கள் ஆராய்ச்சி நிறைந்த அறிவுரைகளில் விளக்கம் செய்யப் போகிறார்கள்.

இந்த மகாநாட்டுக்குப் பாரதத்தின் உப ஜனாதிபதி டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன் தலைமை வகித்துச் சிறப்பிக்கப் போகிறார். அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தலைவர் திரு டி. எம். நாராயணசாமி பிள்ளை அவர்கள் வரவேற்புக் கமிட்டித் தலைவராக இருந்து எல்லா ஏற்பாடுகளையும் கவனித்து வருகிறார்கள். பேராசிரியர்கள் ரா. பி. சேதுப் பிள்ளை, தெ. பொ. மீனாட்சிசுந்தரன் ஆகிய பேரறிஞர்கள் இந்த மகாநாட்டில் கலந்து கொண்டு தக்ஷிணப் பண்பாட்டை விளக்கம் செய்வார்கள்.

இந்தக் கல்வி மகாநாட்டின் வெற்றிக்காகப் பேராசிரியர் திரு ஆர். ராமானுஜாச்சாரியார், டாக்டர் ஏ. சிதம்பரநாத செட்டியார், பேராசிரியர் எல். பி. கே. ஆர். ராமநாதன் செட்டியார், டாக்டர் சி. எஸ். வேங்கடேச்வரன் ஆகிய பேரறிஞர்கள் பாடுபட்டு வருகிறார்கள். அகில இந்தியாவிலும், ஏன், ஆசியாவிலுமே அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் பெயர் புகழோடு விளங்கும் வகையில் மகாநாடு வெற்றிகரமாக நடக்கப் பிரார்த்திக்கிறோம்.

## தமிழிசைப் பரிசு

தமிழ் மக்கள் எல்லாரும் ஒரு ஜாதி, ஒரு இனம் என்ற ஒருமைப்பாடும் ஒற்றுமை உணர்ச்சியும் உண்டாவதற்குக் காரணமாய் இருந்து வருகிறவர்கள் தமிழையும் இசையையும் வளர்த்த பெரியார்கள். நம் காலத்தில் அத்தகைய அரிய தொண்டைச் செய்து காட்டியவர் பேராசிரியர் கல்கி திரு ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்கள். தமிழுக்கும் தமிழ் இசைக்கும் அவர் ஆற்றிய தொண்டு தமிழ் நாடு நன்கு அறியும்.

ரசிகமணி டி. கே. சி. அவர்களோடு சேர்ந்து ஒத்துழைத்து அவர் செய்த அந்த நிகரற்ற தொண்டு, தமிழ் மொழியின் சரித்திரத்தில் சிரந்தரமான இடம் பெற வேண்டிய அரும் பெரும் சேவை.



பிரபல சங்கீத வித்வான் மணக்கால் ஸ்ரீ சிவராஜன் அவர்கள் நவம்பர் 2ந் தேதியன்று டைபாய்டு சுரத்தினால் பாதிக்கப்பட்டு இவ்வுலகை விட்டு மறைந்து விட்டார். வித்வான் ஸ்ரீ சந்தான பாகவதரின் குமாரரும், மணக்கால் சகோதரர்களில் ஒருவருமான ஸ்ரீ சிவராஜன் கதா காலட்சேபத் துறையிலும், சங்கீத வித்தை பயில்விப்பதிலும் சிறந்து விளங்கினார். அவரது பிரிவினால் வருந்தும் மணக்கால் சங்கீத சகோதரர்களின் குடும்பத்தாருக்கு நமது ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.



இலக்கிய உலகிலே கவிச் சக்கரவர்த்தியாக விளங்கிய கம்பர் பெருமானைப் பாரத நாடு பாராட்டிக் கௌரவித்தது. ஆம்! இந்திய நாட்டின் ஜனாதிபதி ராஜேந்திர பிரசாத் அவர்கள் நவம்பர் 14-ந் தேதி ராஜாஜி ஹாலில் கவிச் சக்கரவர்த்தியின் விழாவைத் துவக்கி வைத்தார்கள். பிரமாதமாக அலங்கரிக்கப்பட்டிருந்த மேடையிலே இந்திய நாட்டின் ஜனாதிபதி ராஜேந்திர பிரசாத் அவர்களும், சென்னை முதன் மந்திரி காமராஜ் நாடார் அவர்களும், நிதி மந்திரி திரு சி. சுப்ரமணியம் அவர்களும், கம்பர் கழகத் தலைவர் எம். பக்தவத்சலம் அவர்களும் வீற்றிருந்தனர். கம்பர் மகாநாட்டுக்குத் தலைமை தாங்கிச் சிறப்பித்த திரு ஏ. வி. பால் நாடார் அவர்களும், கம்பர் கவிதையை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து ஒரு நூல்வடிவில் அரங்கேற்றிய பேராசிரியர் அ. சீனிவாசராகவன் அவர்களும், பேராசிரியர் திரு ரா. பி. சேதுப் பிள்ளை அவர்களும் அமர்ந்திருந்தனர். கல்வி சிறந்த தமிழ் நாட்டில் புகழ்க் கம்பனின் பெருமையை உணர்ந்த அறிஞர்களும், கலைஞர்களும், பிரமுகர்களும் திரளாகக் குழுமியிருந்தனர். இந்த விழாக் காட்சிகள் சிலவற்றை மேலேயுள்ள படத்தில் காணலாம்.

---

தமிழ் இசைக்குக் கல்கி கிருஷ்ணமூர்த்தி அவர்கள் ஆற்றிய தொண்டின் ஞாபகார்த்தமாகத் திரு கல்கியின் பெயரால் ஆண்டுதோறும் ஒரு தம்புரா பரிசு வழங்குவதற்கு 'கல்கி' மானேஜிங் டைரக்டர் திரு சதாசிவம் அவர்கள் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். இந்தப் பரிசுப் போட்டியைச் சங்கீத வித்வத் சபையார் நடத்துகிறார்கள்.

சங்கீத வித்வத் சபையின் இருபத்தொன்பதாவது விழாவும், அதையொட்டி அவர்கள் நடத்தும் இந்த இசைப் போட்டியும் டிஸம்பர்மாதம் 23-ந் தேதியிலிருந்து 31-ந் தேதி வரை நடைபெறும். வித்வத் சபையின் வழக்கமான இசைப் போட்டியுடன் இந்த ஆண்டு தமிழிசைப் போட்டியும் நடத்த ஏற்பாடு செய்திருக்கிறார்கள். முத்துத் தாண்டவர், அருணாசல கவி, கோபாலகிருஷ்ண பாரதி ஆகியவர்கள் இயற்றிய தமிழ்க் கீர்த்தனங்களில் இந்தப் போட்டி நடைபெறும். இந்தத் தமிழிசைப் போட்டியில் வெற்றி பெற்றவர்களுக்குக் கல்கியின் ஞாபகார்த்தப் பரிசான தம்புரா வழங்கப்படும்.

வித்வத் சபை நடத்தும் இசைப் போட்டி சம்பந்தமாக மேலும் விவரங்கள் தெரிந்து கொள்ள விரும்புவோர் "காரியதரிசி, சங்கீத வித்வத் சபை, 115-E. மௌப்ரீஸ் ரோடு, ராயப்பேட்டை, சென்னை-14" என்ற விலாசத்துக்கு எழுதித் தெரிந்து கொள்ளலாம்.

கல்கி திரு. ரா. கிருஷ்ணமூர்த்தி நினைவுச் சிறுகதைப் போட்டி

பஞ்சாயத்தார் முடிவு

— x —

இந்தப் போட்டிக்கு வந்த மொத்தக் கதைகள் : 2513
ஏற்கத்திட்ட விதிகளின்படி படித்துப் பார்த்துக் கீழ்க்கண்ட
பன்னிரண்டு கதைகளும் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கின்றன

**முதல் பரிசு : ரூ. 500/-**

"தூறல்" : என். சுப்பிரமணியன், (சுகி)

**இரண்டாம் பரிசு : ரூ. 250/-**

"பார்வதி" : ராமப்ரியா

**மூன்றாவது பரிசுகள் ரூ. 125/- வீதம் பத்துக் கதைகளுக்கு:**

1. "பண்ணையார் மகன்" : ஆ. நா. ஜெயராமன்
2. "கடவுள் சித்தம்" : 'கல்கி' கோபாலகிருஷ்ணன்
3. "பழி" : இ. ரா. பா. சாரதி
4. "நிம்மதி" : எஸ். வைத்தியநாதன்
5. "சிவப்புப் புடவை" : நா. வெங்கடரத்தினம்
6. "சலனம்" : ஏ. எஸ். ராகவன்,
7. "தண்டனை" : ஏ. பி. ஏ. ஈஸ்வரன், (சம்புமோகன்)
8. "வைராக்கியம்" : கே. நாராயணசாமி (மாயா)
9. "கடமையும் பாசமும்" : கே. கனகவல்லி
10. "லீலாவின் விவாகரத்து" : எஸ். ரங்கநாயகி

ஒப்பம்.

ரா. பி. சேதுப்பிள்ளை

ஸ. மகராஜன் பெ. தூரன்

மீ. ப. சோமசுந்தரம்



# கல்கி திரு ரா. கிருஷ்ணமூர்த்தி நினைவுச் சிறுகதைப் போட்டி

○●○

போட்டிக் கதைகளைக் கீழ்க்கண்ட பஞ்சாயத்தார்கள் பரிசீலனை செய்தார்கள் :

1. பேராசிரியர் திரு ரா. பி. சேதுப்பிள்ளை
   *தமிழ்த்துறைத் தலைவர், சென்னை சர்வகலாசாலை, சென்னை.*
2. திரு எஸ். மகராஜன்
   *சப் ஜட்ஜ், புதுக்கோட்டை.*
3. திருமதி குகப்ரியை
   *மயிலாப்பூர், சென்னை.*
4. திரு ம. ப. பெரியசாமித் தூரன்
   *ஆசிரியர், 'கலைக் களஞ்சியம்', சென்னை.*
5. திரு மீ. ப. சோமசுந்தரம்
   *ஆசிரியர், 'கல்கி', சென்னை.*

பரிசு பெற்றவர்களின் விவரம் :

**முதற் பரிசு : ஐநூறு ரூபாய்**

திரு. என். சுப்பிரமணியன், ("சுகி") 35, மார்சிங்பேட்டை தெரு, கன்டோன்மெண்ட், திருச்சி.

**இரண்டாவது பரிசு : இருநூற்று ஐம்பது ரூபாய்**

திருமதி ஜயலக்ஷ்மி வேங்கடராமன் ("ராமப்ரியா"), 22, மோதிலால் தெரு, தியாகராயநகரம், சென்னை – 17.

**மூன்றாவது பரிசுகள் : ஒவ்வொன்றும் நூற்று இருபத்தைந்து ரூபாய்**

1. திரு ஆ. நா. ஜயராமன், 21/1, லேன்ஸ்டவுன் பிளேஸ், கல்கத்தா – 29.
2. திரு கல்வி எஸ். கோபாலகிருஷ்ணன், 13, வேங்கடேசன் தெரு, தியாகராயநகரம், சென்னை – 17.
3. இ. ரா. பா. சாரதி, பே அன்ட் அக்கௌன்ட்ஸ் ஆபீஸ், பம்பாய்.
4. திரு எஸ். வைத்தியநாதன், 3, ரெட்டி சத்திரம் தெரு, திருப்பாப்புலியூர்
5. ரா. வேங்கடரத்தினம், 31, கட்ட சுபேதார் தெரு, கொசப்பேட்டை, வேலூர்.
6. திரு ஏ. எஸ். ராகவன், 24, எஸ். ஆர். எக்ஸ்டென்ஷன், ஸ்ரீரங்கம்.
7. திரு ஏ. வி. ஏ. ஈச்வரன் ("சம்பு குமாரன்"), டி. எஸ். ஓ. எஸ். ஆபீஸ், எஸ். ஈ. ரயில்வே, கரக்பூர்.
8. திரு கே. நாராயணசாமி ("மாயா"), 6, கொண்டயம் தெரு, திருவானைக் கோவில்.
9. திருமதி கே. கனகவல்லி, 1, சந்தான கோபாலபுரம், மேற்கு அக்ரகாரம், விழுப்புரம்.
10. திருமதி எஸ். ரங்கநாயகி, 11, அபிராமபுரம் இரண்டாவது தெரு, சென்னை – 18.

*பரிசுத் தொகைகள் இந்த எழுத்தாளர்களுக்கு 23-11-55 அன்று அனுப்பி வைக்கப்பட்டன.*

நம்பிக்கையானது
சக்தி வாய்ந்தது

மர்பி ரேடியோ
murphy radio


மாடல் டிஎ 222
விலை ரூ. 300/-


மாடல் டிஎ - 224
விலை ரூ. 425/-


மாடல் டிஎ 226
விலை ரூ. 575/-

மர்பி
ரேடியோ





கூந்தல் மற்றும் மூளை
அபிவிருத்திக்கான தைலம்

செழுமையாகக் கூந்தல் வளர உதவுகிறது. வழுக்கையைத் தடுப்பதுடன் கேசம் உதிர்வதையும் நிறுத்துகிறது. ஞாபகசக்தியை அதிகரித்து ஆழ்ந்த நித்திரையை அளிக்கிறது. எல்லோருக்கும் எக்காலத்திலும் ஏற்றது.

பெரிய பாட்டில் ரூ. 3-8-0
சிறிய பாட்டில் ரூ. 2-0-0

எங்கும் கிடைக்கும்




ராம்தீர்த் யோகாஷ்ரமம்
பம்பாய்-14. (C. Rly)



# ஒரு தொழிலின் அவசியத்தை நிர்ணயிப்பது எப்படி?

ஒரு சைக்கிள், தையல் மிஷின் அல்லது ஒரு லாந்தர் விளக்கையோ ஒருவரிடம் காண்பியுங்கள். அவரிடமே வார்ப்பெடுத்த ஓர் எஃகுக்கட்டியையும் காண்பியுங்கள். நிச்சயமாக அவர் எஃகுக் கட்டியை திரும்பியும் பார்க்கமாட்டார். ஆயினும் தொழிற்சாலைகளிலும், இயந்திரங்களிலும், கட்டிடங்களிலும்...மற்றும் நாம் நாள் தோறும் உபயோகிக்கும் ஆயிரக்கணக்கான பொருள்களைத் தயார் செய்ய எஃகானது இன்றியமையாதது.

இந்திய எஃகுத் தொழில் துவக்கப்பட்டு ஐம்பது ஆண்டுகள் நிரம்பவில்லை எனினும் இன்று நம் நாட்டின் பொருளாதார முன்னேற்றத்தில் அது ஒரு ஜீவநாடியாக விளங்குகிறது. பிற நாடுகள் அணுக முடியாத குறைந்த அடக்க விலையில் சுமார் 17 லக்ஷம் டன் வார்ப்பெடுத்த எஃகு கட்டிகள் நம் நாட்டில் உற்பத்தியாகின்றன. இந்த 17 லக்ஷ டன்களில், 10 லக்ஷ டன்களுக்கு மேலான எஃகு, டாடா ஸ்டீல் தொழிற்சாலையிலேயே தயாரிக்கப்படுகிறது. இரண்டாவது ஐந்தாண்டு திட்ட ஆரம்ப காலத்திலேயே சுமார் 20 லக்ஷம் டன்கள் எஃகு உற்பத்தி செய்ய டாடா கம்பனியார் திட்டம் செய்துள்ளனர்.

தனியார் தொழில் தேச நலனுக்காகப் பாடுபடுகிறது.

**தி டாடா அயரன் & ஸ்டீல் கம்பெனி லிட்**

TN-573

# ரகுபதி  ராகவ

[அகமதாபாத் நவஜீவன் காரியாலயத்தினர் பிரசுரம் செய்திருக்கும் 'சத்தியமே தெய்வம்' என்னும் காந்தி வசன மஞ்சரியிலிருந்து ராஜாஜி எடுத்து எழுதியது]

2

*நான் உண்மையைக் கண்டு விட்டவன் அல்ல. மெய்ப் பொருளை நாடும் மக்களில் நான் ஒருவன். அவ்வளவுதான். ஒரு பெருமை நான் சொல்லிக் கொள்ளலாம், உண்மையைக் காண்பதற்கு வழி கண்டேன்—அவ்வளவே. மெய்ப் பொருளைக் காணுவதற்கு இடையறாமல் முயன்று வருகிறேனாலும் நாடும் பெரும் பொருளை இன்னம் காணவில்லை. ஒருவன் மெய்ப் பொருளை முழுதும் கண்டு விட்டால் அவன் வீடு பெற்றவனே ஆவான்; வாழ்க்கையின் பலனை அடைந்துவிட்டு முக்தி கண்டவன் ஆவான்.

என்னுடைய குறைகளை நான் உணராமல் இல்லை. நன்றாகவே உணர்வேன். உணர்ந்து அதற்காக வருத்தமும் படுகிறேன். ஒருவன் தன் குறைகளைக் கண்டு கொண்டு விட்டால் அதுவே ஒரு பெரும் பாக்கியம். எனக்கு ஏதேனும் விசேஷ சக்தி இருப்பின் அதன் இரகசியம் என்னவென்றால் என் குறைகளை நான் நன்றாக அறிந்திருப்பதே ஆகும்.

மற்றவர்களுடைய குறைகளை யாருமே காண்பார்கள். தன்னுடைய குற்றம் குறைகளை ஒருவன் கண்டு கொள்வது அரிது. அதற்கு வேண்டிய ஞானம் எளிதில் கிடைக்காது. அந்த அறிவைப் பெற்றிருப்பதே என்னுடைய பாக்கியம்.

• • •

எனக்குப் பூரண அறிவு இல்லை என்பதற்கு என்னுடைய துயரமே போதும் சாட்சி. நான் சம்பூரண ஞானம் அடைந்தவனாக இருந்தால் நான் காணும் துயரம் என் உள்ளத்தைக் கலங்கச் செய்யாது. ஞானியானவன் துயரங்களைக் காண்பான். ஆனால் அவற்றைக் கண்டு கலக்கம் அடையமாட்டான். துயரத்துக்கு மருந்து என்ன என்பதைச் சொல்வான்.

பூரண ஞானம் பெற்று நான் ஒரு சித்தனாக இருந்திருப்பேனாகில், நான் கண்ட உண்மையும் சொல்லும் மருந்தும் தாமாகவே பிறரை வசப்படுத்தியிருக்கும். நான் ஒன்றும் அதற்காகச் செய்ய வேண்டியிருக்காது. நான் சொல்லிக் காட்டும் உண்மையே அதை உணரும் சக்தியைப் பிறருக்குத் தந்திருக்கும். நான் கண்டு விட்டதைப் பிறருக்கு எடுத்துக் காட்டி அறிவு ஊட்ட இவ்வளவு வருத்தப்பட வேண்டியிராது. என் அறிவானது குறையும் குற்றமும் கலந்த அறிவு. பூரண அறிவு அல்ல. அதனாலேதான் நான் கண்டதைப் பிறருக்கு உணர்த்தும் சக்தி எனக்குப் போதிய அளவில் உண்டாகவில்லை. நான் கண்டு என் மனத்தில் உறுதியாக நிற்பதைப் பிறர் காணும்படி செய்வது மிகவும் சிரமமாக இருக்கிறது. நான் சொல்லுவது பிறருக்கு எளிதில் விளங்குவதில்லை. பல சமயம் சொல்லுவதெல்லாம் வீணாகிறது. என் முயற்சி பலன் தராமலும் போகிறது. இதற்கெல்லாம் காரணம் என்னுடைய கட்சியிலுள்ள முறையே.

சம்பூரண ஞானியாகாத நான் என்னுடைய ஞானக் குறைவினால்

ராஜாஜி

* இந்தக் கட்டுரைகளில் 'நான்' என்னும் இடங்கள் காந்திஜியைக் குறிக்கும்.

நாட்டிலுள்ள வறுமையைக் கண்டு வருத்தம் அடைகிறேன். பூரண ஞானம் அடைந்தவனுக்குத் துயரம் என்பது இல்லை. முற்றிய அறிவு பெறாத ஒருவன் துயரத்தில் மூழ்கித் தத்தளிப்பவர்களைக் கண்டு அநுதாபம் இல்லாமல் இருந்தால் அவன் மிருகமே ஆவான் அல்லவா? நாட்டில் நாம் காணும் கஷ்டங்கள் இருக்க வேண்டியதில்லை. அவற்றைத் தவிர்த்துக் கொள்ளாமல் இருக்கிறார்களே என்று துயரம் உண்டாகிறது. ஆண்டவன் ஆளும் உலகத்தில் இவ்வித வறுமை ஏன்? மக்கள் ஊமைகளாக, எலும்பும் தோலுமாக ஏன் இருக்க வேண்டும்? — இவ்வாறு எண்ணி நான் துக்கத்தில் மூழ்கி நிற்கிறேன்.

[யங் இந்தியா 17—11—21.]

வட்ட மேஜை

# தீபாவளி மலர்

"மன்மத" ஆண்டு கல்கி "தீபாவளி மலர்", வருஷத்தின் பெயருக்கேற்ப, காதல் தெய்வங்களான ரதி மன்மதன் பவனி வரும் கோலாகலக் காட்சியுடன் மலரின் காட்சிகள் ஆரம்பமாகி, 'மன்மத மலர்' என்ற கதையுடன் கொட்டுமேளத்துடன் "ஜாம் ஜாம்" என்று இனிது முடிவடைகின்றது.

மலரின் அட்டைப் படத்தில், ஒரு கன்னி, முதற் கடவுளான விநாயகர் சிலைக்கு முன் "பக்திச் சுடர்" விளக்கை ஏற்றுவதாக வெகு அழகாகச் சித்திரிக்கப்பட்டிருக்கின்றது. இந்த உண்மையை, "ஆலமரத்து அடியிலே" என்ற ராஜாஜி அவர்களின் கருத்து ஆழம் நிரம்பிய கட்டுரையும், குன்றக்குடி அடிகள் அவர்களின் "சமய மறுமலர்ச்சி" என்ற அரிய கட்டுரையும் நன்கு எடுத்துரைக்கின்றன.

"ஆடும் தெய்வ"மாகிய நடராஜரின் திரு உருவக் காட்சி 'மணியம்' அவர்களின் கைத்திறமையுடன் நன்கு சோபிக்கின்றது. சீதா லக்ஷ்மண சமேதராய் வீற்றிருக்கும் ஸ்ரீராமரின் திரு உருவக் காட்சி, நமது பழைய கால நாகரிகத்துக்கும், பக்திக்கும் பண்பாட்டுக்கும் ஒரு எடுத்துக் காட்டாக விளங்குகின்றது.

வடநாட்டு சைத்ரிகர் 'கனுதேசாய்' அவர்களின் கைத்திறமை மலரில் பல இடங்களில் இடம் பெறுகின்றது.

திருக்குறளின் கருத்துக்கு எடுத்துக் காட்டாக – லட்சிய புருஷர்களாக – நம் நாட்டுப் பிரபல தலைவர்களைப் பொறுக்கி எடுத்துச் சேர்த்திருப்பது ஒரு புதிய முயற்சி.

"சோமு" அவர்களின் சிருஷ்டி ஒரு அபூர்வப் படைப்பு. அதிலே பழைமையும், புதுமையும் சந்திக்கின்றன. இம்மாதிரி நமது பழைய கலாசாரத்தையும், நாகரிகம், பண்பாடு, மேம்பாடு போன்ற பல பகுதிகளையும் வெளிப்படுத்தும் கதைகள் பல மலரில் இடம் பெற்றிருக்கின்றன.

திருவாரூர்
21—11—55

கோ. ராமமூர்த்தி

★

மலரின் விலை குறைவாக இருந்தாலும் விஷயங்கள் அனேகம். எல்லா அம்சங்களும் பொறுக்கி எடுத்தாற் போலுள்ளன. இந்த அரிய மலரை வெளியிட நீங்கள் என்ன சிரமப் பட்டிருப்பீர்கள்! கல்கி மலர் வெகு ஜோர். வாழ்க 'கல்கி'! வளர்க 'கல்கி' புகழ்!

சென்னை - 10
14—11—55

ந. ஜயராமன்

'ஆலமரத்தின் அடியிலே' என்ற ராஜாஜியின் அற்புதமான கட்டுரையும், டி. கே. சி. அவர்களின் கபிலர் நாடகமும் படித்துப் படித்து இன்பமும் பயனும் அடைய வேண்டிய இலக்கியங்கள். இந்த இரண்டு கட்டுரைகளையும் வெளியிடுவதற்காகவே ஒரு மலரை வெளியிடலாம் என்று சொல்லுவேன்.

காரைக்குடி
16-11-55

மூர்த்தி

★

தீபாவளி மலரின் நறுமணத்தையும் இதழ் தோறும் பிரகாசிக்கிற அழகையும் அனுபவித்துக் கொண்டிருக்கிறேன்.

சங்கீத மும்மூர்த்திகளின் இனிய நாதத்தை அனுபவித்துக் கொண்டே மலரை மேலும் புரட்டினால், 'மன்மத மலர்' காட்சி தருகிறது; அழகான வார்ப்பு. வெண்கல நாதம் என்று ஒன்று உண்டு. ஓசையில்லாத சிலையில் உச்சியிலிருந்து உள்ளங் கால்வரை நாதம் ஒரு சீராகப் பேசும். "மன்மத மலரும்" அப்படி வார்த்த படைப்பு. நிரந்தர உணர்ச்சிகளை வைத்து அனுயாசமாக விளையாடியிருக்கிறதைக் கண்டேன். சிறு கதையில் எப்படி 'Back ground Music' அமைப்பது என்பது, அதிசயிக்கத் தக்க முறையில் இந்தக் கதையில் வெளியாகியிருக்கிறது. 247-ம் பக்கத்தில் "அன்றிரவு மூன்று ஜாமம் இருக்கும்" என்பதிலிருந்து "வேகமாக மறைந்து விட்டான் அவன்" என்ற 'Fade Out' வரை அமைந்துள்ள பகுதியில், உணர்ச்சியைத் தூண்டும் இசை யொன்று ஒலிக்கிறது. கதைச் சம்பவத்தை இதயத்திலே அழுத்தமாகப் பொறிக்கின்றது. உள்ளம் சிலிர்க்கும் தமிழ். புதுமையான உத்தி.

திருச்சி
17—11—55

கந்தையா

★

வர்ணச் சித்திரங்கள் நிறைந்த, மனத்துக்குச் சாந்தியும், சந்துஷ்டியும் அளிக்கும் தென்னாட்டின் தியாக சிகரமாக விளங்கும் திரு ராஜாஜியின் கட்டுரையும், குன்றக்குடி அடிகளின் கட்டுரையும், படித்துச் சுவைக்கத் தகுந்த சோமு அவர்களின் கதையும், மற்றவையும் இவ் வருட மலர் ஆர்ட் காகிதத்தில் இல்லையே என்ற எண்ணத்தை மறக்கச் செய்து விடுகின்றன. இவ் வருடத்திய மலரைப் பேராசிரியர் கல்கி அவர்களின் ஞாபகச் சின்னமாகக் கொள்வது பிழையாகாது.

சென்னை - 6
14—11—55

கி. நாகராசன்




ஸ்வஸ்திக் மருந்தாக காஸ்டர் ஆயில் ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிமிடெட்.

SHILPI-SOM-264.TAM

# நறுமணம் விரும்புகிறவர்களுக்கு...

மைசூர் சந்தன சோப்பினால் ஸ்நானம் செய்வதே ஓர் அலாதியான இன்ப அனுபவம். அதன் மிருதுவான நுரை சருமத் துவாரங்களிலும் ஊடேறி சுத்தம் செய்து, சருமத்தை மழமழப்பாகவும் பளபளப்பாகவும் பட்டுப்போல் செய்கிறது. அதன் இன்பமூட்டும் ரம்மியமான மணம் உங்கள் தேக முழுவதும் பல மணி நேரம் நீடித்துப் பரிமளிக்கும்.

## மைசூர் சந்தன சோப்




## கவர்ன்மெண்ட் சோப் பேக்டரி, பெங்களூர்

இந்திய சோப், வாசனைப் பொருள்கள் உற்பத்தியாளர் சங்கத்தின் அங்கத்தினர்

# வட இந்திய யாத்திரை 18



ஆயிரத்துத் தொள்ளாயிரத்து ஐம்பத்தைந்தாம் ஆண்டு. ஆகஸ்டு மாதம். இருபத்தைந்தாம் தேதி.

"கொக்கரக்கோ" என்று கோழி கூவிற்று. காலை வேளையின் கலகலப்போடு கலந்து கொண்டு வானத்தைப் பார்த்த வண்ணம் மீண்டும் மீண்டும் கூவிற்று. கீழ்வானம் சிவந்தது. வழக்கத்தைவிட பூர்ணப் பொலிவோடு சூரியன் ஜகஜ்ஜோதியாக உதயமானான்.

அன்றைய தினம் வீரத்தின் விளைநிலமான மத்திய பாரதத்திலே யாருமே கண்டிராத ஒரு அதிசயக் காட்சி!

சென்ற முப்பது ஆண்டுகளாக அவர்கள் யார் பெயரைக் கேட்டால் நடுநடுங்கிக்கொண்டிருந்தார்களோ அந்த மனிதனின் உயிரற்ற உடலை மத்திய பாரதத்தின் வட பகுதியில் உள்ள பிந்த் நகருக்கு ஊர்வலமாக எடுத்துக் கொண்டு வந்தார்கள்.

வெள்ளைக்காரன் தயவால் அந்த நாளில் பொம்மை ராஜாக்களாக இருந்த சில சுயநலமிகள் வளர்த்து வந்த கொள்ளைக்காரன் மான்சிங்கின் உயிரற்ற உடலைச் சுற்றி ஏராளமான மக்கள் கூடியிருந்தனர்.

போலீஸாரின் வீரத்தைப் பாராட்டி வாழ்த்துக் கூறிக்கொண்டிருந்தனர் மக்கள்.

"முப்பது ஆண்டுகள் கொள்ளைக்காரனாக வாழ்க்கை நடத்திய மான்சிங்கைச் சுட்டுக் கொன்ற போலீஸாரின் தீரம் வாழ்க!"

"தன்னுடைய கையினாலேயே நூற்று எண்பது பேரை, ஒரு குற்றமும் செய்யாத மக்களைக் கொலை செய்த கொலைகாரனைக் கொன்ற போலீஸாரின் வீரம் வாழ்க!"

"சுதந்திர சர்க்கார் வாழ்க!" — என்ற உணர்ச்சி நிறைந்த வாழ்த்தொலிகள் விண்ணதிர ஒலித்துக் கொண்டே இருந்தன.

அன்றுதான் சுதந்திரம் பெற்றது போல மக்கள் குதூகலத்துடன் கூட்டம் கூட்டமாகத் தங்களை மறந்து பரவசத்துடன் ஓடினார்கள். ஒருவரை ஒருவர் கட்டிப் பிடித்துக் கொண்டு ஆனந்தக் கூத்தாடினார்கள்.

மத்திய பாரதத்தின் பாதுகாப்பு மந்திரி நரசிங்கராவ் தீக்ஷித் இந்தச் செய்தியை இந்திய சர்க்கார் பாதுகாப்பு மந்திரி பண்டித பந்த் அவர்களுக்கு உடனே டெலிபோன் மூலம் தெரிவித்தார்.

"மான்சிங் சுடப்பட்டான்" என்று கேட்டவுடன் பண்டித பந்த் துள்ளிக் குதித்தார். "வட இந்தியாவில் அமைதி நிலவும். வட இந்திய கிராமத்து மக்கள் ஆனந்தப் படுவார்கள்" என்று அறிக்கை வெளியிட்டார்.

இவ்வாறு மத்தியபாரதம், மத்தியபிரதேசம், உத்தரப் பிரதேசம், விந்திய பிரதேசம், ஹிமாசலப் பிரதேசம் எல்லாம் குதூகலப்பட்டன.

எதற்காக!

எழுபது வயது நிரம்பிய அந்த வயோதிகக் கொள்ளைக்காரன் மான்சிங் கொலை செய்யப் பட்டதற்காகத்தான்!

ஒரு கிழவனின் கொலைச் செய்தியைக் கேட்டு வட இந்தியாவே குதூகலப்படும்படி கொடிய வாழ்க்கை நடத்தி வந்த அந்த மான்சிங் யார்! அவன் ஏன் கொலைகாரனாகவும், கொள்ளைக்காரனாகவும் மாறினான்!

* * *

ஆக்ராவில் உள்ள பாக் என்ற தாலூக்காவைச் சேர்ந்த ஒரு கிராமம் ராடோர் கேரா. சம்பல் நதிக் கரையில் அமைந்துள்ள அழகான கிராமம். அந்தக் கிராமத்தில் பிராமணர்களும், ரஜபுத்திரர்களும் வாழ்ந்து வந்தனர். ரஜபுத்திர வகுப்பைச் சேர்ந்த ஒரு ஜமீன்தார் குடும்பத்தில் எழுபது ஆண்டுகளுக்கு முன் மான்சிங் பிறந்தான். மான்சிங்கின் தந்தை மிகுந்த தெய்வ பக்தி உள்ளவர். தம்முடைய குமாரன் மான்சிங்கும் தெய்வ பக்தி நிறைந்தவனாக இருக்க வேண்டும் என்று அவனுக்கு ராமாயணக் கதையைப்பற்றியும், ராமபிரானின் புனித வாழ்க்கையைப்பற்றியும் போதித்தார். மான்சிங்கும் தந்தை மனம் குளிர ராம பிரானின் தீரம் நிறைந்த கதை

# கொள்ளைக்காரன் மான்சிங்!



யைத் தெரிந்து கொண்டான். காலையில் எழுந்தவுடன் கடவுள் பூஜை செய்துவிட்டுத்தான் மற்றக் காரியங்களைப் பார்ப்பான். குழந்தை மான்சிங் அறிவு நிறைந்த வாலிபனானான். கேரா கிராமத்தில் ஒழுக்கம் நிறைந்த உத்தம வாலிபனாக எல்லாரும் போற்றும்படி திகழ்ந்து வந்தான்.

மான்சிங் குடும்பத்தார் உழைத்துப் பாடுபட்டுப் பிழைத்து வந்தனர். அவர்கள் அநியாயத்தை அடிக்கடி எதிர்த்து வந்தனர். அதனால் அவர்கள் குடும்பத்துக்குக் கிராமத்தில் நல்ல செல்வாக்கு இருந்தது. அத்துடன் மான்சிங்கின் நேர்மையும் நியாயமும் வேறு கிராம மக்களைக் கவர்ந்து விட்டன.

மான்சிங்கின் அமைதி நிரம்பிய வாழ்க்கையில் விதி குறுக்கிட்டது! விதி அவன் அமைதியைப் பார்த்துச் சிரிக்க ஆரம்பித்து விட்டது!

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து இருபத்து மூன்றாம் ஆண்டு மான்சிங் குடும்பத்துக்கும் துல்பிராம் என்ற பிராமணக் குடும்பத்துக்கும் சச்சரவு ஏற்பட்டது. சச்சரவு சண்டையில் முடிந்தது. இரு குடும்பத்தாரும் நீதி மன்றத்துக்குச் சென்றனர். துல்பிராம் தன் பக்கம் நியாயம்

மணியம்

பகீரதன்



கொள்ளைக்காரன் மான்சிங்

இல்லை என்பதைத் தெரிந்துகொண்டு வஞ்சகம் செய்ய ஆரம்பித்து விட்டான். சர்க்கார் அதிகாரிகளுக்கு லஞ்சம் கொடுத்து அவர்களைத் தன் பக்கம் சாதகமாக இருக்கும்படி சரி செய்து விட்டான்.

வெற்றி பெற்ற துல்பிராம் கிராமத்தில் நிமிர்ந்து நடக்க ஆரம்பித்தான்.

தன் பக்கம் நியாயம் இருந்தும் தனக்கு நியாயம் வழங்க முடியாதபடி செய்த துல்பிராம் மீது மான்சிங்குக்குப் பொல்லாத கோபம் வந்து விட்டது. தனக்கு ஏற்பட்ட அநீதியை அவனால் தாங்க முடியவில்லை.

**வ**ழக்கம் போல அன்று மான்சிங் தன்னுடைய அறையில் பூஜை செய்து கொண்டிருந்தான். என்றுமில்லாத அதிசயமாக அன்று அவன் பூஜை செய்து கொண்டிருந்த அறையிலிருந்து பயங்கரக் குரலோசை வந்தது. மான்சிங்கின் வீட்டிலிருந்த எல்லாரும் திடுக்கிட்டுப் போய் விட்டனர்.

"துல்பிராமின் குடும்பத்தை வேரோடு அழிப்பேன். என்னை மோசம் செய்தவனை உயிரோடு நடமாட விடமாட்டேன்!"

"இது என்ன அதிசயம்! நியாயவானான மான்சிங்கா இப்படிச் சபதம் செய்கிறான்! மிருந்த உத்தம குணம் படைத்தவனாயிற்றே!" என்று ஒருவர் முகத்தை ஒருவர் ஆச்சரியத்துடன் பார்த்துக் கொண்டனர்.

மீண்டும் அதே குரல்:

"துல்பிராமின் குடும்பத்தை அழிப்பேன். என்னை மோசம் செய்தவனை உயிரோடு நடமாட விடமாட்டேன்!"

அவ்வளவுதான். மான்சிங்கின் வீட்டில் இருந்தவர்களிடையே ஒரு பரபரப்பு ஏற்பட்டது. பூஜை அறையிலிருந்து மான்சிங் வெளியில் வந்தான். குமுறிக் கொண்டிருந்த எரிமலை வெடித்ததுபோல அவன் கண்கள் கனலைக் கக்கின. அவன் நியாய உள்ளத்தில் ஆத்திரம் பொங்கிக் கொண்டிருந்தது. அவன் இதயம் இரும்பாகி விட்டது. மான்சிங் கொடிய அரக்கனாகி விட்டான்.

ஏற்கனவே அவன் மீது கிராம மக்கள் கொண்டிருந்த அன்பு, மரியாதை அத்தனையையும் தனக்குச் சாதகமாக்கிக் கொண்டான். கள்ளங் கபடமற்ற கிராம மக்கள் அவன் உணர்ச்சியூட்டும் உபதேசங்களுக்கு அடிபணிய ஆரம்பித்து விட்டனர். அமைதியாக இருந்த ராடோர்கேரா கிராமத்தின் அமைதி குலைந்தது. சாந்தமாக இருந்த ரஜபுத்ர குடும்பத்தினர்களுக்கு வெறி பிடித்து விட்டது. அந்தக் கிராமம் போர்க்களமாக மாறிவிட்டது.

ஏர் பிடித்த கைகள் கொடுவாளைப் பிடிக்க ஆரம்பித்தன. உளி பிடித்த தச்சன் துப்பாக்கி ஏந்த ஆரம்பித்தான். "மான்சிங்குக்கு வந்த கேடு நமக்கு வர எத்தனை நாளாகும்!" என்று கிராம மக்கள் அத்தனை பேரும் கொள்ளைக்காரர்களாக மாறி விட்டனர்.

அப்புறம் கொலை கொள்ளைகளுக்குக் கேட்கவும் வேண்டுமா! மான்சிங்கின் தலைமையில் ஒரு பெரிய கொள்ளைக் கூட்டமே தயாராகி விட்டது. வேலை வெட்டி இல்லாத கிராமத்து மக்கள் பிழைப்புக்கு என்ன செய்வார்கள்! கொள்ளை அடிப்பதையே தொழிலாகக் கொள்ள ஆரம்பித்து விட்டனர்.

* * *

**ஆ**யிரத்துத் தொள்ளாயிரத்து நாற்பத்தோராம் ஆண்டு. மான்சிங் தான் செய்த சபதத்தை நிறைவேற்றி விட்டான். துல்பிராமைச் சுட்டுக் கொன்று விட்டான்.

துல்பிராமைச் சுட்டுக் கொன்றதுடன் வெறி பிடித்த அவன் இதய தாபம் தணியவில்லை. துல்பிராமைச் சேர்ந்தவர்களை யெல்லாம் கொலை செய்யத் துணிந்து விட்டான்.

நாற்பத்தைந்து பேர் உள்ள துல்பிராமின் உற்றார் உறவினர் முதலியவர்களை ஒவ்வொருவராகக் கொலை செய்ய ஆரம்பித்துவிட்டான். நாற்பத்து மூன்று பேரைக் கொன்று குவித்தான். அவர்கள் எங்கு சென்றாலும் விடாமல் தேடிப் பிடித்துக் கொன்று தீர்த்தான்.

மான் சிங்கின் கொள்ளை கொலைக்கு அவன் கிராமத்து மக்கள் அவனுக்குக் கை கொடுத்தது போல அங்குள்ள இயற்கை அமைப்பும் அவனுக்குப் பெரிதும் உதவி புரிந்தது.

குவாலியர் சமஸ்தானத்தை ஒட்டிய பிரதேசங்கள்தான் மான்சிங்கின் சாம்ராஜ்யம். அங்கெல்லாம் கண்ணுக்கெட்டிய தூரம் ஒரே காடுகள்தான். குட்டை குட்டையான மூட்கள் நிறைந்த மரம் அடர்ந்த காடுகள். இந்தக் காட்டுக்குள் புலி, சிறுத்தை, சிங்கம் போன்ற கொடிய மிருகங்கள் வேறு வசித்தன. நடுநடுவே ரஜபுத்திரர்களின் தாகூர் கோட்டைகள். அங்கு வாழ்ந்து வந்த ஜமீன்தார்களில் பகலில் ஜமீன்தார்களாகக் காட்சி யளித்து இரவில் கொள்ளைக் கூட்டத்தினராக மாறுகிறவர்களும் இருந்தனர்.

இப்படிப்பட்ட ஜமீன்தார்கள் திருக்கூட்டம் மான்சிங்குக்கு உதவி புரிந்தது. மான்சிங்கோ ஜமீன்தாராக வாழாமல் உண்மையாகவே கொள்ளைக்காரனாக வாழ்ந்து வந்தான். அவன் வசித்து வந்த கிராமத்தைச் சுற்றிச் சுமார் ஆயிரத்து ஐந்நூறு மைல் சுற்றளவில் மான்சிங்கின் கொடி உயரப் பறந்து கொண்டிருந்தது.

மான்சிங்கின் கொள்ளைக் கூட்டம் பணம் படைத்த பிரபுக்களின் வீட்டில் உள்ளவர்களைப் பிடித்துக் கொண்டு வந்து விடும். பிறகு அவர்களுக்குக் கடிதம் போகும்.

# ஹா!
# ஆபரணப் பரிசுடன் பினாகா





என் இதயத்தைக் கூட
மிக்க குதூகலத்துடன்
அளிப்பேன் ஆனால்...

பிரெட்டியே என் பினாகா குழாய் மட்டும் கொடுக்க முடியாது.

ஒரு சிறுவன் தான் மனிதனாகும் முன் தனக்கு வெண்மையான, பலமான பற்கள் வேண்டும் என்பதை உணர வேண்டும் என்பது உனக்குத் தெரிந்தது தான். பினாகா மிகவும் மேன்மையானது. அதுவுமன்றி அது எரியும்படியும், கொப்பளிக்கும்படியும், சினப்பும்படியும் செய்யாமல் ஒவ்வொரு பிளவையும் பல் வியாதிகள் வராமல் தடுத்து சுத்தம் செய்கிறது. மேலும் சுத்தமான கனி ருசியுடன் கூடிய பினாகா என் வாயை நன்றாக இனிக்கச் செய்கிறது.

மக்கள் அதிகமான பினாகாவை உபயோகிப்பதை ஏவுவதற்கு சிபா அவர்கள் ஆதரவுடன் ஒரு பரிசளிக்க சங்கடப்படுவது மிகவும் அதிசயமாகவுள்ளது. அதே சமயத்தில் சிறு பரிசளிப்பு ஆலோசனை உண்மையாகவே மிகச் சிறந்தது.

நான் முன் கூறியது போல் பிரெட்டியே என் இதயத்தை அளிப்பேன். ஆனால் உனக்கு ஆகாய விமானமோ அல்லது நங்கூரமோ சிறு பரிசாகக் கிடைத்தால் எனது இடுப்புப் பட்டிகையிலோ அல்லது சாவிச் சங்கிலியிலோ மாட்டிக் கொள்வதற்கு அளிக்க வேண்டும். அதுவும் உங்கள் தாயார் முதலிலேயே தனக்கென்று எடுத்துக் கொள்ளாமலிருந்தால்தான்

இலவசம்-ஒவ்வொரு 'பினாகா' பெட்டியிலும் ஒரு ''எவர் ப்ரைட் சார்ம்'' அடக்கம் செய்யப்பட்டுள்ளது.

## 'ஸிபா'வின் விசேஷ குணம் பொருந்தியுள்ள பற்பசை






# சுதரன் ரோட்வேஸ் லிட்.

( டி. வி. எஸ். ஸ்தாபனம் )

கால அட்டவணைப்படி
இயங்கும்
**பஸ்**









இந்தியாவிலேயே
நலிசிறந்து
பணியாற்றி விளங்கும்
"கால அட்டவணை"
## லாரி
எமது ஒன்றே

*

வருடந்தோறும்
1½ கோடி மைல்கள்
குறிப்பிட்ட நேரத்தில்
செல்வது எமது சிறப்பு

# சுதரன் ரோட்வேஸ்
லிமிடெட்
(ரஸ்தா போக்குவரத்து எமது பணி)
மதுரை

"நாங்கள் இந்த மனிதரைப் பிடித்து வைத்திருக்கிறோம். இந்தத் தேதிக்குள் ஒரு லட்சம் ரூபாயுடன் இந்த இடத்தில் சந்தித்தால் பணத்தைப் பெற்றுக் கொண்டு தங்கள் மனிதரைத் தங்களிடம் ஒப்படைத்து விடுவோம். இல்லையேல் நாங்கள் பிடித்து வைத்திருக்கும் மனிதனைக் கொன்று அவன் உயிரற்ற உடலை உங்களுக்கு அனுப்பி வைப்போம்" என்று அந்தக் கடிதத்தில் எழுதியிருக்கும்.

கடிதப்படி பணத்தைக் கொடுத்து விட்டுத் தங்கள் மனிதர்களை மீட்டுக் கொண்டு செல்லுவார்கள். அப்படி அவர்கள் மீட்டுக் கொண்டு செல்லா விட்டால் தாங்கள் பிடித்து வைத்த மனிதனைச் சித்திரவதை செய்து அவன் மூலமாக உளவு தெரிந்து கொண்டு கொள்ளைக்காரன் மான்சிங் தன் கூட்டத்துடன் கொள்ளையடிக்கச் சென்று விடுவான்.

போலீஸ் உடையில் சென்று ஜமீன்தார்களின் கல்யாண வீட்டைச் சூறையிடுவார்கள். கிராமங்களுக்கு முன் கூட்டியே தெரிவித்து விட்டு அங்கு சென்று கொள்ளையடிப்பார்கள். அப்படிக் கொள்ளையடிக்கும்போது அந்த வட்டாரத்தில் உஷாராயிருக்கும் போலீஸ் ஸ்டேஷனைச் சூறையாடி விடுவார்கள். அங்குள்ள ஆயுதங்களையெல்லாம் கைப்பற்றிக் கொண்டு போய் விடுவார்கள். தீவட்டிக் கொள்ளையிலிருந்து நவீன முறையில் அமெரிக்கச் சினிமாப் படங்களில் காட்டும் நாகரிகக் கொள்ளை வரையில் அவர்கள் பல முறைகளைக் கையாண்டு கொள்ளையடித்து வந்தனர்.

மான்சிங்கின் கொள்ளைக் கூட்டத்தினர் இவ்வாறு கற்பனை செய்து பார்க்க முடியாதபடி கொலையும் கொள்ளையும் அடித்து வந்தாலும் கிராமத்து மக்கள் அவன் மீது பக்தியையும் மரியாதையையும் வைத்து வந்தனர். அதைப் போலவே மான்சிங்கின் கொள்ளைக் கூட்டத்தைச் சேர்ந்த ஒவ்வொருவரும் அவனிடம் அளவற்ற பக்தி கொண்டிருந்தனர்.

பஞ்சமா பாதகங்களை அஞ்சாமல் செய்து வந்த மான்சிங் புலால் அருந்த மாட்டான். காலையில் எழுந்தவுடன் கடவுளை வணங்காமல் காரியம் செய்ய மாட்டான். தனக்கு உதவியாக இருந்தவர்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்து அவர்களைக் காப்பாற்றுவான். அப்படி அவனிடம் உதவி பெற்று அவனுடைய பயங்கரக் கொலை கொள்ளைகளுக்கு உதவியாக இருக்கும்படி அங்குள்ளோரது சமூக வாழ்க்கையும் அமைந்திருந்தது.

வட இந்தியாவில் உள்ள வரதட்சணைக் கொடுமையின் காலில் கட்டி அடிக்க முடியாது தமிழ்நாட்டில் உள்ள வரதட்சணைக் கொடுமை. வரதட்சணைக் கொடுமைதான் மான்சிங் போன்ற கொள்ளைக்காரனை வாழவைத்தது. நூற்றுக் கணக்கான மக்களைக் கொலை செய்யும்படி வைத்தது. பல கிராமங்களைக் கொள்ளையடிக்க வைத்தது. வட இந்திய கிராமங்களை வளர விடாமலே செய்தது என்று சொன்னாலும் மிகையாகாது.

பெண்ணைப் பெற்றவர்களுக்கெல்லாம் தர்மப் பிரபு மான்சிங்தான். மான்சிங்கிடம் "என் பெண்ணுக்குக் கல்யாணம் ஆகவேண்டுமே! வரதட்சணைக்குப் பணம் இல்லையே!" என்று முறையிட்டுக் கொண்டால் போதும். "எல்லா ஏற்பாடுகளையும் முடித்துக் கொள்ளுங்கள், பணத்தை நான் கொடுத்து விடுகிறேன்" என்று சொல்லி உதவி புரிவான்.

இவ்வாறு அவன் உதவியைப் பெற்றவர்கள் எத்தனை எத்தனையோ பேர். அவர்கள் எல்லாம் அவனைப் போலீசுக்குக் காட்டிக் கொடுக்காமல் காப்பாற்றி வந்தனர். அதாவது வரதட்சணைக் கொடுமை மான்சிங் போன்ற கொள்ளைக்காரனை வளர்த்துப் பாதுகாத்து வந்தது.

இதனால் கொள்ளைக்காரன் மான்சிங் கிராம மக்களால், தர்மப் பிரபு என்றும், கடவுள் பக்தன் என்றும், புகழ்பெற்ற நல்லவன் என்றும் போற்றிப் புகழப்பட்டான்.

அவன் எல்லைக்குள் இருந்த ஐந்து ராஜ்ய சர்க்கார்கள் "மான்சிங்கைப் பிடித்துக் கொடுப்பவர்களுக்குப் பதினையாயிரம் ரூபாய் பரிசு வழங்கப்படும்" என்று பறையறைந்தும் பலன் இல்லாமல் போய் விட்டது.

எத்தனையோ போலீஸ் கட்டுக் காவலையும் கடந்து, எல்லார் கண்ணிலும் மண்ணைத் தூவி விட்டு மாயாஜாலம் புரிந்து வந்தான் மான்சிங்.

கிராமங்களில் நடக்கும் கல்யாணங்களில் பகிரங்கமாகவே கலந்து கொள்வான். பொதுத் தேர்தல்களில் தன்னுடைய ஆளை ஆதரிக்கும்படி வேண்டுகோள் விடுவான். அவன் தேர்ந்தெடுத்த ஆளை முறியடித்து வேறு யாராவது வெற்றி பெற்று விட்டால், வெற்றி பெற்றவர் உயிருடன் நடமாட முடியாது.

இப்படி மான்சிங் தனிக்காட்டு ராஜாவாக, சர்வாதிகாரியாக இருந்து வந்தான்.

காலம் மாறியது.

* * *

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து நாற்பத்திரண்டாம் ஆண்டு மான்சிங் தன்னுடைய தலைநகரை சம்பல் நதி தீரத்தை ஒட்டியுள்ள வேறொரு காட்டுக்கு மாற்றி விட்டான். தன் தலைநகரை மாற்றிக் கொண்டாலும் கிராமத்துக்கு அருகில்தான் இருந்து வந்தான்.

இந்தச் சமயத்தில் துல்பிராமின் ஆட்கள் மான்சிங்கின் வீட்டை இடித்து அதில் உள்ள கற்களைக் கொண்டு முந்நூறு கஜத்துக்கு அப்பால் வேறு ஒரு வீடு கட்ட ஆரம்பித்தார்கள். எத்தனையோ கட்டுக்காவலோடு தான் கட்டினார்கள். திடீரென்று மான்சிங் அங்கே தோன்றினான். துல்பிராமின் ஆட்களைக் கொன்று குவித்தான். துல்பிராமின் வீடுகளைக் கொளுத்தித் தரைமட்டமாக்கினான்.

சமீப காலத்தில் உத்தரப் பிரதேசத்து போலீஸ் மான்சிங்கின் வீட்டிலேயே முகாம் போட்டு விட்டது. அவர்கள் அந்த வீட்டின் அமைப்பைப் பார்த்துத் திகைத்து விட்டனர். பெரிய யுத்த நிபுணன் திட்டம் போட்டுக் கட்டியது போல அமைந்திருந்தது மான்சிங்கின் வீடு.

கிராமத்தின் மத்தியில் உயரமான இடத்தில் வீடு கட்டப்பட்டிருந்தது. ஆயுதம் வைக்கும் அறைகள், பணம் படைத்தவர்களைக் கொண்டு வந்து அடைத்து வைக்கும் அறைகள், தன் சொற்படிக் கேட்காதவர்களைக் கொலை செய்யும் அறை, இவை எல்லாவற்றையும் விட வீட்டிலேயே பதுங்கிக் கொண்டு அந்தக் கிராமத்தில் எந்தப் பக்கத்தில் இருந்து யார் வந்தாலும் சுடுவதற்கு வசதியான பல கள்ள வாசல்களுடன் கூடியதாக இருந்தது வீட்டின் அமைப்பு. அந்த வீட்டைப்

போலீஸார் பிடித்த போது வீட்டின் பெரும் பகுதி இடிக்கப்பட்டு இரண்டே இரண்டு அறைகள் மட்டும்தான் இருந்தன.

அசகாய சூரனை கொள்ளைக்காரன் மான் சிங் சுமார் ஆயிரம் கொள்ளைகள் அடித்திருக்கிறான். கணக்கற்ற கொலைகளைச் செய்திருக்கிறான். அவன் கொட்டத்தை அடக்கி, அவனையும் அவன் கூட்டத்தையும் ஒடுக்குவதற்காக உத்தரப்பிரதேசம், மத்திய பிரதேசம், மத்திய பாரதம், விந்திய பிரதேசம், இமாலயப் பிரதேசம் ஆகிய ஐந்து ராஜ்யங்களும் சேர்ந்து ஒரு கூட்டுப் போலீஸ் படையை அமைத்தன.

சுதந்திரம் பெற்ற பின் மக்கள் நலனில் அக்கறை கொண்ட சர்க்கார் 1952-ல் இது போன்ற கூட்டுப் போலீஸ் படை ஒன்றை அமைத்து மூன்று ஆண்டுகள் மான்சிங்கின் கொள்ளைக் கூட்டத்தினருடன் விடாப் பிடியாகப் போராடினார்கள்.

போலீஸாரோடு கிராம மக்கள் ஒத்துழைக்கவில்லை. பணம் படைத்த ஜமீன்தார்கள் பலர் மான்சிங்குக்கு உதவியாக இருந்தனர். சர்க்கார் அதிகாரிகளும், மந்திரிகளில் சிலரும்கூட கொள்ளைக் கூட்டத்தினருக்கு உதவி புரிந்து வந்தார்களாம். இந்தத் தடைகளையெல்லாம் மீறிப் போலீஸ் படை மான்சிங்கின் கொள்ளைக் கூட்டத்தை ஒழிக்கப் பாடுபட்டனர்.

சென்ற முப்பது ஆண்டுகளாக ஐந்து ராஜ்ய போலீஸாருக்கும் டிமிக்கிக் கொடுத்துக் கொண்டு மான்சிங் தன்னுடைய கொலையையும் கொள்ளையையும் விடாமல் தொடர்ந்து நடத்திக் கொண்டுதான் வந்தான்.

மான்ஸிங்கைப் பிடிப்பதற்குப் போலீஸார் எத்தனையோ வழிகளைக் கடைப்பிடித்தனர்.

மான்சிங் மிகுந்த தெய்வ பக்தி உள்ளவன். ஜான்ஸிக்கு அருகில் உள்ள மலையில் புகழ் பெற்ற சிவஸ்தலம் ஒன்று இருக்கிறது. ஒவ்வொரு சிவராத்திரியின் போதும் மான்சிங் அங்கு வருவதற்குத் தவறுவதில்லை. அங்கு வந்து சுவாமி தரிசனம் செய்து விட்டு பகவானுக்கு ஒரு பூஜை மணியையும் காணிக்கை செலுத்தி விட்டுப் போவான்.

இதைத் தெரிந்து கொண்ட போலீஸார் ஒரு சிவராத்திரியின் போது அந்த மலையைச் சூழ்ந்து கொண்டு காவல் காத்தனர். மான்சிங் அன்றைய தினம் வரவில்லை. போலீஸார் அவனை அங்கு வராமல் தடுத்து விட்டோம் என்று பெருமைப்பட்டனர்.

அந்தச் சமயத்தில்தான் போலீஸார் ஏமாந்தப்பட்டனர் என்ற செய்தி வந்தது. மான்சிங் வழக்கம்போலக் கோவிலுக்கு வந்து யாருக்கும் தெரியாமல் தன்னுடைய பூஜை மணியைப் பகவானுக்குக் காணிக்கையாக வைத்து விட்டுப் போயிருக்கிறான் என்று தெரிய வந்தது.

இவ்வாறு எத்தனை எத்தனையோ சாகஸங்களை அவன் புரிந்திருக்கிறான். அவன் வசித்து வந்த சுமார் ஆயிரத்து ஐந்நூறு மைல் சுற்றளவு பூமி மனித நடமாட்டமில்லாத வெறும் பாழ்வெளியாகி இருந்தது.

மான்சிங்கைப் போலவே வட இந்தியாவில் இன்னும் பல கொள்ளைக் கூட்டங்கள் இருக்கின்றன. உலகத்தில் இது போன்ற கொள்ளையும் கொலையும் நடைபெற்று வரும் இடம் இப்பொழுது வடஇந்தியாதான் என்று மிகுந்த வருத்தத்துடன் சொல்ல வேண்டியிருக்கிறது.

* * *

தேவிசிங் என்ற கொள்ளைக்காரன் தலைமையில் ஒரு திவட்டிக் கொள்ளைக் கூட்டம் நடமாடிக் கொண்டிருந்தது. அவன் தன் மகளுக்குச் சமீப காலத்தில் வெகு ஆடம்பரமாகக் கல்யாணம் செய்தான். கல்யாணச் செலவுக்கு இரண்டு கிராமங்களைக் கொள்ளையடித்தான். ஏராளமான பேரைக் கொலை செய்தான். தன் மகளுக்கு ஸ்ரீதனமாக சுமார் எண்பதினாயிரம் ரூபாய் மதிப்புள்ள பொன், பொருள், ரூபாய் எல்லாமாகக் கொடுத்தான்.

மகளின் திருமணத்துக்குப்பின் தேவிசிங் தன்னுடைய இரண்டாவது மகன் மூர்த்திசிங்குக்கு லாமாரா என்ற ஊரில் தாகூர் சாகிப்பின் மகளைத் திருமணம் செய்து வைத்தான். இதற்காக இருபது பணக்காரக் குடும்பத்தின் வீடுகளைக் கொள்ளையடித்தான்.

மான்சிங் தேவிசிங் கூட்டத்தைப் போல இன்னும் பல கொள்ளைக் கூட்டங்கள் வட இந்தியாவில் இருந்து வருகின்றன. அவர்களைப்பற்றிய விவரங்களை வெளியிடுவதற்கு பெப்சு சர்க்கார் தமது கெஜட்டில் ஒரு பக்கத்தை ஒதுக்கத்தான் வேண்டியிருக்கிறது!

இந்த நிலைமை வெகு விரைவில் மாறிவிடும். அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் சர்க்கார் செய்து வருகின்றனர்.

மயிர்க்கூச்செறியும் இச் சம்பவங்களை ஆக்ராவைச் சேர்ந்த ஒருவர் மிகுந்த உணர்ச்சியுடன் எனக்குச் சொன்னார். ரூபர் நகரில் சட்லெஜ் நதிக்கரையில் அமர்ந்து ஆக்ராவாசி சொன்ன இந்த நம்ப முடியாத கொள்ளைக் கூட்டத்தினரின் கதைகளைக் கேட்டதும் எனக்கு ரத்தமே உறைந்துவிடும்போலிருந்தது.

இன்றும் கொள்ளைக் கூட்டத்தினர் கூட்டம் கூட்டமாக வசித்து வருகிறார்கள் என்றும் அவர்களைப் பற்றி எல்லாம் சொல்லுவதற்கு இப்பொழுது நேரமில்லை என்றும் சொல்லி என்னிடமிருந்து விடைபெற்றுக் கொண்டார்.

* * *

மான்சிங்கும் அவன் குடும்பத்தினரும், கூட்டத்தினருமாக முப்பது வருஷங்கள் புரிந்து வந்த கொட்டத்தைச் சென்ற ஆகஸ்டு மாதம் சுதந்திர சர்க்கார் அடக்கி விட்டனர். மான்சிங்கின் குடும்பத்தினர் எல்லாரையுமே சுட்டுக் கொன்று விட்டனர். தேசம் சுதந்திரம் பெற்ற பலனில் பெரியபலன் வட இந்தியாவில் மான்சிங் போன்ற கொள்ளைக்காரர்களை ஒழித்ததுதான்.

மான்சிங் போன்ற கொள்ளைக் கூட்டத்தினரை ஒழிப்பதற்கு நமது தென் இந்திய போலீஸ் அதிகாரிகள் மிகுந்த உதவி செய்திருக்கிறார்கள் என்பதைக் கேட்டுத் தென் இந்தியர்கள் பெருமைப்படலாம்.

இது போன்ற கொள்ளைக் கூட்டத்தினர் வளராமல் இருப்பதற்காகச் சர்க்கார் தகுந்த ஏற்பாடுகள் செய்து வருகின்றனர். காடுகளை அழித்து வருகின்றனர்.

இவ்வாறு பயங்கரக் காட்டை அழித்து நிலம் திருத்தும் இடங்களையும் பஞ்சாபின் புதிய தலைநகரான புகழ்பெற்ற சண்டிகர் நகரையும் காண்போம், வாருங்கள். (தொடரும்)



# வீட்டுத்தலைவி தேர்ந்தெடுப்பது...

நேர்த்தியான பண்டங்கள் குறைந்த விலைகளில். அதனால் தான் எப்பொழுதும் 'ஸாதே' தயாரிப்புகளையே அவள் விரும்புகிறாள். 'ஸாதே' தயாரிப்புகள் நவீனத் தொழிற்சாலையில் தரமான பொருள்களைக் கொண்டு செய்யப்படுகின்றன.




## ஸாதே
## பிஸ்கட்டுகளும் கோகோவும் சாக்கலேட்டுகளும்



'HEROS' No 49, TAM

# சிவன் கீர்த்தனைகள்

ஸ்வர அமைப்பு—செம்மங்குடி சீனிவாச ஐயர்

கீர்த்தனம் 11     ராகம்: குந்தளவராளி     ஆதி தாளம்

### பல்லவி

சிவாய நமவென்று இடையருச்
சிந்தனை செய்வோமே ஸதா (சிவாய)

### அனுபல்லவி

அபாயம் ஒரு நாளுமில்லை மதமனம்
அடங்கச் சேரவாரீர் உலகீர் (சிவாய)

### சரணம்

அலை போலும் ஓயாப் பிறவி மாறி மாறி
வரும் துன்பக்கடல் நின்று கரை ஏறலாம்
உலகநாதன் தம்மையாள எங்கும் நிறைந்
திருக்க மறந்து அயருமளாமல் ஸதா (சிவாய)

குந்தலவராளி ராகம் 29-வது மேளமாகிற ஹரிகாம்போதியில் பிறந்தது. உபாங்கராகம். சுத்தமத்யமம், பஞ்சம், சதுர்ருதிதைவதம், கைசிகிநிஷாதம்.

ஆரோஹணம்: ஸ ம ப நி த ஸ்
அவரோஹணம்: ஸ் நி த ப ம ஸ

### பல்லவி     —1 களை

1 ஸா மா ; மா பா பா ம ப ஸ் நி | தா ; ; தா | தா நீ தா ; ||
சி வா ய ந ம வெ - - - | ன்று இ | டை ய ருச்

தா ஸ்ா ஸ் நி நீ நி நி த ப ப நி த ப | மா ; ; ; | ; மா மா ஸா ||
சிந் - த - னை செய் - - வோ- - - | மே | ஸ தா -

2 ஸா மா ; மா பா பா ம ப ஸ் நி | தா ; ; தா | நீ தா நீ ; ||
சி வா ய ந ம வெ . - - | ன்று இ | டை ய ரு ச்

ம த ஸ்ா ஸ் நி நீ நி நி த ப ப நி த ப | மா ; ; ; | ; ஸா மா , ப ||
சி ந் - - த - னை செய் - - வோ - - - | மே | ஸ தா -

3 தநி த ப மா , மா பா பா ம ப ஸ் நி | தா ; ; மா | மா நீ நி த தா ||
சி - - - வா ய ந ம வெ - - - | ன்று இ | டை ய ரு - - ச்

ஸ்ா ; ஸ் நி நீ நி நி த ப ப நி த ப | மா ; ; ; | ; ஸ்ா ப தா ப ||
சிந் த - னை செய் - - - வோ - - - | மே | ஸ - தா -

4 தநி த ப மா , மா பா பா ம ப ஸ் நி | தா ; ; ; | ; ; ; ; ||
சி - - - வா ய ந ம வெ - - - | ன்று - |

### அனுபல்லவி

1 மா மா நீ தா ஸ் ஸ்ா ஸ்ா , ம்ா | ஸ்ா ; நீ ; | தா , ப நி த த ப ||
அ பா - யம் ஒ ரு நா ளு | மி ல்லை | - - - - - -

2 மா மா நீ தா ஸ் ஸ்ா த ஸ்ா ம்ா | ஸ்ா ; நீ தா | ஸ்ா நீ தா ; ||
அ பா - யம் ஒ ரு நா - ளு | மி ல்லை ம | த ம னம்

| | | | |
|---|---|---|---|
| மா நீ தா தா ஸ்ா ஸ் ஹி நி த தா | ஸ்ா ; ; ஸ் ஹி | நீ நி தஸ் நி த ப | ‖ |
| அ ட ங்க ச்சே - ர - வா - - | ரீர் உ - | ல ஹிர் - - - - | |
| தநி த ப மா , மா பா பா ம ப ஸ் நி | தா ; ; ; | ; ; ; ; | ‖ |
| ஸி - - - வா ய ந ம வெ - - - | ன்று | | |

## சரணம்

| | | | |
|---|---|---|---|
| 1 ப பா மா , மா பா பா , ம மா | தா , மா த ஸ்ா | ஸ்ஹிரீ , த தா ; | ‖ |
| அ லை போ லும் ஓ யா ப்பி ற | வி மா - றி | மா - - - றி | |
| த நீ தபா, , பா ப தா பமா, , மா | ம பா தா நி த ப | மா ; ; ; | ‖ |
| வரும்துன் - பக் கடல் நின் - று | க ரை ஏ - ற - | லாம் | |
| 2 நி தா பமமா , மா ம ப ம ம ஸ ம மா | தா த ம தா ஸா | ஸ்ஹிரீ , த தா ; | ‖ |
| அ லை போ - - லும் ஓ - யா - - ப்பி ற | வி மா - - றி | மா - - - றி | |
| த நீ தஸ்ரீ த பா ப தா பநிதா பமா | ம பா தநிதா,நி தப | மா ; ; ; | ‖ |
| வரும் துன் - - பக் க டல் நின் - - - று | க ரை ஏ - - - ற - | லாம் | |
| 1 மா நீ தா ஸ்ா ; ஸ்ா ஸ்ா ம்ா | ஸ்ா ; ஸ்ா தா | ஸ்ா நீ தா நீ | ‖ |
| உ ல க நா தன் நம் மை - | யா ள எ | ங் - கும் நிறை | |
| 2 மா நீ தா ஸ்ா ; ஸ்ா தாஸ்ம் | ம்ா ஸ்ா ஸ்ா தா | ஸ்ா நீ தா நீ | ‖ |
| உ ல க நா தன் நம்மை- | யா - ள எ | ங் - கும் நிறைந் | |
| 1 பா தா மா மா பா பா மா தா | த ப ஸ் நி நி த த ப | மா ; தா நீ | ‖ |
| இ ரு க்க ம றந் து து ய | ரு - மு - லா - - - | மல் நிறைந் | |
| 2 த ப நி த த ம மா பா ப ம மா தா | த ப ஸ் நி நி த த ப | மா ஸா மா , ப | ‖ |
| இ - ரு - க்க - ம றந்து - து ய | ரு - மு - லா - - - | மல் ஸ தா - | |
| தநி த ப மா , மா பா பா ம ப ஸ் நி | தா ; ; ; | ; ; ; ; | ‖ |
| ஸி - - - வா ய ந ம வெ - - - | ன்று - - - | - - - - | |

# சொல்லும் செயலும்





கோதண்டராமன்

விளக்குகளை ஏற்றிக் கொண்டிருந்த சுசீலா 'ஜல் ஜல்' என்ற சதங்கை ஒலி கேட்டு வெளியே வந்தாள். வீட்டு வாசலில் வண்டி வந்து நின்றிருந்தது. வண்டியிலிருந்து தோல் பெட்டியுடன் இறங்கியவனைப் பார்த்ததும், "நீங்களா?" என்று அவள் மனம் ஒரு கேள்வியைக் கேட்டது. உடனே உள்ளுக்கு ஓடினாள். "அப்பா, அப்பா... 'அவர்' வந்திருக்கிறார்" என்று சொல்லிக் கொண்டே அவள் தந்தையின் முன் போய் நின்றாள்.

அதற்குள், "நமஸ்காரம், மாமா!" என்று சொல்லிக் கொண்டே உள்ளே வந்து விட்டான் அவன்.

"வா, அப்பா!" என்று வரவேற்று ஊர் கலங்களைப் பற்றியெல்லாம் விசாரிக்கலானார் அவர்.

சுசீலா பிரசவத்துக்காகப் பிறந்தகம் வந்து ஆறு மாதங்கள் ஆகின்றன என்பது தெரிந்தே அவளது கைக் குழந்தைக்காக அவன் ஒரு பெட்டி ஸெலுலாய்டு பொம்மைகள் வாங்கி வந்திருந்தான். அவற்றை ஒரு சிறிய கடைபோல் அவர்கள் முன்னால் பரப்பினான். சுசீலாவின் தம்பிக்கு வாங்கி வந்திருந்த பிஸ்கட் பொட்டலத்தைப் பிரித்து அவனிடம் கொடுத்தான். கொண்டு வந்த பழங்களை எடுத்து, சுசீலாவிடம் நீட்டினான். அவை யெல்லாம் வீண் செலவுகள் என்று சுசீலாவின் தந்தை வருத்தப் பட்டுக் கொண்டார். அவர் பேச்சைப் பற்றி அவன் கவலைப்படவில்லை. சுசீலாவின் குழந்தையை எடுத்துக் கொஞ்ச ஆரம்பித்து விட்டான் அவன்.

சிறிது நேரம் சென்றது. அவன் எழுந்து மாடிக்குப் போனான். அங்கே சுசீலா நிலாவைப் பார்த்துக் கொண்டு நின்றிருந்தாள்.

"'நிலா அழகா? உன் முகம் அழகா?' என்று ஆராய்ச்சியா? சந்தேகமில்லாமல் உன் முகம்தான் அழகு!" என்றான் அவன்.

திடுக்கிட்டுத் திரும்பினாள் சுசீலா. சிறிது தூரத்தில் அவன் நிற்பதைக் கண்டாள்.

"மரியாதையாகப் பேசுங்கள். நான் பழைய சுசீலா இல்லை. இன்னொருவரின் உரிமை" என்று கூறி வெடுக்கென்று முகத்தைத் திருப்பிக் கொண்டாள்.

"தெரியும்!" என்றான் அவன்.

"அப்படியானால் என் முன்னால் நீங்கள் எதற்கு வந்தீர்கள்?"

"'சொன்ன சொல் தவறக் கூடாது' என்பதற்காகத்தான். உன் கல்யாணத்துக்கு வந்திருந்தால் நான் சொன்ன சொல் தவறியவனாக ஆகி விட்டிருக்க மாட்டேனா?"

"அப்படி யாருக்கு, என்ன வாக்குக் கொடுத்து விட்டீர்கள்?"

"உனக்குத்தான்! நான் முன் தடவை வந்து, ஊருக்குத் திரும்பிய போது கடைசியாக உன்னிடம் என்ன சொல்லி விட்டுப் போனேன்? யோசித்துப் பார்!"

அவன் ஏதோ பேச வாய் திறந்தான். கீழேயிருந்து, "கோமகவரா!" என்று குரல் வந்தது. சுசீலாவின் தந்தை அவனை அழைத்தார்: அவன் இறங்கிப் போனான்.

சந்திரனைப் பார்த்தபடி சிந்தனையில் ஆழ்ந்த சுசீலாவின் நெஞ்சில் மூன்று வருடங்களுக்கு முன் நடந்த நிகழ்ச்சிகள் நடனமாடத் தொடங்கின.

விளக்கு வைக்கச் சிறிது நேரம் இருந்தது. சுசீலா வாசலில் தண்ணீர் தெளித்துக் கோலம் போட்டுக் கொண்டிருந்தாள். அவள் கருநாகச் சடை தரையைத் தொட்டும் தொடாமலும் தரையின் சுத்தாவஸ்தை நிலையைப் பரிசோதித்துக் கொண்டிருந்தது.

"இதுதானே சீனிவாசன் வீடு?" என்ற குரல் கேட்டு நிமிர்ந்தாள் சுசீலா. எதிரே ஒரு வாலிபன் நின்று கொண்டிருந்தான். அவள் கண்கள் தரையை நோக்கின; கன்னங்கள் சிவந்தன. கோலத்தை அப்படியே அரைகுறையாக விட்டு விட்டு அடுக்களைக்குள் வேகமாக ஓடினாள்.

வாலிபனும் அந்த அழகியைப் பின் தொடர்ந்து உள்ளே போனான். சுசீலாவின் தந்தை, அவனை வரவேற்று உபசரித்தார்.

இரவு சாப்பிடும் போது சுசீலாவின் தாயார் பரிமாறிக் கொண்டிருந்தாள். அங்கு ஏதோ வேலையாக வந்த சுசீலாவைப் பார்த்து, "சுசீலா! தண்ணீர் கொண்டு வாயேன்!" என்றான் கோமுகவரன். அவள் அவனைத் திரும்பிக்கூடப் பார்க்காமல் ஓடி விட்டாள்.

'அதிகாரம் பார், அதிகாரம்! சுசீலாவாம்! என்ன துணிச்சல்?' என்று எண்ணினாள். சாப்பாடு முடிந்த பிறகு, "என்னம்மா, அவன் யார்? வேற்று மனிதனா? மாமாதானே! தண்ணீர் கேட்டால் ஓடிவந்து விட்டாயே!" என்று தந்தை சொன்ன போது அவளுக்கு மேலும் கோபமும் வெட்கமும் அதிகரித்தன.

மறு நாள் எல்லாரும் அந்த ஊரில் நடந்த விழாவுக்குப் புறப்பட்டுப் போனார்கள். அந்த விழாவுக்குத்தான் அவன் அழைக்கப்பட்டிருந்தான். அந்த ஊருக்கு அப்பொழுதுதான் முதல் முறையாக அவன் வந்திருந்தான்.

விழாவில் கோமுகவரனின் பணம் வேகமாகக் கரைந்தது. சீனிவாசன்கூட அதிகப்படி செலவு செய்வதாகச் சொன்னார். இயற்கையிலேயே வீண் செலவு செய்ய விரும்பாதவன் கோமுகவரன். ஆனால் அந்த அழகியின் முன்னால் தன் கஞ்சத்தனத்தைக் காட்டிக் கொள்ளலாமா? அவளும் அவன் தாராள மனத்தை மனத்தாலேயே போற்றினாள்.

அன்று மாலை சுசீலாவின் தம்பியை மடி மீது உட்கார வைத்துக் கொண்டு, அவனுக்குக் கதை சொல்ல ஆரம்பித்தான். பாலர் பகுதிக்குக் காதல் கதை எழுதுவது போல், எட்டாம் எட்வர்ட் முடி துறந்த கதையையா சொல்ல வேண்டும்? சிறுவனுக்குக் கதை புரியவில்லை.

"போ, மாமா! உனக்குக் கதை சொல்லவே தெரியவில்லை. அக்கா சொல்லுவாளே ராஜாக் கதை! அதைப் போலச் சொல்ல

னும்!'' என்று சொல்லிவிட்டு அங்கிருந்து ஓட முயன்றான் சிறுவன்.

''ஓ! உன் அக்காவுக்கு ராஜாக் கதை கூடச் சொல்லத் தெரியுமா?'' என்றான் கோமடீஸ்வரன்.

''நல்ல கதை சொல்லுகிறாரடா, மாமா!'' என்று தம்பியைப் பிடித்து முதுகில் தட்டினாள் சுசீலா. தான் சொன்னதை யெல்லாம் சுசீலா மறைவாக இருந்து கேட்டுக் கொண்டிருந்தாள் என்பதை அறிந்ததும் கோமடீசுவரனுக்கு உடல் புளகித்தது. 'அவள், கேட்க வேண்டும்' என்ற திருட்டு எண்ணத்தினால்தானே அவன் அந்தக் கதையைச் சொன்னான்?

''கதை எப்படி? நன்றா யிருக்கிறதா?''

'''நன்றா யிருக்கிறது' என்று மாமாவிடம் சொல்லுடா.''

''ஏன், நீயே சொல்லக் கூடாதோ?''

கேள்விக்கு அவள் பதில் சொல்லவில்லை; அவனை நோக்கினாள். அவனும் நோக்கினான். அவர்கள் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்ட விதத்தைப் பார்த்துச் சிறுவன் விஷயம் விளங்காமல் விழித்தான்!

இரண்டு பேரும் நிலைமையைப் புரிந்து கொண்டார்கள். அவன் ஓடி விட்டான்.

முதல் நாள் தம்பியின் துணையோடு பேசினவள் இரண்டாம் நாள் அவன் பேசப் பேசினாள். மூன்றாம் நாள் அவளே வலியப் போய்ப் பேசினாள்; நான்காம் நாள் நெடு நாள் பழகியவள் போல் இழைந்து போனாள். ஆறாம் நாள் இருவரும் பிரிய நேர்ந்ததை நினைத்து மிக வருந்தினார்கள்.

அவன் புறப்பட்ட பொழுது அவள் அழுதே விட்டாள்: ''போகத்தான் வேண்டுமா?'' என்று துயரம் தொண்டையை அடைக்கக் கேட்டாள்.

''சுசீலா! போனதும் அப்பாவுக்கு விஷயத்தை எட்ட வைத்து......''

அவள் சொன்னதைக் கேட்டாளே தவிர, வாய் திறக்கவில்லை.

''அடுத்த முறை இங்கு வரும்போது பெண் பார்க்க மாப்பிள்ளையாகத்தான் வருவேன், பாரேன்! நான் சொன்னால் சொன்னதுதான்!'' என்று கூறினான் கோமடீசுவரன்.

அவன் போவதற்கு விடை கேட்ட போது அவள் கடைசி வரை வாய் திறந்து, ஒன்றும் பதிலே சொல்ல வில்லை.

★

மெதுவாக நடந்து வந்து சுசீலாவின் பக்கத்தில் நின்றான் கோமடீசுவரன். ''சுசீலா! கணவர் எப்பொழுது வந்து உன்னை அழைத்துப் போகப் போகிறார்?'' என்று கேட்டான். சிந்தனை உலகிலிருந்து விடுபட்ட சுசீலா, ஏழாவது மாதம் வந்து




**இந்திய விமானப் போக்குவரத்துக் கார்ப்பரேஷன் இப்பொழுது நவீன வசதிகளுடன் கூடிய "ஸ்கைமாஸ்டர்" என்னும் புதுரக விமானத்தை உபயோகப்படுத்தி வருகிறது. முன் உபயோகத்தில் இருந்த டகோடா விமானத்தை விட வேகமாகப் பறக்கக்கூடியது. அதில் இல்லாத பல விசேஷ சுகசௌகரியங்களையும் கொண்ட இந்தப் புதிய ஸ்கைமாஸ்டர் விமானத்தில் அறுபத்தொரு பேர் சௌகரியமாகப் பிரயாணம் செய்யலாம். இரவு விமானங்களில் தபால், சாமான்களுக்கு இடம் போக முப்பது பேர்கள் பிரயாணம் செய்வதற்கு வசதி இருக்கும் என்று அறிகிறோம். ஸ்கைமாஸ்டர் விமானத்தை உபயோகிப்பதன் மூலம் இந்திய விமானப் போக்குவரத்துக் கார்ப்பரேஷன் விமானப் பிரயாணிகளுக்கு மிகப் பெரிய வசதிகளைச் செய்து கொடுத்திருப்பதைப் பாராட்டுகிறோம்.**

**சென்ற மூன்றாம் தேதி சென்னையிலிருந்து முதன் முதலாகப் புறப்பட்ட 'ஸ்கைமாஸ்டர்' விமானத்தில் தென் இந்தியப் பத்திரிகைப் பிரதிநிதிகள் பிரயாணம் செய்து பார்த்தனர். அவர்களுள் 'கல்கி' பிரதிநிதியான திரு எல். நடராஜன் பிரயாணம் செய்தார்.**

தன் கணவர் அழைத்துப் போகப் போவதாகச் சொன்னான்.

"நீங்கள் 'அடுத்த முறை இங்கு வரும் போது பெண் பார்க்க மாப்பிள்ளையாகத் தான் வருவேன்!' என்றீர்களே! எனக்குக் கல்யாணமான பிறகு வந்து நிற்கிறீர்களே! இதுதான் நீங்கள் சொன்ன சொல் தவறாத லட்சணமோ?" என்று கேட்டான்.

"சுசீலா, நான் சொன்ன சொல் தவறவில்லை!" என்றான் அவன்.

"தவறவில்லையா? இப்பொழுது எந்தப் பெண்ணைப் பார்க்க வந்திருக்கிறீர்கள்?"

"ஏன்? உங்கள் வீட்டில் வேறு பெண்ணே இல்லையா?"

"யார் இருக்கிறார்கள்?"

"உன் தங்கைதான்!"

"என்ன,...அவளையா?...அந்த ஊமைப் பெண்ணையா?"

"நீயே 'ஊமைப் பெண்' என்று கேலி செய்யும்போது மற்றவர்கள் ஏன் செய்ய மாட்டார்கள்?"

சுசீலா சிறிது நேரம் யோசித்தாள்.

"நீங்கள் எங்கள் குடும்பத்துக்கு மாப்பிள்ளையாக வர விரும்பும் லட்சணம் இப்பொழுதல்லவா தெரிகிறது? என் தந்தை தன் இரண்டாம் மகளை மணம் செய்து கொள்பவருக்குக் கல்யாணச் செலவு, வரதட்சிணை போக இருபதாயிரம் அவள் ஊமையாகப் பிறந்ததற்குத் தண்டம் தருவதாக, உறவினரிடமெல்லாம் சொல்லியிருக்கிறார். பணத்தாசை உங்களை இங்கு இழுத்துக் கொண்டு வந்து நிறுத்தியிருக்கிறது. அப்படித்தானே?"

"பணத் தாசையால் நான் இங்கு வரவில்லை. எங்கள் வீட்டில் இல்லாத பணமல்ல!" என்றான் கோமகேசுவரன்.

"பின்னே எதற்காக வந்தீர்கள்?"

"உன் தகப்பனார் உன்னைத் தருவதாகத்தான் எழுதியிருந்தார். நான்தான் வேண்டாம் என்று எழுதினேன். காரணம் தெரியுமா? உன்னை மணந்து கொள்ள உலகத்தில் 'நான், நீ' என்று போட்டி போட்டுக் கொண்டு எத்தனையோ பேர் வருவார்கள். ஆனால் உன் ஊமைத் தங்கையை எத்தனை பணம் கொடுத்தாலும் மணந்து கொள்ள யாரும் சம்மதிக்க மாட்டார்கள். அதனால் தான்......"

சுசீலாவுக்குத் தலை சுற்றியது. "நிஜமாகவா?" என்றான். கோமகேசுவரனின் தியாகத்தைச் சிந்தித்த பொழுது அவளுக்கு மேலே ஒன்றுமே பேசத் தோன்றவில்லை.

இதே சமயம் காலடியோசை கேட்டு இருவரும் திரும்பிப் பார்த்தனர். சுசீலாவின் தங்கை, ஊமைப் பெண்ணான லலிதா மாடி வாசற்படியருகில் நின்று கொண்டிருந்தாள்.

"சுசீலா, இதோ பார்! உனக்கும் உன் தங்கைக்கும் என்ன வித்தியாசம் இருக்கிறது? ஒரே முகம், ஒரே உருவம், ஒரே உயரம்; வயதில்தான் நான்கைந்து ஆண்டுகள் ஏற்றத் தாழ்வு! 'என் உள்ளத்தில் இருக்கும் உருவத்தை மறக்க முடியாது! நானும் வாழ வேண்டும்! உன் தங்கையை மணப்பதைத் தவிரச் சிறந்த யோசனை இல்லை. தினமும் இவளைப் பார்ப்பதின் மூலமாவது உன் உருவத்தைக் காண முடியுமல்லவா? அன்று உன்னைப் பிரிந்ததிலிருந்து, மூன்று வருஷங்களாக உன்னைக் காணத் துடித்த என் உள்ளத்தின் துடிப்பு எனக்கல்லவா தெரியும்?......"

சுசீலாவின் சேலைத் தலைப்பு அவள் கண்ணீரின் ஈரத்தை இழுத்துக் கொண்டது.

"லலிதா! நீ அதிர்ஷ்டக்காரியடி!" என்று தங்கையின் முதுகில் தட்டிக் கொடுத்தாள். தன்னைக் காட்டிலும் தன் தங்கை அதிர்ஷ்டசாலி என்பதை நினைக்கும் பொழுது மகிழ்ச்சியும் துயரமும் ஒருங்கே கலந்த ஒரு பெருமூச்சு அவள் உள்ளத்திலிருந்து வெளிவந்தது.

எல்லோருக்கும் தெரியும் —

ப்ரூக் பாண்ட் தேயிலை
காற்றுப்புகாமல் பாக்
செய்யப்படுவதால்
அதுகலப்பற்று,களங்கமற்று
சுத்தமாகக்
கிடைக்கிறது

ஒவ்வொரு
ப்ரூக் பாண்ட் தேயிலை
பாக்கெட்டிலிருந்தும்
உங்களுக்கு அதிகப்படியான,
ருசியான தேநீர் கிடைக்
கிறது

மற்றெந்த
தேயிலையை விட
ப்ரூக் பாண்ட் தேயிலையே
அதிகமாக விற்
பனையாகிறது

Darjeeling Tea
Brooke Bond Tea
Blend
Brooke
Bond
Tea

ஆகையால்தான் மற்றெந்தத்
தேயிலையையும் விட
அதிகப்படியான ஜனங்கள்

**ப்ரூக் பாண்ட்**
**தேயிலையையே**

அருந்துகிறார்கள்!

# டுமெக்ஸ்
# பால் உணவு
## ஏன் நிர்பயமானது?

ஏனெனில் டுமெக்ஸ் பால் உணவு டுபர்கொலின் டெஸ்டெட் பசுக்களின் பாலினின்று தயார் செய்யப்படுகிறது. இத்தகைய டுபர்கொலின் டெஸ்டெட் பால் குழந்தைகளுக்கு பரிசுத்தமானது, நிர்பயமானது என்பதை உங்கள் டாக்டர் கூறுவார். டுமெக்ஸ் பால் உணவு தண்ணீரில் சுலபமாக கரையக்கூடியது. எளிதில் ஜீரணிக்கக்கூடியது. டுமெக்ஸ் பால் உணவில் பால் பண்ணைக்கே உரித்தான மணம் கமழ்வதால் குழந்தைகள் இதை மிகவும் விரும்புகின்றனர்.

**டுமெக்ஸ்**
**பால் உணவு**

உங்கள் குழந்தைகளுக்கு டுமெக்ஸ் பால் உணவைக் கொடுத்து அவர்களின் வளர்ச்சியைக்கவனியுங்கள்

# ஆற்றங்கரையினிலே



பேராசிரியர்: ரா. பி. சேதுப்பிள்ளை

## 46. திருநாகேச்சுரம்

தமிழ் நாட்டிலே குற்றாலம் இரண்டு உண்டு; பாபநாசம் இரண்டு உண்டு; திருநாகேச்சுரமும் இரண்டு உண்டு. சோழ நாட்டிலே கும்பகோணத்துக்கு அருகே உள்ளது, ஒரு நாகேச்சுரம்; தொண்டை நாட்டிலே குன்றத்தூருக்கு அண்மையில் உள்ளது, மற்றொரு நாகேச்சுரம்.

சோழ நாட்டுத் திருநாகேச்சுரம் பழங் காவிரியாற்றின் கரையில் அமைந்த பாடல் பெற்ற பதியாகும்.

> " பாய்புனல்வந் தலைக்கும்
> பழுங்காவிரித் தென்கரை
> நாயிறுந்தீங் கரும்பூடு
> வந்தாடும் நாகேச்சரம்
> மேயவன்தன் அடிபோற்றி
> என்பார் வினைவீடுமே "

என்று அப்பதியைப் பாடியருளினார் திருஞானசம்பந்தர்.

குலோத்துங்க சோழன் தமிழ் நாட்டை ஆண்ட காலத்தில் அவன் அவைக்களத்தில் முதலமைச்சராக விளங்கினார் சேக்கிழார் என்னும் தமிழ்ப் பெருமகன். அவர் தொண்டை நாட்டுக் குன்றத்தூரிலே பிறந்தவர்; நூலறிவும் நுண்ணறிவும் பெற்றவர். சிவநெறியும் செந்தமிழும் பேணி வளர்த்தவர். தமிழ்மாலை பெற்ற தலங்களை யெல்லாம் வழிபடும் பேறு பெற்ற அப் பெருமான்,

> " கொங்கலை வண்டரற்றக்
> குயிலும் மயிலும் பயிலும்
> தெங்கலை பூம்பொழில்சூழ்
> திருநாகேச் சரத்தானை "

(கொங்கு - மணம்; பொழில் - சோலை)

க்குறித் கொண்டு போற்றினார். அப்பதியில் திருப்பணிகள் பல செய்தார்.

தேவாரம் பாடிய மூவருள் ஒருவராகிய சுந்தரமூர்த்தியின் உள்ளங் கவர்ந்தது திருவாரூர்ப் பூங்கோயில். திருவாசகம் அருளிய மணிவாசகரின் மனத்தை அள்ளிக் கொண்டது திருப்பெருந்துறை. அவ் வண்ணமே திருத்தொண்டர் புராணம் பாடிய சேக்கிழாரின் சிந்தையைக் கொள்ளை கொண்டது திருநாகேச்சுரம். அங்கே போந்து போற்றாத நாளெல்லாம் பிறவா நாளே என்று கருதினார் அப் பெரியார். அமைச்சர் பதவியினின்றும் நீங்கி அமைதியாகத் தம் ஊரிற் போந்து வாழுங் காலத்தில் திருநாகேச்சுரத்தை நாள் தோறும் வணங்குதல் இயலாதே

என்று எண்ணி வருந்தினர். அக் குறையை நீக்குவதற்கு ஒரு வழி தேடினர்; குன்றத்தூரின் அருகே திருநாகேச்சரம் ஒன்றை அமைக்கத் துணிந்தார். நல்ல வழியில் ஈட்டிய பொருள் அனைத்தையும் நாதன் திருப்பணியில் செலவிட்டார். தொண்டை நாட்டிலே ஒரு நாகேச்சரம் கண்டார்.

"தம் பதியின் நத்தூரில் மடவ ளாகம்
தானாக்கித் திருக்கோயில் தாபித் தங்கண்
செம்பியர்கோன் திருநாகேச் சரம்போல்சதும்
திருநாகேச் சரமெனவே திருப்பேர் சாத்தி"
(மடவளாகம்-கோயிலைச் சுற்றியுள்ளதெரு)

சிறப்பும் பூசையும் ஏற்படுத்தினர் என்று சேக்கிழார் வரலாறு கூறுகின்றது.

ஈச்சரம் என்னும் பெயருடைய ஊர்கள் தமிழ் நாட்டில் பலவாகும். ஈசன் கோயில் ஈச்சரம் எனப்படும். மன்னரும் முனிவரும் முன்னாளில் ஈச்சரம் எடுத்தனர். காவிரிப் பூம் பட்டினத்தில் பல்லவ மன்னன் கட்டிய திருக்கோயில் பல்லவனீச்சரம் என்று பெயர் பெற்றது. தஞ்சையம் பதியில் இராசராசன் கட்டிய பெருங் கோயில் இராசராசேச்சரம் என்று வழங்கப் பெற்றது. இந்த முறையில் நாகர் தலைவன் ஒருவன் நிறுவிய சிவாலயம் நாகேச்சரம் என்று அழைக்கப் பட்டது போலும்!

அக் நாளில் இருந்த ஈச்சரங்களிற் சிலவற்றைத் தொகுத்துக் கூறுகின்றது ஒரு தேவாரத் திருப்பாசுரம்.

"... நாகேச்சரம் நாகளேச்சரம் நன்கான
கோடீச்சரம் கொண்டீச்சரம் திண்டீச்சரம்
................
கடுத்திரை இராமேச்சரம் என்றென்று ஏத்தி
இறைவனுறை சுரம்பலவும் இயம்பு
வோமே"

என்று பாடினர் திருநாவுக்கரசர். திருநாகேச்சரம் என்ற கோயிற் பெயர் நாளடைவில் ஊர்ப்பெயர் ஆயிற்று.

அவ்வூரில் பழமையான திருமால் கோயிலும் உண்டு. திரு விண்ணகர் என்பது அதன் பெயர். பண்டைத் தமிழ் நாட்டிலே பல விண்ணகரங்கள் விளங்கின. காஞ்சிமா நகரில் பரமேச்சுரப் பல்லவன் கட்டிய திருமால் கோயில் பரமேச்சுர விண்ணகரம் என்று பெயர் பெற்றது. கும்பகோணத்திற்கு அருகே நந்தி மன்னன் எடுத்த திருக்கோயில் நந்திபுர விண்ணகரம் என்று அழைக்கப் பெற்றது. இவ்வாறு அமைந்த விண்ணகரங்களுள் சாலப் பழமையும் பெருமையும் வாய்ந்தது திருநாகேச்சுர விண்ணகரம். ஆதலால் அது திரு விண்ணகர் என்று சிறப்பிக்கப்பட்டது. அக்கோவிலில் அமர்ந்து அருளும் பெருமானை ஆதரித்து அழைத்து அகங் குழைந்து பாடினர் திருமங்கை ஆழ்வார்.

"ஆண்டாய்உனைக் காண்பதோர்
அருள்எனக்கு அருளுதியேல்
வேண்டேன்மனை வாழ்க்கையை
விண்ணகர் மேயவனே"

என்பது அவர் திருவாக்கு.

நின்ற திருக்கோலத்தில் அவ்விண்ணகரிற் காட்சி தரும் பெருமானை வழிபட்டு நெஞ்சுருகி நின்றார் நம்மாழ்வார்.

"தேவர்மேவித் தொழும்
திருவிண்ணகர் சேர்ந்த பிரான்
பாவியேன் மனத்தே
உறைகின்ற பரஞ்சுடரே"

என்று பரிவு கூர்ந்து பாடினர். தன்னை ஆட் கொண்டருளிய திருவிண்ணகர்ப் பெருமானைப் "பொன்னப்பன்! மணியப்பன்! முத்தப்பன்" என்று வாயாரப் புகழ்ந்து போற்றினர். "தன்(னை) ஒப்பார் எவருமின்றித் திகழும் என் அப்பன் என்னையும் அடைக்கலமாக ஏற்று அருள் புரிந்தானே" என்று அகம் குழைந்தார்.

"மின்னப்பொன் மதிள்சூழ் திரு
விண்ணகர் சேர்ந்தஅப்பன்
தன்னொப்பார் இல்லப்பன்
தந்தனன் தன தாள்நிழலே"

என்று பாடி மகிழ்ந்தார். அவர் திருவாக்கை ஓதி உருகிய அடியார்கள் அவ் விண்ணகர்ப் பெருமானை "ஒப்பார் இல் அப்பன்" என்று அழைத்தார்கள். தனக்கு உவமைத் தலைவன் என்று பொருள்படும் அத் திருநாமம் 'ஒப்பிலி அப்பன்' என மருவிற்று. "நின் ஒப்பார் பிறரின்றி நீயே ஆனாய்" என்று வாயாரப் புகழ்ந்து அன்பர்கள் வழி பட்டார்கள். நாளடைவில் ஒப்பிலியப்பன் என்ற பெயரைப் பொது மக்கள் உப்பிலியப்பன் எனச் சிதைத்து வழங்குவார் ஆயினர். அப் பெயருக்குப் பொருத்தமாக உப்பில்லாத நிவேதனமே அப் பெருமானுக்கு உகந்தது என்னும் கொள்கையும் நிலைபெற்றது.

திரு விண்ணகர் என்ற பழம் பெயர் இப்போது மறைந்து போயிற்று. உப்பிலியப்பன் கோயில் என்பதே இக்காலத்தில் வழங்கும் பெயர். ஒப்பில்லாத அப்பன் உப்பில்லாத உணவையும் ஏற்றுக்கொண்டு வாழையடி வாழையென வந்து வணங்கும் ஏழை மாந்தர்க்கு இன்னருள் புரிகின்றான்.




# FIAT

## சிறிய கார்
## பெரிய வசதி

# FIAT THE NEW 1100

புதிய அழகு
புதிய பொலிவு



**டி. வி. சுந்தரம் அய்யங்கார் & ஸன்ஸ் லிமிடெட்,**
மதுரை, திருச்சிராப்பள்ளி, திருநெல்வேலி, புதுக்கோட்டை, சேலம், கோயமுத்தூர்.

**சுந்தரம் மோட்டார்ஸ் லிமிடெட்,**
37, மவுண்ட் ரோட், சென்னை.

ஸப் - டீலர்கள் :

● மலபார் ஜில்லாவுக்கு : வி. வி. ஆடோமோபைல்ஸ் லிமிடெட், கோழிக்கோடு ● திருவாங்கூர்-கொச்சி ராஜ்யத்திற்கு : கொல்லம் ஆடோமோபைல்ஸ், தபால் பெட்டி நெ. 32, கொல்லம் ● தென் கன்னட ஜில்லா : பு. சுப்ராய நாயக், கன்டோன்மெண்ட், மங்களூர் ● நெல்லூர் ஜில்லா : டி. எஸ். ஆடோமோபைல்ஸ், நெல்லூர் ● குண்டூர், கிருஷ்ணா, மேல் கோதாவரி ஜில்லாக்களுக்கு : கரபதி காரேஜ், (ஜெனரல் மெஷினரி & ஆடோ ஸ்டோர்ஸ்) காந்தி நகர், விஜயவாடா



# நீண்ட, அடர்ந்த ஒளிக்கூந்தலுக்கு

இளமையின் ஒளியும் அற்புத ஜ்வலிப்பும் பெற கூந்தலுக்கு கால்கேட் பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயிலை தடவுங்கள். கூந்தலின் இயற்கை அழகை அது எடுத்துக் காட்டி எல்லோரையும் பிரமிக்கச் செய்யும்.



எக்கானமி சைசுவை வாங்கி பணத்தை மிச்சப் படுத்துக.

## கால்கேட்
பெர்பியூம்டு காஸ்டர்
## ஹேர் ஆயில்

COHO/L/1

---

# 'லக்ஷ்மி' பாதுகாப்பின் அரண்

சேவை உணர்ச்சியிலும் தேசாபிமான ஆர்வத்திலும் ஸ்தாபிக்கப்பட்ட லக்ஷ்மி இன்ஷ்யூரன்ஸ் அதன் தாராளமான பாலிஸி நிபந்தனைகள், பாத்தியதைகளை உடனுக்குடன் பைசல் செய்தல் மற்றும் எல்லா இன்ஷ்யூரன்ஸ் பாலிஸிகளையும் அனுதாபத்துடன் கவனித்து வழங்குதல் காரணமாக முன்னேறி யிருக்கிறது.



லக்ஷ்மி  இன்ஷ்யூரன்ஸ்

கம்பெனி லிமிடெட்

தலைமை ஆபீஸ்: புது டில்லி - 1

கிளை ஆபீஸ்கள்: மதராஸ்: 4/105, அரண்மனைக்காரத் தெரு. ஜி.டி. ○ பெங்களூர்: 52, காந்தி நகர் ○ கோயமுத்தூர்: 102, திவான்பகதூர் ரோடு. ○ எர்ணாகுளம்: வி. டி. கே. ஸ்டேட் பில்டிங், [illegible]. ○ காக்கிநாடா: கோவில் தெரு.

பிரிட்டிஷ் கிழக்கு ஆப்பிரிக்காவிலும் மற்றும் இந்தியா பூராவும் கிளைகள் உள்ளன




அத்தியாயம் 12

## அக்னிக் குழம்பு

சிறு வயதிலேயே எனக்கு அதிகாலையில் மிக சீக்கிரம் எழுந்திருக்கும் வழக்கம் உண்டு. என் அன்னை என்னை அப்படிப் பழக்கி வைத்திருந்தார். அந்த நல்ல வழக்கம் எனக்கு இங்கிலாந்தில் படித்த காலத்தில் போய் விட்டது. ஆனால் இந்து சிறைப்பட்ட பிறகு எனக்கு அடியோடு தூக்கமே இல்லாமல் போய் விட்டது.

இந்து சிறையில் இருக்கிறாள். தன்னந் தனியாக இருக்கிறாள். அவளை அங்கே விட்டு விட்டு நான் இங்கே குங்குமத்துறையில் உட்கார்ந்து என் கதையை எழுதிக் கொண்டிருக்கிறேன். அதை நினைத்தால் அப்படியே என்னைத் தூக்கிப் போடுகிறது.

நான் இங்கே வருவதற்குமுன் இந்துவைப் பார்க்கப் போயிருந்தபோது அவள் என்னுடைய வாழ்க்கையில் நடந்த சம்பவங்களையெல்லாம் ஒன்று விடாமல் எழுதித் தரவேண்டும் என்று கேட்டுக் கொண்டாள். அவள் அதைக் கேட்ட விதம் என்னை உலுக்கி எடுத்து விட்டது. "உங்களைப் பற்றி என்னால் வேறு எப்படித் தெரிந்து கொள்ள முடியும்?" என்று கேட்டாள். அதில் அவளையறியாமலேயே தொனித்த ஏக்கத்தைக் கண்டு என்னுடைய நெஞ்சம் துடித்தது.

நான் இப்போது பாதிரித் தோட்டத்தில் நானும் இந்துவும் சந்தித்த அதே புன்னை மரத்தடியில் உட்கார்ந்திருக்கிறேன். மணி ஐந்தரை ஆகிறது என்று என் கைக் கடிகாரம் காட்டுகிறது. இலேசாக வெளிச்சம் பரவ ஆரம்பித்திருக்கிறது.

இதே சூழ்நிலையில் நாங்கள் இருவரும் ஏழு வருஷங்களுக்கு முன்னால் சந்தித்த போது இந்தத் தோட்டம் இன்ப வனமாகத் திகழ்ந்தது. இப்போது அதே இடம் சோக வனமாகத் தோன்றுகிறது.

இந்த மங்களான வெளிச்சத்தில் இந்தத் தோட்டம் அற்புதமாகத் திகழ்கிறது. ஆயினும் அந்த அற்புதத்துக்கு இடையே சோகம் பரவிக் கிடக்கிறது. இந்துமதியின் சௌந்தர்யம், துயரச் சாயை படிந்திருப்பது போல. இந்தச் சோக சித்திரத்தைப் பார்க்கும்போது இந்துவையே பார்ப்பது போல் எனக்குத் தோன்றுகிறது.

அதிகாலை வேளை தான் எவ்வளவு இனிமையானது? என்ன ரம்யமாக இருக்கிறது. அனலாகக் கொதிக்கும் என் நெஞ்சத்தையும் இந்தக் குளிர்ந்த காற்று சற்று ஆறச் செய்கிறது.

இந்த இருள் நீங்கி ஒளி பரவும் அற்புதத்தைப் பார்க்கும்போது எனக்கு உற்சாகமே உண்டாகிறது. என் வாழ்க்கையிலும் இதே போலப் பொழுது புலர்ந்து விடும் என்ற நம்பிக்கை மனத்தின் அடிவாரத்திலிருந்து எழுகிறது.

நான் சிறு வயதில் நிகழ்ந்த சம்பவங்களையெல்லாம் எழுதுவதால், நான் பிறந்து வளர்ந்த கிராமமான அல்லிக் குளத்தின் நினைவு வருகிறது. அதிகாலையில் ஸ்நானம் செய்யக் குளத்துக்குப் போய் விட்டு, குளிக்க மனம் வராமல் கரையின் மீது உட்கார்ந்து

வேடிக்கை பார்த்துக் கொண்டிருப்பேனே! அது படம்மாதிரி என் கண் முன்னால் வந்து நிற்கிறது.

மலை சூழ்ந்த பிரதேசமான குங்குமத் துறையில் பொழுது புலர்வது ஒருவிதமான அழகு என்றால், அல்லிக்குளத்தில் வேறு ஒரு விதமான அழகு.

ஐந்து மணிக்கு என் அன்னை என்னை எழுப்பியதும் குளத்தங் கரைக்குச் செல்வேன். போகும் வரை உற்சாகமாக இருக்கும். தண்ணீரின் அருகில் சென்றதும் குளிக்கச் சோம்பலாக இருக்கும். இரண்டு விரல்களால் தண்ணீரைத் தொட்டுப் பார்ப்பேன். ஜில்லென்று கையைக் கடிப்பது போலிருக்கும். அதன் பிறகு முழங்காலைக் கட்டிக் கொண்டு குளக் கரையில் உட்கார்ந்து விடுவேன்.

இலேசான வெளிச்சம் பரவ ஆரம்பிக்கும் சமயத்தில் ஒரு சப்தம் இருக்காது. ஒரே அமைதியாக இருக்கும். இந்த உலகில் உயிரே இல்லையோ என்று தோன்றும். கிழக்குத் திசையில் சிவப்பு ரேகைகள் படர ஆரம்பிக்கும் அழகை மெய்மறந்து பார்த்துக் கொண்டிருக்கும் போதே திடீரென்று ஒரு சிறிய சப்தம் கேட்கும். திரும்பிப் பார்த்தால் ஒரு குருவி தத்தித் தத்தி வரும். அதைப் பார்த்துக் கொண்டிருக்கும்போதே இன்னொன்று வரும். அதன்பிறகு கூட்டம் கூட்டமாக எங்கிருந்தோ குருவிகள் வந்து கொண்டே இருக்கும். ஐந்து நிமிஷங்களில் பலவிதமான பறவைகளின் இனிமையான குரல் ஒலிகள் கேட்க ஆரம்பிக்கும். காகம் கரையும். திடீரென்று ஒரு அணில் வெகு வேகமாக ஓடி வரும். "கீச்! கீச்!" என்று அது தன் சின்னஞ் சிறு கண்டத்திலிருந்து எழுப்பும் பெரிய சப்தத்தைக் கேட்கும்போது அது என்னுடன் ஏதோ பேச முயற்சிப்பது போலவே எனக்குத் தோன்றும்.

அந்த இனிமையான காட்சிகள் இன்னும் என் கண் முன்னால் பசுமையாக நிற்கின்றன. அதிகாலை நேரத்தில் உலகமே கண் விழிக்கும் வேளையில், இறைவனும் துயிலெழுவார் போலும்.

இன்று இங்கும் அதேமாதிரி பறவைகள் கத்துகின்றன. வண்டுகள் ரீங்காரம் செய்கின்றன. புஷ்பங்கள் கொத்துக் கொத்தாய் மலர்ந்து பகலவனை வரவேற்கின்றன.

இதைப் பார்க்கும்போது சிருஷ்டியின் தொடக்கம் இப்படித்தான் இருந்திருக்க வேண்டுமென்று தோன்றுகிறது. நான் விஞ்ஞான ரீதியாகச் சொல்லவில்லை. ஆனால் உலகத்தில் உயிர்கள் தோன்றிய காலம் எப்படி இருந்திருக்க வேண்டுமென்று எனக்கு இதைப் பார்க்கும்போது ஒருவாறு விளங்குகிறது. நான் இந்த ஜீவராசிகள் உயிர் பெற்று எழுவதைப் பார்ப்பது போல, இறைவனும் அப்போது பார்த்து ரசித்துக் கொண்டிருந்திருப்பாரோ எனத்தோன்றுகிறது.

இப்போது நன்றாக வெளிச்சம் வந்து விட்டது. சூரிய பகவான் இதோ உதித்து விட்டார். அவருக்கு என் அஞ்சலியைச் செலுத்தி விட்டு நான் இந்துவுக்கு எழுதும் இந்தக் கதையைத் தொடர்கிறேன்.

* * *

அல்லிக் குளத்தில் ஈசுவரமூர்த்தி புறப்பட்டுச் சென்ற பிறகு கிட்டத்



நாட்ட ஆறு மாதங்களுக்கு ஒருவித மான சந்தடியும் இல்லை. மிக அமைதியாகக் காலம் சென்றது. என் அன்னையின் மனம் மட்டும் அக்னிக் குழம்பாக எரிந்து கொண்டிருந்தது. ஆனால் பூமிதேவியை நிகர்த்த அவர் அதை வெளியே சொல்லாமலேயே வைத்திருந்தார்.

ஆறு மாதங்களுக்குப் பின்னால் ஒரு நாள் நான் மாந்தோப்புக்கு மாங்காய் அடிக்கச் சில மாணவர்களுடன் போய்க் கொண்டிருந்தேன். போகும்போது தற்செயலாக சகுவரமூர்த்தியின் வீட்டுப் பக்கமாகச் சென்றோம். அவருடைய வீடு மறுபடியும் திறந்திருந்தது. வீட்டின் முன் பக்கத்தில் முன்பு என்னை அவரிடம் அழைத்துச் சென்ற மீசைக்கார ஆசாமி நின்று கொண்டிருந்தான். எனக்கு ஏன் அந்தப் பக்கம் போனேம் என்று இருந்தது. ஆனால் என்னுடைய உணர்ச்சிகளை நான் வெளியே காட்டிக் கொள்ளவில்லை. ஏதாவது சொன்னால் மற்றப் பையன்கள் எல்லாம் மீசைக்காரனைப் பார்த்துப் பயந்து விட்டேனென்று நினைத்துக் கொண்டு கேலி செய்வார்கள். இப்படி நான் நினைத்துக் கொண்டிருக்கும் போதே நான் எதிர்பாராத ஒரு காரியம் நடந்தது.

சுந்தரம் எப்போதுமே பெரிய வாய் என்று பெயரெடுத்த பையன். அவன் இந்த மீசைக்காரனைப் பார்த்ததும், ''பீமசேனனைப் பாருங்கடா! ஆள் வாட்ட சாட்டமாய் நல்லா யிருக்கான். இல்லையா?'' என்று சத்தம் போட்டான். வாசலில் நின்று கொண்டிருந்த சோமையாவின் காதில் இது விழுந்ததும் அவன் மீசை துடிக்க ஆரம்பித்து விட்டது.

வேகமாகப் படிகளில் இறங்கி வந்து, ''டேய்! யாரடா கத்தினது? இங்கே வாடா. உன்னுடைய தோலை உரித்து விடுகிறேன்'' என்றான்.

அவனுடைய தோற்றம் விநோதமாக இருந்தபடியாலும், கையை ஆட்டி ஆட்டி அவன் பேசிய விதத்தாலும் மாணவர்களுடைய உற்சாகம் அதிகமாகிவிட்டது. எல்லோரும் சிரித்தார்கள். நான் சுந்தரத்தின் சட்டையைப் பிடித்து இழுத்து, ''வேண்டாம்! உன்



வாலே இங்கே காட்டாதே. போய் விடுவோம்'' என்றேன்.

''டேய்! ரங்கதுரை மீசைக்காரனைப் பார்த்துப் பயந்துட்டாண்டா'' என்று சத்தம் போட்டான் சுந்தரம். இதில் என்ன ஹாஸ்யம் இருக்கிறது? ஆனால் அத்தனை பேரும் சேர்ந்து சிரித்தார்கள். ஏற்கனவேயே நான் நன்றாகப் படிக்கும் மாணவன் என்பதால் என்னிடம் அவர்களுக்கு அசூயை உண்டு. காரணமில்லாமலேயே மட்டம் தட்டுவார்கள். கொஞ்சம் காரணம் கிடைத்து விட்டால் போதாதா ரகளை செய்ய? என் தலையில் ஒரு பையன் நறுக்கென்று குட்டினான். இன்னொருவன் எழும்பிக் குதித்துச் சோமையாவின் மீசையைப் பிடித்து இழுத்து விட்டான்.

அவ்வளவுதான்! சோமையா இரண்டு கைகளாலும் அருகில் அகப்பட்ட பையனை இரண்டு அடி வைத்தான். அவன் சுருண்டு விழுந்து விட்டான். உடனே என்னுடைய சகாக்களின் ஆத்திரம் வெறியாகக் கிளம்பி விட்டது. தெருவில் கிடந்த கற்களை எடுத்து வீச ஆரம்பித்தார்கள். சகுவரமூர்த்தியின் வீட்டிற்குள் சில கற்கள் போய் விழுந்தன. எனக்கு இரண்டு அடி கிடைத்தது. யார் யாரை அடித்தார்கள் என்பது கூடப் புரியவில்லை. திடீரென்று ஒரு இரும்புக் கரம் என் கையை அழுந்தப் பிடித்தது. திரும்பிப் பார்த்தேன். நெற்றியிலிருந்து ரத்தம் சொட்டச் சோமையா பயங்கரமான தோற்றத்துடன் நின்று கொண்டிருந்தான். அவனைப் பார்த்தால் மனிதன் மாதிரியே அப்போது தோன்றவில்லை. காட்டேரி, முனி என்று சொல்லுவார்களே அந்த மாதிரி இருந்தது.

நான் திகைத்து நிற்கும்போதே ஒவ்வொருவராக எல்லோரும் ஓடி விட்டார்கள். அடிபட்டுச் சுருண்டு விழுந்த பையனைக் கூடக் காணோம். வீட்டு வாசலில் சகுவரமூர்த்தி நிற்பதைப் பார்த்தேன். அவருடைய முகத்தில் குரோதம் கொதித்தது. என்னைப் போட்டால் வெடித்திருக்கும். அப்படிப் பழுக்கக் காய்ந்த சட்டியைப் போல இருந்தது அவர் முகம்.

சோமையா என்னை உள்ளே இழுத்துக் கொண்டு போனான். நான் திமிறிப் பார்த்தேன். முடியவில்லை. ''என்னை விட்டு விடு. நான் ஒன்றும் செய்யவில்லையே?'' என்றேன்.

''விட்டு விடுவதா? உன்னை அப்படியே கொல்லப் போகிறேன். இங்கே கலாட்டா பண்ணுவதற்கு ஆள் சேர்த்துக் கொண்டு வந்தாயா? இத்தனை கெட்டிக்காரன் நீ என்று எங்களுக்குத் தெரியாதே'' என்றான் சோமையா.

சகுவரமூர்த்தி, ''ஏய்! சோமையா! அந்தப் பையனுடன் உனக்கென்ன பேச்சு? அவனை இழுத்துக் கொண்டு உள்ளே தள்ளிப் பூட்டு. நான் அவனுடைய அருமை அம்மாவுக்குச் சொல்லி அனுப்புகிறேன்'' என்றார்.

என் நெஞ்சம் அப்படியே துடி துடித்துப் போயிற்று. நான் கொஞ்சங்கூட நினைக்காத ஒரு விஷயம் இப்படி நடந்து விட்டதே என்று மலைத்துப் போனேன். அதன் பிறகு என்னால் திமிறக்கூட முடியவில்லை. உடலெல்லாம் பதறிற்று. 'ஐயோ! அம்மாவுக்குத் தெரிந்தால் எப்படித் துடித்துப் போவாள்?' என்று உள்ளம் வெம்பியது.

என் சிந்தனைகள் முடிவதற்குள் சோமையா என்னை வீட்டுக்குள் இழுத்துச் சென்று ஒரு அறையில் தள்ளினான். கதவைச் சாத்தியதும் வெளியே தாழ்ப்பாள் பலமாகப் போடப்பட்ட சத்தம் காதில் விழுந்தது.

என் உடலிலிருந்து திடீரென்று சக்தியெல்லாம் எங்கேயோ போய் விட்டது. அப்படியே பிரமித்துப் போய் உட்கார்ந்து விட்டேன்.

## அத்தியாயம் 13

# மனித உருவம்

ஒரு யுகம் என்று எனக்குத் தோன்றிய காலத்துக்குப் பிறகு அந்த அழுக்கடைந்த அறையின் கதவு திறக்கப்படும் சத்தம் கேட்டது. திகைப்பினாலும், அடிபட்டதாலும் எனக்கு உடலும் உள்ளமும் ஒருங்கே சோர்ந்திருந்தன.

எல்லாவற்றையும் விட, ''கலாட்டா செய்வதற்கு வந்தாயா?'' என்று சோமையா கேட்ட கேள்வி என்னை உறுத்திக் கொண்டே இருந்தது. 'ஐயோ! இதை அம்மா கேட்டு விட்டால் என்னைப் பற்றி என்ன நினைப்பார்? ஆனால் அம்மாவுக்கு என்னைப் பற்றித் தெரியும். இப்படிச் சொன்னாலும் நம்ப மாட்டார். தமிழ் வாத்தியார் தான் என்ன நினைப்பார்? அவர்கள் நினைப்பது கிடக்கட்டும். எவ்வளவு வருத்தப் படுவார்கள்? என்ன கவலைப் படுவார்கள்? இப்படி எக்கச்சக்கமாக வந்து மாட்டிக் கொண்டோமே. நான் இந்தப் பையன்

# 'அனஸின்'

## வில்லைகளில் கலந்துள்ள **நான்கு**

## மருந்துகளால் உங்கள் வலியை நிவர்த்தி செய்து கொள்ளுங்கள்

'அனஸின்' விஞ்ஞான முறைப்படி சேர்க்கப்பட்ட நான்கு மருந்துகளின் கலப்பாகும். அவை நரம்புகளின் முக்கிய சேர்க்கை பாகங்களில் கூட்டாக வேலை செய்து விரைவில் வலி, தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி, மற்றும் தசை நார்களில் நோவு இவற்றை நீக்கும்.

அனஸினில் அடங்கிய மருந்துகள் :—

1. கொயினா: ஜுரத்தடுப்பு குணமும், பலவிருத்தி செய்வதற்கும் பிரசித்தி பெற்றது. ஜுரத்தைக் குறைப்பதில் மிகத் துரிதமானது.
2. காப்பின்: பலஹீனத்திற்கும், மனச்சோர்வுக்கும் விதமான தூண்டுகோல் மருந்தாக விதிக்கப் பட்டிருக்கிறது.
3. பினஸிடின்: ஜுரத்தடுப்பு, வலி நிவாரணத் தன்மைகளுக்கு பெயர் பெற்றது.
4. ஆஸிடில்ஸலிஸிலிக் ஆஸிட்: தலைவலி அது போன்ற எல்லா வலிகளையும் நிறுத்துவதற்கு உபயோகமுள்ளது.

அனஸினிலுள்ள இந்த நான்கு மருந்துகளும் ஒரு டாக்டரின் குறிப்புக்கு ஒப்பாகும். 'அனஸின்' ஹிருதயத்திற்கு தீங்கு விளைவிப்பதோ அல்லது வயிற்றுக்கு கோளாறு உண்டாக்குவதோ கிடையாது. வலி, தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல் வலி மற்றும் தசைகளில் வலி முதலியவற்றிலிருந்து விரைவிலும், பத்திரமாகவும், நிச்சயமாகவும் நிவாரணம் பெற எப்பொழுதும் அனஸினையே கேட்டு வாங்குங்கள்.




**லக்ஷக்கணக்கான மக்களுக்கு நிவாரணம் அளிக்கின்றது.**

A. 44

களுடன் மாங்காய் அடிக்க வராமலிருந்திருக்கக் கூடாதா?

இன்றைக்கு மட்டும் எப்படியாவது இங்கிருந்து வீடு போய்ச் சேர்ந்து விட்டால், பிறகு அந்த சுந்தரம் முதலானவர்களுடன் சேரவே கூடாது. மாங்காய் அடிக்க மாந்தோப்புக்குப் போகவே மாட்டேன்.

இப்படி இந்த அறையில் அடைத்து விட்டார்களே! இனிமேல் என்ன செய்வது? என்னை இப்படியே எங்கேயாவது தெரியாத ஊருக்கு அழைத்துக்கொண்டு போய் விடுவாரோ? வாத்தியாரையா முன்பு சொன்ன மாதிரி தவறான காரியங்கள் செய்யச் சொல்லுவாரோ? ஆனால் என்னை இவர் பிடித்து இங்கே வைத்திருப்பது மற்றப் பையன்களுக்கெல்லாம் தெரியுமே. என் பேரில் அவர்களும் பழியைப் போட்டால் கூட நான் இங்கே இருப்பதை வாத்தியாரையாவிடமாவது சொல்லாமலிருக்க மாட்டார்கள். அவர் வந்து நிச்சயமாய் என்னைத் திரும்ப அழைத்துக் கொண்டு போய் விடுவார்' என்று நினைத்துக் கொண்டிருந்த சமயத்தில் நான் கதவு திறக்கும் சப்தம் கேட்டது. நான் வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்தேன். ஒரு வேளை வாத்தியாரையாதான் வந்திருக்கிறாரோ என எண்ணினேன். கதவைத் திறந்தபோதுதான் நன்றாக இருட்டி விட்டதென்று தெரிந்தது. கூடத்தில் ஒரு விளக்குத்தான் எரிந்தது. அதன் மங்கலான வெளிச்சத்தில் சகவரமூர்த்தி ஒரு நாற்காலியில் உட்கார்ந்திருப்பது தெரிந்தது. நான் எதிர்பார்த்தபடி அங்கே யாரும் இல்லை. சகவரமூர்த்தி மட்டும் தான் இருந்தார். என்னுடைய உடல் முழுவதிலும் ஒரு வித நடுக்கம் பரவியது.

சோமையா என்னை அவர் முன்னால் நிறுத்தி விட்டு அவருக்குப் பின்னால் போய் நின்றான். நான் நடுங்கும் நெஞ்சத்துடனும், பதறும் உடலுடனும் அவரெதிரில் நின்றேன். என் மூளையே ஸ்தம்பித்துப் போய் விட்டது என்று தான் சொல்ல வேண்டும். ஒன்றுமே விளங்கவில்லை. 'எனக்கு என்ன ஆகி விட்டது? ஏன் இப்படிப் பயந்து நடுங்க வேண்டும்?' என்று என்னையே கேட்டுக் கொண்டேன். சகவரமூர்த்தியின் குரல் என்னைச் சிந்தனை உலகத்திலிருந்து பூவுலகுக்கு வரச் செய்தது.

"என்ன துரை! ரொம்பக் கெட்டிக்காரப் பையனாக இருக்கிறாயே" என்றார்.

அதில் தொனித்த ஏளனம் என்னைச் சுட்டது. அவருடைய முகம் மங்கலான வெளிச்சத்தில் மிகவும் விகாரமாக இருந்தது. அவரைப் பார்க்கச் சகிக்காமல் தலையைக் குனிந்து கொண்டேன்.

"உன்னுடைய முழுப் பெயர் ரங்கதுரைதானே?" என்று கேட்டார்.

"ஆமாம்" என்றேன்.

"நான் சொல்கிறபடி கேட்கிறாயா?"

"விஷயம் என்னவென்று சொல்லுங்கள். யோசனை செய்துதான் ஒப்புக்கொள்ள முடியும்."

"ஏய்! என்னை என்ன நீ கிள்ளுக்கீரை என்று நினைத்தாயா? உன்னை என்ன செய்வேன் தெரியுமா?"

"என்ன வேண்டுமோ செய்து கொள்ளுங்கள்" என்றேன். இப்படி நான் சொல்லும்போதே சோமையா சற்று நகரவே, அங்கே தொங்கிய ஒரு பெரிய சாட்டைக் கயிறு என் கண்ணில் பட்டது.



அதைப் பார்த்ததும் என் வயிற்றை என்னவோ செய்தது. சோமையாவின் தோற்றமோ சாட்டையை விடக் குரூரமாக இருந்தது. எனக்கு என்னமாக இருந்திருக்கும்? அந்த வயதில் இந்த மாதிரி நிகழ்ச்சிகள் வரும் கதைகளைக் கூட நான் படித்ததில்லை.

சகவரமூர்த்திக்கு என் பதிலைக்கேட்டு மிகவும் ஆத்திரம் ஏற்பட்டிருக்க வேண்டும். ஆனால் அவர் சமாதானமாகக் காரியத்தைத் தீர்த்துக் கொள்ள விரும்பினார் போலிருக்கிறது. சற்று நிதானித்து விட்டு மறுபடியும் ஆரம்பித்தார்.

"ரங்கதுரை! நீ புத்திசாலிப் பையன் என்று எனக்குத் தெரியும். உன் பள்ளிக்கூடத்தில் விசாரித்தேன். நீ ரொம்ப நல்ல பையன் என்றும், நீ படிப்பில்

# ஹாஸ்யக் களஞ்சியம்

சாமா






ரொம்பக் கெட்டிக்காரன் என்றும் அங்கே சொன்னார்கள். உன்னை முன்னுக்குக் கொண்டு வருவதை நான் என்னுடைய பொறுப்பாக ஏற்றுக் கொள்கிறேன். உன்னை நன்றாகப் படிக்க வைக்கிறேன். என்னுடன் வருவதாக ஒப்புக் கொண்டு விடு'' என்றார்.

''ஒப்புக் கொள்ளா விட்டால்?...''

''நீயாக ஒப்புக் கொள்ளா விட்டால் உன்னைச் சம்மதிக்க வைப்பதற்கு எனக்குத் தெரியும்.''

''நான் எதற்காக என் அம்மாவை விட்டு விட்டு வரவேண்டும்? என்ன செய்ய வேண்டுமென்று சொல்லவே மாட்டேனென்கிறீர்களே!''

''உன்னிடம் ஒன்றும் விவரித்துக் கொண்டிருக்க முடியாது. நீ இப்போது இந்தக் காகிதத்தில் உன் அம்மாவுக்கு ஒரு கடிதம் எழுதிக் கொடுக்க வேண்டும்'' என்றார்.

''என்ன எழுத வேண்டும்?''

''நீ மனப்பூர்வமாகச் சம்மதித்து என்னுடன் வருவதாக எழுதித் தர வேண்டும்'' என்று கட்டளையிட்டார்.

எனக்கு அதைக் கேட்டபோது என்னமாக இருந்தது தெரியுமா? 'இவரோடு எங்கே போக வேண்டும்? நான் அப்படி எழுதிக் கொடுத்தேனென்றால் அம்மா என்ன நினைப்பாள்? வாத்தியாரையா தான் என்ன எண்ணுவார்? பிறகு இவர் என்னை என்ன செய்வாரோ? ஒருவேளை அதன் பிறகு அம்மாவை இந்த ஜன்மத்தில் பார்க்க முடியாமலேயே போய் விடலாம். ஐயோ! இதற்குச் சம்மதிக்கவே கூடாது. அடித்துக் கொன்றாலும் சரி' என்று மனத்துக்குள் எண்ணிக் கொண்டேன்.

''நான் எழுதவே மாட்டேன்'' என்று மறுத்துக் கூறினேன்.

அந்தனை குழப்பங்களுக்கும் மத்தியில் எனக்குத் தைரியம் மாத்திரம் போகவில்லை. அறையில் தள்ளிப் பூட்டிய













போது இருந்த பயம் பறந்து போய் விட்டது. வாத்தியாரையா கூறியது பளிச்சென்று நினைவுக்கு வந்தது. உண்மையில் அவருடைய எச்சரிக்கையும், தெய்வானுகூலத்தால் வந்த இன்னொரு எதிர்பாராத உதவியும் தான் அன்று என்னைக் காத்தன.

வாத்தியாரையாவை நினைத்ததும் ஒரு அசாதாரணமான துணிவு எனக்கு ஏற்பட்டது. நான் வயதில் மிகச் சிறியவனை போதிலும் அந்தச் சமயத்தில் பெரியவன் மாதிரி நடந்து கொண்டேன். வாத்தியாரையா என் நெஞ்சத்தில் நிறைந்து விட்டார்.

இடி இடிப்பதுபோல் சகுவரமூர்த்தி இரைந்தார். "ரங்கதுரை! நான் சொல்வதைக் கேட்காவிட்டால் சோமையாவை விட்டு உன் முதுகுத் தோலை உரித்து விடச் சொல்லுவேன்" என்றார்.

"எங்கம்மாவை விட்டு நான் எப்படி வருவேன்? அப்பாவையும் நீங்கள் ஜெயிலில் போட்டு விட்டீர்கள். என் அன்னை என்னைப் பார்க்காவிட்டால் செத்தே போய்விடுவாளே, ஸார்" என்றேன். என்னுடைய படபடப்பில் என்ன சொல்கிறேன் என்றே எனக்குத் தெரியவில்லை.

"உங்கம்மா செத்துத்தான் போகட்டுமே. அவள் போய்விட்டால் இந்த உலகத்துக்கு மகத்தான நஷ்டம் ஏற்பட்டுவிடுமோ?"

அதைக் கேட்டதும் என் உடலில் உள்ள ஒவ்வொரு நரம்பும் முறுக்கேறி விட்டது. என் அருமை அம்மாவை, ரொம்ப நல்லவளான என் அம்மாவைப் பற்றி அவர் அப்படிச் சொன்னதும் என்னால் பொறுக்க முடியவில்லை.

இவரை அடித்து விட்டால் என்ன என்று தோன்றியது. பக்கத்தில் கிடந்த மேஜைமீது என் கண் சென்றது. அதன் மீது சில காகிதங்களும், பேனாவும்

வைக்கப்பட்டிருந்தன. காகிதம் பறக்காமல் இருக்க அதன்மீது கண்ணாடியால் செய்த "பேப்பர் வெயிட்" வைக்கப்பட்டிருந்தது. 'அதை எடுத்து அவர் மீது வீசி விட்டால் என்ன?' என்ற எண்ணம் எனக்கு எழுந்தது.

அதற்குள் சகுவரமூர்த்தி தொடர்ந்தார். "திருட்டுப் பயலுடைய மகனுக்குக்கூட, கௌரவத்துக்கும் வீம்புக்கும் குறைவில்லை. இந்தப் பையனுக்கு இருக்கும் திமிரைப் பார், சோமையா! இவனுடைய அம்மாவைப் பற்றி ஒன்றும் சொல்லக் கூடாதாம். இத்தனை சின்னப் பையன் இன்று என்ன கலாட்டா பண்ணி விட்டான்? எல்லாம் அந்த ரௌடியின் பிள்ளை தானே? கந்தசாமி திருட்டுத்தனம் பண்ணி விட்டு என் தலையை வேறு சேர்த்து உருட்ட வில்லையா?" என்றார்.

அதற்கு மேல் என்னால் பொறுக்க முடியவில்லை. என் அப்பாவை இவன் காட்டிக் கொடுத்ததுமல்லாமல் இப்படிச் சொல்கிறானே என்று எனக்குத் தாங்க முடியாமல் கோபம் வந்தது. சடார் என்று பாய்ந்து அந்தப் பேப்பர் வெயிட்டை எடுத்து சகுவரமூர்த்தியை நோக்கிப் பலம் கொண்ட மட்டும் வீசினேன். அது அவருடைய தலையின் மேல் உரசிக் கொண்டு போய், அவருக்குப் பின்னால் கணீரென்ற சத்தத்துடன் விழுந்து நொறுங்கிச் சிதறியது.

சோமையா பாய்ந்து ஓடி வந்தான். "டேய்! என்னடா கழுதை? என்ன செய்தே!" என்று சொல்லிக் கொண்டே என்னுடைய இரண்டு கைகளையும் பிடித்து முறுக்கினான். நான் வலி தாங்காமல் துடித்துப் போனேன். "ஐயோ! ஐயோ!" என்று கதறினேன்.

சகுவரமூர்த்தி எழுந்து நின்றவர் மறுபடியும் உட்கார்ந்தார்.

"சோமையா இந்தப் பையன் நல்லபடியாகச் சொன்னால் செய்ய மாட்டான். ரொம்பத் துள்ளுகிறான். நீ உன் காரியத்தைச் செய்" என்றார்.

சோமையா சுவரில் தொங்கிய சாட்டையை எடுத்துக் கொண்டு வந்தான். என் உடம்பிலுள்ள ரத்தமெல்லாம் அதைப் பார்த்த உடனே சுண்டிப் போய் விட்டது.

'இவர் கேட்பது போல் எழுதிக் கொடுத்து விட்டால் என்ன? இந்தச் சாட்டையால் அடி வாங்குவதை விட எழுதிக் கொடுத்து விடலாம். வாத்தியாரையா எப்படியாவது காப்பாற்றுவார்' என்று எண்ணினேன்.

உடனேயே அந்த எண்ணத்திலிருந்த கோழைத்தனம் என் உடலைக் கூசச் செய்தது.

சகுவரமூர்த்தி அப்போது என்னைப் பார்த்து, "சொன்னதைக் கேட்கிறாயா? இல்லாவிட்டால் சாட்டையால் அடி வாங்குகிறாயா?" என்று கேட்டார்.

சோமையா என்னை நெருங்கி வந்தான். சாட்டையை ஒரு சொடக்குச் சொடக்கினான். என்னைப் பார்த்து "அன்னிக்கி வெறும் மாட்டை அடிக்கிற சாட்டையாலே அடி வாங்கினே. இன்னிக்கித்தான் நிஜமான அடி வாங்கப் போறே" என்றான்.

எனக்கு எப்படி இருந்திருக்கும் என்று யாராலும் ஊகிக்கக் கூட முடியாது. அந்த நிலையில் எப்போதாவது இருந்திருந்தால்தான் மனத்தின் கொந்தளிப்புகள் புரிய முடியும்.

எத்தனையோ வருஷங்களுக்குப் பிறகு இன்று அதை நினைக்கும்போது கூட ஒருவிதமான நடுக்கம் ஏற்படுகிறதே! அன்று எப்படி இருந்திருக்கும்?

"நீங்கள் சொன்னபடி செய்கிறேன்" என்று சொல்வதற்காக நான் வாயைத் திறந்தேன். அந்தச் சமயத்தில் முற்றத்தில் ஒரு பெரிய வஸ்து தொத்தென்று விழுந்தது. முதலில் ஏதோ கனமான வஸ்து என்றுதான் தோன்றியது. ஒரு கணத்திற்குப் பிறகு அது ஒரு மனித உருவம் என்று தெரிந்தது. சோமையாவின் ஓங்கிய கை தாழ்ந்தது. சகுவரமூர்த்தி எழுந்து நின்றார். (தொடரும்)

# தொண்டையில்

# கரகரப்பு

இருமல் வருவதன் அறிகுறியாகும். ஜலதோஷம் முற்றினால் கொடுமையான இருமலை விளைவிக்கும். கொடுமையான இருமல் பிராங்கைடிஸ்ஸை விளைவிக்கும். பிராங்கைடிஸ்ஸோ கொடிய ஈரல் நோயை விளைவிக்கக்கூடும். வாராந்திரங்களாக படுத்த படுக்கையாய் டாக்டர் வைத்தியம் செய்யும்படி நேரிடும். இதனால் உத்தியோகத்திற்குப் போக முடியாமலிருக்க நேரும். இவை யாவும் தொண்டை கரகரப்பிலிருந்து ஆரம்பம். இதை உடனடியாக நிறுத்துவது பெர்டுஸின் டெஷ்னர். இது கக்குவான் இருமல் உட்பட எல்லா இருமல்களையும் உடனே நிறுத்துகிறது. இது யாதொரு அபாயமுமற்றது. இது முழுத்திறனுள்ளது. இதை குழந்தைகள், பெரியோர் மற்றும் வயோதிகர்கள் யாவரும் சாப்பிடவேண்டும்.

**இன்றே**

**பெர்டுஸின்**

**"டெஷ்னர்"**

**வாங்குங்கள்**



எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கிறது

இடாபா லிமிடெட், ஷான். லீஷென்ஸ்மன் ஸ்விஸ் கஸ்டம் அண்ட் இகனமிக் டெரிடெரி இவர்களின் அனுமதியின் பேரில் இன்பா லிமிடெட். தபால் பெட்டி 1041, பம்பாய்-1, இவர்களால் இந்தியாவில் தயாரிக்கப்பட்டது.

ILY.11. TAM

# சுத்தமான முழு நறுமணமுள்ள காப்பி

நீங்கள் இலகுவாக வாங்கக் கூடிய விலையில்!









**Stanes**

ஸ்டேன்ஸ்
சிகப்பு லேபிள்
சுத்தமான காப்பி



ஸ்டேன்ஸ் சிகப்பு லேபிள் சுத்தமான காப்பி உங்களுக்கேற்ற சிறந்த நறுமணமுள்ள பலமான பானத்தை அளிப்பதாகும். அநேக டம்ளர்கள் காப்பியையும் அளிக்கிறது. நீங்கள் காப்பி வாங்கும்பொழுது, ஸ்டேன்ஸ் என்ற பெயரைப் பார்த்து வாங்குங்கள். இது உங்களுக்கு உயர்ந்த ரகத்திற்கு உத்திரவாதம்.
ஸ்டேன்ஸ் சிகப்பு லேபிள் சுத்தமான காப்பி காற்று புகாத ½, 1, 3, 7, 14, 30 பவுன்டு டின்களில் புத்தம் புதியதாக பாக் செய்யப்பட்டு உங்களுக்கு கிடைக்கின்றன.

**எல்லோரும் வாங்கக் கூடிய நல்ல காப்பி!**

## தி யுனைடெட் காப்பி சப்ளை கம்பெனி லிமிடெட்,

**கோயம்புத்தூர், தென் இந்தியா**

திருநெல்வேலி ஏஜண்டு :

மிஸ்டர் எஸ். சோமசுந்தரம் பிள்ளை, ஜெனரல் மெர்ச்சண்ட்
150, ஹைரோடு, திருநெல்வேலி.

தூத்துக்குடிக்கு டிஸ்ட்ரிபியூட்டர்கள் :

மிஸ்டர் எம். ஜே. பர்னாண்டஸ், மான்யூபாக்சரர்ஸ் ரெப்ரஸெண்டேடிவ்
ஜாஸ்மின் ஹோம், தூத்துக்குடி.

# வாழ்வின் இன்பம்

## புஷ்யன்

**சங்கர் :**

அன்று வந்த கடிதத்தைக் கண்டதும் எனக்கு ஏற்பட்ட ஆனந்தத்துக்கு அளவே இல்லை. வெகு நாட்களாக எங்கே இருக்கிறான், என்ன செய்கிறான் என்ற தகவலே இல்லாமல் இருந்த பால்ய நண்பன் ராகவனிடமிருந்து கடிதம் வந்திருந்தது. அவன் பம்பாயிலிருக்கிறானாம். ஏதோ ஒரு பெரிய கம்பெனியில் வேலையிலிருக்கிறானாம். மாதம் மூந்நூறு ரூபாய் சம்பளமாம். கல்யாணம் ஆகி விட்டதாம். இன்னும் என்னென்னவோ எழுதியிருந்தான்.

நானும் ராகவனும் மாயவரத்தில் பால்யம் முதல் ஒன்றாய் வளர்ந்தோம், பழகினோம். எங்களிருவருக்குமிடையில் எந்தவிதமான சண்டை சச்சரவும் நிகழ்ந்ததே கிடையாது. பள்ளிக்கூடத்தில் அவன் படிப்பில் மிகவும் கெட்டிக்காரனாயிருந்தான். கணக்கில் சூரப் புலி. நூறு மார்க்குகளையும் அனாயாசமாகத் தட்டிக் கொண்டு போய் விடுவான். அவனோடு தான் நான் எல்லாப் பாடங்களையும் படிப்பேன். கணக்கு என்றால் எனக்குக் கொஞ்சம் கடினம்தான். அவனிடம் கணக்கெல்லாம் கேட்டுத் தெரிந்து கொள்வேன்.

நான் ஐந்தாம் பாரம் படிக்கும்போது அவனுடைய தகப்பனாருக்கு மாயவரத்திலிருந்து மாற்றலாகி விட்டது. அவன் ராமநாதபுரத்திலிருந்த போது அடிக்கடி கடிதங்கள் எழுதி வந்தான். நானும் பதில் எழுதி வந்தேன். அப்புறம் கொஞ்ச நாட்களுக்கு நான் எழுதிய கடிதங்களுக்குப் பதிலே இல்லாமல் இருந்தது. ஏன் என்று புரியவில்லை. இரண்டு வருடங்கள் கழித்து ராமநாதபுரத்துக்கு ஏதோ காரியமாய்ப் போயிருந்த போது அவனுடைய தகப்பனார் வேலை செய்து வந்த காரியாலயத்துக்குப் போய் விசாரித்தேன். அவர் அங்கிருந்து மாற்றலாகிப் போய் விட்டதாக அறிந்தேன். அப்புறம் ராகவனுடைய விலாசமே தெரியவில்லை.

நான் மேலே திருச்சி ஸெண்ட் ஜோஸப் கல்லூரியில் படித்தேன். அப்புறம் சென்னையில் வேலைக்கமர்ந்து கல்யாணமுமாகிக் குடித்தனம் செய்து வருகிறேன்.

அவனிடமிருந்து கடிதம் வந்ததைவிடச் சந்தோஷமான சமாசாரம் என்னவென்றால் அவன் நாளை மாலை ஒரு மாத லீவில் வருகிறானாம். 'தம்பதி சமேதராய் வந்து உன் வீட்டில் ஒரு மாதம் தங்கி யிருக்கப் போகிறேன்' என்று எழுதியிருக்கிறான்.

சாயந்திரம் வீட்டுக்கு வந்ததும் கல்யாணியிடம் என் பால்ய நண்பன் வருகிறான் என்னும் சந்தோஷச் செய்தியைக் கூறி விட்டேன்.

அடுத்த நாள் நான் ஸ்டேஷனுக்குச் சென்று பம்பாய் எக்ஸ்பிரஸ் வரும் பிளாட்பாரத்துக்குப் போய் நின்று கொண்டு வண்டி வரும் சமயத்தை வெகு ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்.

பிளாட்பாரத்தின் முனையில் வண்டியின் இன்ஜின் தெரிந்ததும் எனக்கு ஒரு புதிய பிரச்னை உண்டாயிற்று. 'நாம் ராகவனைப் பார்த்து அனேக வருடங்களாகி விட்டனவே! அவனுடைய அடையாளம் எவ்வளவோ மாறி விட்டிருக்குமே. எப்படிக் கண்டு பிடிப்பது!' என்ற பிரச்னைதான். 'நாம் அவனைத் தேடிக் கொண்டிருக்கும் போது அவன் பாட்டுக்கு நேரே வீட்டுக்குப் போய் நம்மை வரவேற்கும்படியாகி விட்டால்!' என்று யோசிக்கும் போதே வண்டி வந்து நின்று விட்டது. நான் வண்டிகளைக் கவனித்தேன்.

ஒரு இரண்டாம் வகுப்புப் பெட்டியின் முன்னால் போகும்போது அந்தப் பெட்டியிலிருந்து இறங்கிக் கொண்டிருந்த பிரயாணியைக் கண்டதும் நான் ஒருகணம் கற்சிலையாய்த் திகைத்து நின்று விட்டேன்.

"ஏன் சங்கரா, அப்படியே கல்லுப் பிள்ளையார் மாதிரி நின்று விட்டாயே! என்னைத் தெரியவில்லையா!" என்று கேட்டுக் கொண்டே ராகவன் என் பின்னால் வந்து என் முதுகில் இலேசாகத் தட்டினான்.

"ரமா, இவன்தான் என் நண்பன் சங்கரன். நம்முடைய உபசரணையாளன்" என்றான் ராகவன், என்னை அறிமுகப்படுத்தி.

நான் மறுபடி ரமாவைப் பார்த்தேன். அவள் ஒரு புன்னகை புரிந்தாள். நானும் பதிலுக்கு ஒரு புன்னகை புரிந்தேன். பிறகு டாக்ஸியில் ஏறி வீட்டுக்கு வந்தோம்.

டாக்ஸி வீட்டு வாசலில் நின்றது. கல்யாணி வெளியே நின்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தவள் ரமா காரிலிருந்து இறங்கியதைக் கண்டதும், "ரமா......நீயா......!" என்று ஆச்சரியத்துடன் கூவினாள்.

"அடி......கல்யாணி......நீயா...என்ன ஆச்சரியம்! எதிர்பாராத சந்திப்பாய் விட்டதே..." என்று கூவிக் கொண்டே ஓடிப்போய் அவளைக் கட்டிக் கொண்டாள் ரமா.

அடுத்த கணம் கல்யாணி ராகவனைப் பார்த்தாள். பார்த்ததும் திடுக்கிட்டு நின்று விட்டாள் சிறிது நேரம். பிறகு கண்ணைத் தாழ்த்திக் கொண்டு உள்ளே போனாள்.

**கல்யாணி :**

நான் ரமாவை இன்று காண்பேன் என்று கனவிலாவது எதிர்பார்த்திருக்க முடியுமா! என் கணவர் தம்முடைய நண்பர் ராகவன் என்பவர் பம்பாயிலிருந்து தம் மனைவியுடன் ஒரு மாதம் வந்து தங்கி யிருக்கப் போகிறார் என்று கூறியபோது நான் யாரோ என்றுதான் நினைத்தேன். அவர் நண்பரின் மனைவியும் வரப்போகிறாள் என்றதும் எனக்குச் சந்தோஷம் உண்டாகியது. எனக்கு ஒரு புது சிநேகிதி கிடைக்கப் போகிறாள் என்று ஆவலுடன் எதிர்பார்த்தேன்.

டாக்ஸி வந்து வீட்டு வாசலில் நின்றது. அதிலிருந்து இறங்கிய பெண்ணைப் பார்த்ததும் ஆச்சரியத்தால் ஸ்தம்பித்து விட்டேன். என் மனச் சந்தோஷத்தை அடக்கமாட்டாமல், "ரமா!" என்று கூவி விட்டேன். புது மனிதர்-

அவளுடைய கணவர்-இருக்கிறார் என்பதையும் மறந்து விட்டு, அவளும் தன் ஆவலை அடக்க மாட்டாமல் ஓடி வந்து என்னைக் கட்டிக் கொண்டாள். அப்புறம்தான் அவளுடைய கணவன் ராகவனை மெல்ல ஏறிட்டுப் பார்த்தேன்.

என் கணவர் தம் நண்பர் பெயர் ராகவன் என்று கூறியபோது நான் ஒன்றும் சந்தேகப் படவில்லை. எத்தனையோ ராகவன்களில் அவரும் ஒருவரா யிருப்பார் என்றுதான் நினைத்தேன். உண்மையில் இந்த ராகவனைப் பற்றிய எண்ணமே உண்டாகவில்லை.

நான் அப்போது சென்னையில் காலேஜில் படித்துக் கொண்டிருந்தேன். எங்கள் வீட்டுக்கு எதிர் வீட்டில் புதிதாகக் குடி வந்தார்கள். வண்டியில் சாமான்களுடன் வந்து இறங்கிய போது நான் வாசலில் நின்று கொண்டிருந்தேன். வண்டியிலிருந்து சாமான்களை இறக்கிக் கொண்டிருப்பதைக் கவனித்துக் கொண்டு இருந்தார் ஒரு வாலிபர். அவர் செக்கச் செவேலென்று இருந்தார். வேஷ்டியை மடித்து முழங்காலுக்கு மேல் கட்டிக் கொண்டு, தோளில் ஒரு துண்டுடன் நின்று கொண்டிருந்தார்.

அடுத்த நாள் நான் காலேஜுக்குப் புறப்பட்ட சமயத்துக்குச் சரியாக எதிர் வீட்டு வாலிபரும் கையில் புத்தகங்களுடன் வெளி வந்தார். நான் முன்னால் பதட்டத்துடன் நடந்தேன். பின்னால் அவர் வேகமாக என் அருகில் வந்து, "நீங்கள் எதிர் வீட்டில்தானே இருக்கிறீர்கள்!" என்று கேட்டார்.

"ஆமாம்" என்றேன்.

அதற்குமேல் பேச்சு வளர்ந்தது. இருவரும் ஒருவரைப் பற்றி ஒருவர் எல்லா விவரங்களையும் அறிந்து கொண்டோம். எங்களுடைய நட்பு வளர்ந்தது. தினம் சாயந்திரம் காலேஜ் விட்டதும் கடற்கரையில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்து விட்டு வீடு திரும்புவோம். எங்கள் நட்பை என் தகப்பனார் ஒரு விதமாக அறிந்தார். அறிந்து திருப்தியும் கொண்டார். என்னை அவருக்கே விவாகம் செய்து வைக்கத் தீர்மானித்து ராகவனுடைய தகப்பனாரிடம் பேசினார். ஆனால் ராகவனுடைய தகப்பனார் இந்த சம்பந்தத்துக்கு ஒப்பவில்லை. அவருடைய சிநேகிதர் பெண் ஒருத்தி இருக்கிறாள் என்றும் அவளைத்தான் ராகவனுக்கு விவாகம் செய்துவைக்கப் போவதாகவும் கூறி விட்டாராம்.

என் மனம் அந்த விஷயத்தைக் கேட்டதும் சொல்லொணாத துன்பத்தை யடைந்தது. அடுத்த நாள் ராகவன் காலேஜுக்குப் புறப்பட்டபோது நான் கூடப் போகவில்லை. அவர் புறப்படுவதற்கு முன்பாகவே போய்விட்டேன். அவரைக் காணவே எனக்கு ஏனோ மிகவும் கஷ்டமா யிருந்தது.

என் துரதிர்ஷ்டம், என் தகப்பனார் திடீரென்று மாரடைப்பால் இறக்க நேர்ந்தது.

நாங்கள் அநாதையானோம். எங்களுக்குச் சென்னையில் ஒருவரும் வேண்டியவர்கள் இடையாது. சிதம்பரத்தில் இருந்த என் மாமா வீட்டுக்குப் போனோம். எனக்கு வரன் தேடினார், என் மாமா. என் மனத்தில் ராகவனுடைய உருவமே ஆழப் பதிந்திருந்தது. நான் விவாகமே வேண்டாம் என்று என் தாயாரிடம் கூறினேன். ஆனால் என் மாமாவும் தாயாரும் கேட்கவில்லை.

என் மாமா, சங்கரன் என்பவரை—இவரைத் தான் — மாப்பிள்ளையாகத் தேர்ந்தெடுத்தார். சம்பிரதாய முறையில் எல்லாம் நடைபெற்றன. பெண் பார்ப்பது, நிச்சயதார்த்தம் முதலியவை தான். நான் அவரைப் பார்த்தேன். அழகாகத் தான் இருந்தார். இருந்தும் என் உள்ளம் ராகவனைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தது.

விவாகம் முடிந்து என் கணவருடன் சென்னைக்கு வந்து விட்டேன். முதலில் எங்கள் குடும்பத்தில் கண்ணாமூச்சி விளையாட்டு நடந்து கொண்டிருந்தது. என் கணவரும் முதலில் என்னிடம் உதாசீனமாக இருந்தார். நாளும்



ஏதோ யந்திரம்போல் தினசரி கடமைகளைக் கவனித்து வந்தேன். அவர் என்னிடம் வந்து ஆசை வார்த்தைகளைக் கொட்டவில்லை. சாயந்திரம் கடற்கரை, சினிமா என்று அழைத்துப் போக முன்வரவில்லை. சாயந்திரம் ஆபீஸிலிருந்து எட்டு மணிக்குத்தான் வருவார். ஒரு வேளை தப்பித் தவறிச் சீக்கிரம் வந்து விட்டால் காப்பியைக் குடித்து விட்டு உடனே வெளியே போய் விடுவார். இரவு வந்து சாப்பிட்டதும் படுத்து விடுவார். அல்லது ஏதாவது படித்துக் கொண்டிருப்பார், பத்துப் பதினோரு மணி வரை.

அவர் என்னிடம் வலிய வருவார். நாம் அவரை வெறுத்து ஒதுக்க வேண்டும், எதிலும் அக்கறை காட்டாமல் ஒதுங்கி யிருக்க வேண்டும் என்று எண்ணினேன் முதலில். ஆனால் அவரே ஒதுங்கி ஒதுங்கிப் போவதைக் கண்டு எனக்கு ஆச்சரியமா யிருந்தது.

ரமா :

பிறந்தது முதல் எட்டாம் வகுப்பு படித்து முடியும் வரை ஒன்றாய் வளர்ந்து, நெருங்கிப் பழகிய சிநேகிதிகள் நானும் கல்யாணியும். இருவரும் மிகவும் நெருங்கி அக்கா, தங்கைபோல் இருந்தோம். கல்யாணி என்னைவிட ஒரு வயது பெரியவள். ஆனாலும் ஒரே வகுப்பில் நாங்கள் படித்து வந்தோம்.

இவ்விதம் ஒரே மனத்துடன் பதின்மூன்று வயது வரை பழகிய நாங்கள் பிரிய வேண்டி நேர்ந்து விட்டது. என் தகப்பனார் வேலை செய்து வந்த பாங்கியின் கிளை ஒன்றைப் புதிதாகத் திருச்சியில் திறந்தார்கள். அதற்கு என் தகப்பனாரை மாற்றினார்கள்.

திருச்சியில் நாங்கள் குடியிருந்த வீட்டுக்காரரின் பிள்ளைதான் சங்கரன். அவர் திருச்சியில் காலேஜில் படித்து வந்தார். நாங்கள் குடிவந்த அன்று நான் கையில் கூஜாவுடன் உள்ளே நுழைந்தேன். அப்போது அவர் தம் அறையிலிருந்து என்னை உற்றுப் பார்த்தார். நான் அறையின் உள்ளே ஓடி விட்டேன். ஒரே வீட்டில் இருந்ததால் அடிக்கடி நாங்கள் பார்த்துக் கொண்டோம்.

என்னுடைய மனத்தில் எப்போதும் சங்கரின் தியானமாகவே இருந்தது. பள்ளிக்கூடத்திலிருந்து எப்போது வீட்டுக்கு வருவோம் என்ற நினைவாகவே உள்ளம் அடித்துக் கொண்டிருக்கும்.

என் தகப்பனாருக்கு மறுபடி சென்னைக்கே மாற்றலாகி விட்டது. பிரிய மனமின்றிப் பிரிந்தோம். அன்று புறப்படுவதற்கு முதல் நாள்தான் அவர் தம் உள்ளத்தை வெளியிட்டுப் பேசினார். "என்னை மறந்துவிட மாட்டாயே, ரமா?" என்று தழுதழுக்கக் கேட்டார். எனக்கு அவரைப்பிரிவதென்று எண்ணும் போதே அழுகை வந்து விட்டது. என் அழுகையைக் கண்டதும் அவர் அருகில் வந்து தன் மேல் துண்டினால் என் கண்ணீரைத் துடைத்தார். அப்போது என் உள்ளத்தில் ஏற்பட்ட உணர்ச்சியை எப்படி வருணிப்பது!

சென்னைக்கு வந்ததும் என் தகப்பனார் என் விவாகத்தைப் பற்றிக் கவனிக்க ஆரம்பித்தார். அவருடைய நண்பர் மகாதேவன் என்பவரின் பிள்ளை ராகவனைத்தான் என் கணவராக நிச்சயித்திருக்கிறார் என்பதை அறிந்ததும் என் மனம் விவரிக்க ஒண்ணாத வேதனையை அடைந்தது. நான் மெதுவாக என் தாயாரிடம் என் உள்ளத்தை வெளியிட்டேன். ஆனால் என் தாயார், "உன் அப்பாவின் பிடிவாதம்தான் தெரிந்திருக்கிறதே, ரமா. ராகவனும் நன்றாகப் படித்திருக்கிறான். அழகும் இருக்கிறது. செக்கச் செவேலென்று ராஜா மாதிரி இருக்கிறான்..." என்று கூறினாள்.

கடைசியில் நான் ராகவனைத்தான் மணந்தேன். என் மனம் கடல்போல் கொந்தளித்துக் கொண்டிருந்தது.

என் கணவருக்குப் பம்பாயில் வேலையாகி விட்டது. அவருடன் பம்பாய் சென்றேன். முதலில் எங்கள் வாழ்க்கை உப்புச் சப்பற்று இருந்தது. அவரும் முதலில் பட்டும் படாமலேயே இருந்தார். ஒரு நாள் அவராகவே வந்து பம்பாயைச் சுற்றிப் பார்க்க அழைத்துப் போனார். மலபார் ஹில், பம்பாய்க் கடற்கரை, மகாலக்ஷ்மி ஆலயம் எல்லாம் பார்த்து விட்டு வந்தோம். மெதுவாகப் புதிய சூழ்நிலையில் சங்கரின் உருவம் என் மனத்திலிருந்து மறைய ஆரம்பித்தது. என் கணவர் என் மீது கொண்ட அன்பைக் கண்டு மகிழ்ந்தேன்; நினைந்தேன். என் தேவைகளையெல்லாம் கவனித்து எனக்குக் குறையென்பதே இன்றிக் கவனித்துக் கொண்டார். எப்போதும் ரமா, ரமா என்று கூப்பிட்டுக் கொண்டே சமையலறைக்கு வந்து பேச ஆரம்பித்து விடுவார். என் மனமும் அவைகளை ரசித்தவாறே ஆனந்தமாய் வேலைகளில் ஈடுபடும்.

தம் பால்ய நண்பர் சங்கரைக் காணச் சென்னைக்குப் போவதாகக் கூறியதும் என் உள்ளம் உவகை கொண்டது. சங்கர் என்ற பெயரைக் கேட்டதும் 'அவ'ராகத்தான் இருக்குமோ என்ற சந்தேகம் ஏற்பட்டது.

சென்னை சென்ட்ரல் ஸ்டேஷனில்





பம்பாய்த் தமிழ் சங்கத்தினர் தமிழ்விழாவை அக்டோபர் 28த் தேதியிலிருந்து மூன்று தினங்கள் வெகு விமரிசையாகக் கொண்டாடினர். பம்பாய் முதன் மந்திரி திரு மொரார்ஜி தேசாய் அவர்கள் தமிழ் விழாவைத் துவக்கி வைத்தார். தமிழ் விழாவில் தூத்துக்குடி வ. உ. சி. கல்லூரித் தலைவர் பேராசிரியர் அ. சீனிவாச ராகவன் அவர்கள் 'என்றுமுள தென் தமிழின்' பெருமையை வட நாட்டாரும் நன்கு உணரும்படியாக எடுத்துரைத்தார். திரு அ. சீ. ரா. பேசுவதையும், அவருக்கு அருகில் பம்பாய் முதன் மந்திரி அமர்ந்திருப்பதையும் படத்தில் காணலாம்.

---

எங்கள் வருகையை எதிர்பார்த்துக் கொண்டிருந்த சங்கர் என்னைத்தான் முதலில் பார்த்தார். என்னைக் கண்டதும் திடுக்கிட்டார். என் உள்ளமும் முதலில் சிறிது படபடத்தது. பிறகு அடங்கி விட்டது.

சங்கரைத்தான் நான் ஒருவாறு எதிர் பார்த்தேனே அன்றிக் கல்யாணியை எப்படி எதிர் பார்த்திருக்க முடியும்! சங்கரின் மனைவியாக என் கல்யாணி இருப்பதைக் கண்டதும் ஏற்பட்ட உவகை சொல்லில் அடங்காது.

அன்று இரவு சாப்பிட்டு முடிந்ததும் கல்யாணியும், நானும் வெகு நேரம் பேசிக் கொண்டிருந்தோம்.

கல்யாணி சொன்னாள்: "ரமா, நாம் இருவரும் சிறிய வயதில் ஒரே உள்ளத்துடன், ஒரேமாதிரி உடையணிந்து கொண்டு ஒரே மாதிரி பின்னல் கூடப் போட்டுக் கொண்டு இருந்தோம். எல்லோரும் நம்மை உடன் பிறந்த சகோதரிகளாகவே எண்ணினார்கள். ஆனால் நம்முடைய வாழ்க்கையும் ஒரே விதமாய் அமையும் என்று யாராவது எதிர் பார்த்திருக்க முடியுமா!"

**ராகவன்:**

இந்த விசித்திரமான சக்கரத்தைப் பற்றி நினைக்கும்போது வேடிக்கையாகத்தான் இருக்கிறது. எத்தனையோ காதல் நவீனங்களில் படித்திருக்கிறேன். அவைகளில் இத்தனை அற்புதமான நிகழ்ச்சிகள் இருந்ததைக் காணவில்லை. நான்கு பேர் காதல் கொண்டோம். ஒருவருடைய காதலும் நிறைவேறவில்லை. ஆனால் ஒருவர் காதலித்த பேரை மற்றவர் மணந்து அது ஒரு சக்கரமாக நான்கும்பேர்களுடனேயே சுற்றிக் கொண்டு விட்டது. இது வேடிக்கையாக இல்லையா!

நான் ரமாவுடன் குடித்தனம் ஆரம்பித்த போது கல்யாணியை என்னால் கலபத்தில் மறக்க முடியவில்லை. அவளுடைய இனிய மனமோகன உருவம் தோன்றி வாட்டி வந்தது. அதே சமயம் ரமாவின் வாழ்க்கையைப் பற்றியும் எண்ணினேன். அவளை நான் உதாசீனம் செய்தால் அவள் உள்ளம் எவ்வளவு புண்படும் என்று யோசித்தேன்.

அதனால் இருவரும் நெருங்கிப் பழகினோம். ஒருவருக்கொருவர் ஆதரவாக இருந்தோம். என் மனத்திரையிலிருந்து கல்யாணியின் சித்திரம் வெயில் பட்டு அழிவதுபோல் அழிந்து கொண்டு வந்தது.

என் மனம் இப்போது, ஐந்து வருடங்களுக்குப் பிறகு கல்யாணியை எதிர்பாராத விதமாகக் கண்டு விட்டதற்காகத் தடுமாறவில்லை.

சங்கரும் தன் வாழ்க்கையைப் பற்றி என்னிடம் கூறினான். அதிலிருந்து கல்யாணியும் என்னைப்போல் காதல் ஏமாற்றத்தை ஒருவாறு மறந்து தன் கணவனுடன் அன்பு வாழ்க்கையை நடத்துகிறாள் என்பதை நான் அறிந்து கொண்டேன்.

இம்மாதிரி காதலில் நால்வருக்கும் ஏமாற்றம் உண்டாகியும் எப்படி அன்னியோன்னியமாய் வாழ்க்கையை நடத்திக் கொண்டு போக முடிகிறது! இது ஆச்சரியமில்லையா!

**சங்கர்:**

ஆம், அப்படித்தான் கேட்டான் ராகவன். அது ஒரு ஆச்சரியந்தான். காதலில் ஏமாற்றம் நால்வருக்கும் இருந்தும் வாழ்க்கை யாதொரு காப்புமின்றி, காதல் வாழ்க்கையைப் போலவே இருந்து வருகிறது என்றால் அது ஆச்சரியமான விஷயம்தானே!

இதிலிருந்து நான் ஒரு உண்மையைத் தெரிந்து கொண்டேன். இரண்டு காதல் உள்ளங்கள் ஒன்று சேர்ந்தால்தான் வாழ்க்கையில் இன்பம் துய்க்க முடியும் என்பதல்ல; காதல் கனவு முறிந்து விட்ட பொழுதிலும் கடமை உணர்ச்சியை உணர்ந்து அதற்கேற்ப நடக்க முற்பட்டால், அப்பொழுதும் வாழ்க்கை வளம் பெற முடியும்; இன்பமயமாகித் திகழ முடியும் என்பதுதான் நான் அறிந்த அந்த உண்மை. நாங்கள் நால்வருமே அதற்கு உதாரணமாக இருக்கும் பொழுது வேறு எடுத்துக் காட்டுக்குப் போவானேன்!

ரமாவும், ராகவனும் இன்று ஊருக்குப் புறப்பட்டுப் போகின்றனர். ஒரு மாத காலம் வெகு சந்தோஷமாகக் கழிந்து விட்டது. நேரம் போனதே தெரியவில்லை. ரமாவும், ராகவனும் நேசித்து வாழ்வதைக் கண்டு மனம் மிகவும் சந்தோஷமடைகிறது. வாழ்வில் எவ்வளவோ ஏமாற்றங்கள் எதிர்பாராமல் ஏற்படுகின்றன. அவைகளுக்கெல்லாம் மனமொடிந்து விடாமல், இருப்பதைக் கொண்டு இன்பமாய், சந்தோஷமாய், திருப்தியுடன் வாழ்க்கையை நடத்திக் கொண்டு போவதுதான் மனிதனின் லட்சியம். அந்தக் குணம் பாரத தேசத்தில் வேரூன்றியிருக்கிறது. அதனால்தான் நம் நாட்டில் குடும்பங்களில் இன்பம் நிலவி வருகிறது.

# கமலத்தின் கணவன்



ர.சு. நல்லபெருமாள்

நீதிமன்றத்தில் தீர்ப்புக் கூறும் போது கமலம் அலறிய அலறல் அவனுடைய இதயத்தையே கசக்கிப்பிழிந்து விட்டது. அதுவரை கண்ணீரே சிந்தியறியாத தானுவின் கண்களில் கண்ணீர் மளமளவென்று பெருகியது. அவனும் மனிதன் தானே? விதிவசமாகத் திருட்டைத் தொழிலாகக் கொண்டு விட்டதால் இயற்கையான மனித உணர்ச்சிகள் மறைந்தா போய் விடும்? அவனுக்கும் பல ஆசைகள் உண்டு. சொந்தம் உண்டு. பந்தம் உண்டு. கல்நெஞ்சன், ஈவிரக்கமற்றவன், திருடன் என்றெல்லாம் பெயரெடுத்தாலும் உள்ளம் என்று ஒன்று இருக்கிறதல்லவா? அந்த உள்ளந்தானே மனிதனை இந்த மண்ணில் ஒட்ட வைக்கிறது?

அவனுக்கு ஏழு வருஷங்கள் சிறைத் தண்டனை கிடைத்தது. ஏழு என்ன, எழுபது வருடங்கள் கிடைத்தாலும் தானு கலங்கியிருக்க மாட்டான். ஆனால், கமலத்தின் நிலையையும், அவள் இடுப்பிலிருந்த ஒரு வயதுக் குழந்தையின் நிலையையும் எண்ணும்போது மனம் துடித்து விட்டான். அப்படியானால் இதையெல்லாம் எண்ணிப் பார்க்காமலா அவன் அந்தத் தொழிலை மேற்கொண்டான்? இல்லை. சமூகம் அவனை ஒரு மனிதனாக வாழ விடாதது தான் அவன் அந்தத் தொழிலை மேற்கொண்டதற்குக் காரணம்.

அவன் அந்தத் தொழிலில் இறங்கியதுமே சட்டம் அவனைத் தீண்டிவிட்டது. கம்பி எண்ணும்படியாயிற்று. அப்படிப்பட்ட அவனிடம் கமலம் வந்து சேர்ந்ததே ஒரு வேடிக்கையான கதை.

கமலம் தேர் விழா பார்க்கச் சென்றிருந்தாள். கூட்டம் நெரிந்துக் கொண்டிருந்தது. கமலம் வைத்த கண் வாங்காமல் தேரைக் கவனித்துக் கொண்டிருந்தாள். திடீரென்று அவள் கழுத்தில் கை படுவதுபோலிருந்தது. தடவிப் பார்த்தாள். சங்கிலியைக் காணோம். திடுக்கிட்டுத் திரும்பினாள். தானுவின் கையில் ஒரு கணம் அந்தச் சங்கிலி தெரிந்தது. "திருடன்!" என்று கூவி விட்டாள். தானு கையும் களவுமாக அகப்பட்டுக் கொண்டான். ஆளுக்கு ஆள் அவனை அடிக்க ஆரம்பித்து விட்டார்கள். கமலத்துக்கு அந்தக் காட்சியைக் காண மிகவும் வருத்தமாகி விட்டது.

பாவம்! ஏதோ திருடிவிட்டான். அதுவும் என்ன தங்கச் சங்கிலியா? போன திருவிழாவில் முக்கால் ரூபாய்க்கு வாங்கிய வெறும் 'கில்ட்' சங்கிலிதானே?

தானுவைப் பார்த்தாள். எவ்வளவு களை பொருந்திய முகம்! அவன் அழகிலே மனத்தைப் பறி கொடுத்து விட்ட அவள், கூட்டத்தை நெருங்கி, "இவரை ஏன் அடிக்கிறீர்கள்? இவர் திருடவில்லையே! திருடியவன் கறுப்புச் சட்டையல்லவா போட்டுக் கொண்டிருந்தான்!" என்றாள்.

கூட்டமும் விலகியது.

நன்றி ததும்பக் கமலத்தைப் பார்த்தான் தானு. கமலமும் பரிவோடு அவனை நோக்கினாள்.

"இந்தா, உன் சங்கிலி! என்னை மன்னித்துவிடு" என்றான் தானு. அவனுக்கு நாக் குழறியது. அவன் விட்ட கண்ணீரில் அவனது குற்றமும் கரைந்து போய் விட்டது போலும்!

"பரவாயில்லை. நீயே வைத்துக்கொள்."

"நான்தானே திருடினேன்! எதற்காக எனக்குப் பரிந்து பேசினாய்?"

கமலம், தானுவை ஒருமுறை உற்றுப் பார்த்தாள். அவன் உள்ளத்தையே அப் பார்வை ஆட்கொண்டு விட்டது.

அதற்குப்பின் இருவரும் ஒருவரையொருவர் அடிக்கடி சந்தித்துக் கொண்டார்கள்.

அவன் திருடனாயிருந்தால் என்ன? மாற்றிவிட முடியாதா? பிறக்கும்போதே எல்லோரும் திருடர்களாகவோ, குணம் கெட்டோ பிறக்கிறார்களா? வால்மீகி ஒரு சமயம் திருடனாகத்தானே இருந்தாராம்! ஏன், திருமங்கையாழ்வாரும் திருடனாகத்தான் இருந்தாராம். அவர்களெல்லாம் திருந்த வில்லையா? திருந்தி ஞானிகளாக வாழவில்லையா? தானுவும் மனிதன் தானே? அன்பினால் அவனைத் திருத்திவிட முடி

வாதா? அதுவும் ஒரு பெண் நினைத்தால் முடியாத காரியம் என்று ஒன்று உண்டா?

அவனைத் திருத்தி விடலாம் என்ற நப்பாசையில்தான் கமலம் அவன்மீது ஆசை வைத்தான். கலியாணமும் நடந்தது.

ஆனால் தாணுவின் குணம் நாயின் வாலாக இருக்கும் என்று கமலம் எதிர்பார்க்கவில்லை. கைநீண்டதன் காரணமாக அவன் அடிக்கடி கம்பி எண்ண நேர்ந்தது.

அவன் கொட்டம் கொஞ்சங்கூட அடங்காததைக் கண்ட நீதிபதி கடைசியில் அவனை ஏழு வருடங்களுக்குத் நீட்டி விட்டார்.

அதைக் கேட்டுத்தான் கமலம் அலறித் துடித்து விட்டான். கமலத்தின் கதறல் எல்லோரையுமே உலுக்கி விட்டது. கமலத்தின் இடுப்பிலிருந்த ஒரு வயதுக் குழந்தை திரு திருவென்று விழித்தது. தன் தந்தை திருடி விட்டுச் சிறைக்குப் போகிறான் என்று பாவம், அந்தப் பச்சைக் குழந்தைக்கு என்ன தெரியும்?

கமலம் அவன் தொழிலை வெறுக்கலாம். ஆனால் அவனை வெறுக்க முடியுமா?

ஏழு வருஷங்கள் என்ன? ஏழு யுகங்கள் வேண்டுமானாலும் அவன் அவனைப் பிரிந்திருக்கத் தயார். ஆனால் இரும்பும்போது தாணு நல்லவனாகத்திரும்பிவந்தால் அதுவே அவளுக்குப் போதும்.

தாணு சிறைக்குச் சென்ற பிறகு, கமலம் அந்த ஊரை விட்டுப் பக்கத்து ஊருக்குப் பிழைப்பை உத்தேசித்துக் குடியேறினான்.



அவர்களுடைய அன்பில் விளைந்த அமுதம் வேணு. தாணுவைப் போல் அவன் ஆகிவிடக் கூடாதே என்பதற்காகக் கண்ணும் கருத்துமாக வளர்த்தான். பொய்யே சொல்லக் கூடாது என்று கற்றுக் கொடுத்தான். அவன் ஆசைப்படியே வேணு வளர்ந்தான். வளர்ந்து வளர்ந்து வயது எட்டை நெருங்கியபோது, அவனோடு ஒட்டி வளர்ந்த விளையாட்டுகளைக் காணக் கமலத்தின் உள்ளம் பெருமையால் சிலிர்த்தது. தன் கணவனும் தன்னோடு இருந்து அவற்றைப் பார்க்கக் கொடுத்து வைக்கவில்லையே என்று ஏங்கினான்.

அவன் வாங்கிக் கொடுத்திருந்த பொம்மைக் கிளியை வைத்துக் கொண்டு வேணு என்ன என்ன விளையாட்டுகள் எல்லாம் விளையாடினான்! ஆனால் அதைப் பார்த்துக் களிக்கத்தான் அவன் தந்தையான தாணுவுக்குக் கொடுத்து வைக்கவில்லை.

சிறையிலிருந்து விடுதலையாகி வெளியே வந்த தாணு விசாரித்துக் கொண்டே கமலம் இருக்கும் ஊர் வந்து சேர்ந்தான். வரும் வழியெல்லாம் அவனுக்கு வீட்டின் நினைவுதான். திருட்டுத் தொழில் பக்கம் போகாமலே திருந்தி வாழ வேண்டும் என்ற நினைப்புத்தான். ஒரு வயதில் பிரிந்த தன் குழந்தை வேணுவைக் காண வேண்டும் என்ற ஆசை அவன் உள்ளத்தில் அப்படி அலை அலையாக எழுந்து கொண்டிருந்தது.

இப்பொழுது வேணு எவ்வளவு வளர்ந்திருப்பான்? தன்னைத் தகப்பன் என்று தெரிந்து கொண்டதும் ஓடியே வந்து எப்படிக் கட்டிக் கொள்வான்? நினைக்க நினைக்க அவன் உள்ளத்திலே பாசம் பொங்கி யெழுந்தது.

அவன் ஊரை அடைந்த பொழுது மாலை ஐந்து மணி இருக்கும். தெரு முனைக்கு அவன் வந்த பொழுது ஒரு இடத்தில் வேணு தன் பொம்மைக் கிளியை வைத்து விளையாடிக் கொண்டிருந்தான். கிளி குதிக்கும்போதும், கரணம் போடும் போதும், வேணுவின் முகத்தில் தோன்றிய மகிழ்ச்சி அலைகளைச் சொல்லி முடியாது.

அதைக் கண்ட தாணுவுக்குத்தன் குழந்தையின் நினைவு வந்தது. நம் குழந்தையும் இவன் உயரம் வளர்ந்திருப்பான். எட்டு வயதாகியிருக்கும். அவனும் இப்படித்தானே விளையாடுவான்? இத்தனை வருடங்களுக்குப் பிறகு அவனைப் பார்க்கப் போகிறோமே! அவனுக்காக நாம் என்ன கொண்டு போகிறோம்? இப்படி ஒரு கிளி கொண்டு போய்க் கொடுத்தால் அவன் எவ்வளவு மகிழ்வான்............? இத்தகைய எண்ணச் சுழலில் சிக்கி நின்றான் தாணு.

"என்ன பார்க்கிறாய்? என் கிளிக்குச் சர்க்கஸ் வித்தை தெரியும். பார்க்கிறாயா?" என்று கேட்ட வேணு பெருமையோடு தாணுவுக்கு வேடிக்கை காட்ட ஆரம்பித்து விட்டான்.

"ஏன், தம்பி! இந்தக் கிளியை எங்கே வாங்கினாய்?" என்று அந்தக் கிளியைத் தன் கையில் வாங்கிக் கொண்டே வேணுவைப் பார்த்துக் கேட்டான் தாணு.

"எங்கம்மா மதுரையிலே வாங்கினுங்க. இந்த மாதிரிக் கிளி இங்கே யெல்லாம் கிடைக்காதாக்கும்!" என்று கூறினுன் வேணு பெருமையோடு.

அப்படி யென்றுல் நம் வேணுவுக்கு இந்தமாதிரி கிளி வாங்கிக் கொடுக்க முடியாதா? இம்மாதிரிக் கிளி இந்த ஊரிலேயே கிடையாதாமே?

தாணுவின் மூளை வேலை செய்தது. "இதை எனக்குத் தருகிறுயா, தம்பி?" என்று கெஞ்சிக் கேட்டான்.

"ஊஹூம். இது எனக்கு வேண்டும்!"

"துட்டு தருகிறேன்."

"அதெல்லாம் முடியாது. என்னுடைய கிளியைக் கொடு."

"சரி, கிளியைத் தரவேண்டாம். இந்தத்துட்டை வைத்துக் கொள்."

"உன் துட்டு எனக்கு எதற்கு? அடுத்தவர்களிடம் துட்டு வாங்கக் கூடாதென்று எங்கள் அம்மா சொல்லி யிருக்கிறுள்."

"உன் அம்மாவிடம் சொல்ல வேண்டாம். அவளுக்குத் தெரியாமல் வாங்கிக் கொள்."

திருடாமல் துட்டைக் கொடுத்துக் கிளியை விலைக்கு வாங்கிக் கொண்டதாகப் பெயர் பண்ண வேண்டும்என்ற ஆசை தாணுவுக்கு.




"சீச்சீ. நீ சுத்த மோசம். என்னைப் பொய் சொல்லவா சொல்லுகிறுய்? அதெல்லாம் முடியாது. என் கிளியைக் கொடு. நான் வீட்டுக்குப் போக வேண்டும். பொழுது போய் விட்டது. நாழிகையாகி விட்டால் அம்மா கோபித்துக் கொள்வாள்" என்று அவசரப்படுத்தினுன் வேணு.

தன் குழந்தையின் நினைவு வந்து விடவே தாணுவுக்கு அந்தக் கிளியை எப்படியாவது கைப்பற்றி விடவேண்டும் என்ற ஆசை வந்து விட்டது. திருடுவதில்லை என்று தீர்மானித்துக் கொண்டு வந்த அவனது உள்ளத்தில் கள்ளம் புகுந்ததற்குக் காரணம் பிள்ளைப் பாசம்தான். அதனுல், "அதோ பார், வேடிக்கையை! அந்தக் குரங்கு எப்படித் தாண்டுகிறது?" என்று வேணுவுக்குப் பாய்ச்சல் காட்டினுன்.

குழந்தை வேணு அப்பக்கம் திரும்பினுன். ஒரு மரக் கிளையில் ஒரு குரங்கு குதித்துக் கொண்டிருந்தது. அதை வேடிக்கை பார்ப்பதில் லயித்துவிட்ட வேணு திரும்புவதற்குக் கொஞ்ச நேரம் பிடித்தது. திரும்பினுல் தாணுவைக் காணவில்லை. வேணு கத்தினுன்; அழுதான்; புரண்டான்.

பொம்மையைப் பறி கொடுத்து விட்டு அழுது கொண்டே வீட்டை யடைந்தான் வேணு. தண்ணீர் எடுப்பதற்காகக் கிணற்றடிக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்த கமலம் விவரத்தைக் கேட்டறிந்து, "போனுல் போகிறுன், திருட்டுப் பயல்! நான் வேறு ஒன்று வாங்கித் தருகிறேன். இதற்காகவா அழுவது?" என்று குழந்தை வேணுவைச் சமாதானம் செய்தாள்.

இதே சமயம், "கமலத்தின் வீடு இது தானே?" என்று வாசலில் யாரோ கேட்டுக் கொண்டிருந்தார்கள். குழந்தை வேணுவுடன் கமலம் வெளியே வந்தாள். கையில் பொம்மைக் கிளியுடன் தாணு நின்று கொண்டிருப்பதைக் கண்ட அவளுக்கு வியப்பா யிருந்தது. எந்தக் குழந்தையின் கையிலிருந்து அந்தப் பொம்மைக் கிளியைப் பறித்துச் சென்றுனே, அதே குழந்தைதான் தன்னுடைய புதல்வன் என்பதை அறிந்த போது தாணுவுக்கு உலகமே சுற்றியது. அப்பொழுதே திருட்டுத் தொழிலுக்கு முழுக்குப் போட்டு விடுவது என்று வைராக்கியம் கொண்டான் தாணு. அப்புறம் அந்தத் தொழிலிலேயே அவன் பிரவேசிக்கவில்லை.

# ஜாக்கிரதை — டின்னில் அடைக்கப்பட்ட

திறந்து விற்கப்படும் பார்லியானது அழுக்கு விஷக்கிருமிகள் முதலியவைகளால் பாதிக்கப்படலாம். அவ்வித பார்லியை வாங்கி கஷ்டத்திற்குள்ளாகாதீர்கள். நீங்கள் ராபின்ஸன்ஸ் பொல் பார்லியையே வாங்குங்கள். அதுவே சுத்தமானது; புத்தம் புதியது; பத்திரமானது. ஏனெனில் அது சுகாதார முறைப்படி காற்றுப் புகாமல் டின்னில் அடைக்கப்பட்டது.

## இந்த பார்லியையே

## வாங்குங்கள்!




ராபின்ஸன்ஸ் **பெர்ல்**

**பார்லியையே**

**கேட்டு வாங்குங்கள்**

**முற்றிலும் சுத்தமானது**

# EMPIRE'S Report of Progress

## IN 1954

| | | |
|---|---|---|
| **New Business** | ... | **Rs.** 3,84,06,774 |
| **Total Assets** | ... | **Rs.** 12,38,65,607 |
| **Total Claims Paid** | ... | **Rs.** 14,65,12,947 |



**Highlights from the Administrator's Report**

- ★ Every Prospect of an increase in the bonus to Policyholders
- ★ Nearly 70% of total assets invested in Government Securities

# THE EMPIRE OF INDIA

## LIFE ASSURANCE COMPANY LIMITED

( ESTD. 1897 )

Head Office: EMPIRE HOUSE, D. NAOROJI ROAD, BOMBAY-1

**Branches all over India**

Madras Branch: KHALEEL MANSION, MOUNT ROAD

# செல்வத்தின் அழகோவியம்



க. பஞ்சாபகேசன்

திண்ணையின் மேல் உட்கார்ந்து கொண்டிருந்த டிராயிங் வாத்தியார் நல்லகண்ணுப் பிள்ளை தெருக் கோடியில் 'ஜல் ஜல்' என்று வரும் ஜட்கா வண்டியின் ஓசையைக் கேட்டதும், 'சரக்' என்று எழுந்து வீட்டுக்குள் வேகமாகப் போய் விட்டார்.

உள்ளே கூடத்தில் உட்கார்ந்திருந்த அவர் மனைவி வள்ளியம்மாள், "என்னது? வண்டியோசையைக் கேட்டதும் இப்படி உள்ளே எழுந்திருச்சு வந்துட்டீங்க! அந்தப் பிள்ளையாண்டான் நம்ம வீடு தாண்டித்தானே அவன் வீட்டுக்குப் போகணும்? என்ன இருந்தாலும் உங்கள் சிஷ்யப் பிள்ளையைக் கண்டே நீங்க ஏன் இப்படிப் பயப்படணும்?" என்றான்.

நல்லகண்ணுப் பிள்ளை இதற்கு ஒரு பதிலும் சொல்லவில்லை. பதிலாகச் சொல்ல அவருடைய மனத்தில் ஆயிரம் எண்ணங்கள் அவருடைய மனத்தில் எழுந்தன. இருந்தாலும் அவற்றை எப்படியோ அடக்கிக் கொண்டு விட்டார். தம்முடைய முதுமை படர்ந்திருந்த முகத்தில், மூக்கில் பாதி வரையில் இறங்கிப் போயிருந்த பழைய கண்ணாடியைச் சற்றே சரிப்படுத்திக் கொண்டார்.

அந்தச் சமயம் ஜட்கா வண்டி அவருடைய வீட்டைத் தாண்டிப்போன சத்தத்தின் அனந்தமான ஒலி அலைகளும், உள்ளே காமரா அறையில் பதுங்கிக் கொண்ட நல்லகண்ணுவின் காதுகளில் கேட்டன.

அமைதியுடன் அவர் வெளியே வந்தார்.

நல்லகண்ணுப் பிள்ளை வாசல் திண்ணையில் போய் உட்கார்ந்து கொண்டார். சிறிது நேரத்துக்கு முன்பு ஜட்கா வண்டியில் போன இளம் பிள்ளையைப் பற்றி அவருடைய நினைப்பு வட்டமிட்டது.

* * *

செல்வம், இப்போது கட்டு மாறாத உடலுறுதியும் நல்ல அழகும் நிறைந்த இளைஞன்; பிரபல இளம் சைத்திரிகன்.

அப்போது சுமார் பன்னிரண்டு வருஷங்களுக்கு முன்பு இப்படி இல்லை. பன்னிரண்டு வயதுப் பிள்ளையாக இருந்த செல்வத்துக்குப் பள்ளிக்கூடப் படிப்பு நாட்களில் இருந்த விஷமப் போக்குக்குக் கங்கு கரை கிடையாது.

நல்லகண்ணுப் பிள்ளைக்கு நன்றாக ஞாபகம் இருந்தது. இப்போதுதான் இரண்டு வருஷங்களாக அவருக்குத் தள்ளாமை இருந்து கொண்டிருந்தது; பன்னிரண்டு வருஷங்களுக்கு முன்பு, தம்முடைய முப்பத்திரண்டாவது வயதிலும், பதினெட்டு வயது இளம் பிள்ளையைப் போலத்தான் எப்போதும் துடித்துக் கொண்டிருப்பார் நல்லகண்ணு.

பக்கத்தில், நாமக்கல் பள்ளிக்கூடத்தில் அவர் டிராயிங் வாத்தியாராக இருந்தார். அவருடைய ஊரான நேமத்திப் பட்டியிலிருந்து இரண்டு கல் தூரம் இருந்தது நாமக்கல். நேமத்திப்பட்டியிலிருந்து உயர்தரப் பள்ளிப் படிப்புக்குச் செல்ல வேண்டிய மாணவர்கள் எல்லாரும் நாமக்கல்லுக்குச் சென்றுதான் படிக்க வேண்டும்.

நேமத்திப் பட்டியில் கொடித்துப்போன ஒரு மிராசு குடும்பத்தைச் சேர்ந்தவன்தான் செல்வம். செல்வநாயகம் என்ற பெயரை அழகாகச் செல்வம் என்று குறுக்கி அழைத்தார்கள், வீட்டைச் சேர்ந்தவர்கள். ஊரைச் சேர்ந்தவர்களிடமும் பள்ளிக்கூடத்திலும்கூட அதே பெயராகப் போய் விட்டது.

செல்வத்துக்கு அதிதுரிதமாக யோசனை செய்யும் சக்தி இருந்தது. மற்றவரை அவன் கேட்கும் கேள்விகள் அவர்களுக்கெல்லாம் எரிச்சலைத்தான் மூட்டிற்று. ஆனால் அவர்களுக்கெல்லாம் அந்தக் கேள்விகளுக்குப் பதில் சொல்ல முடியவில்லை என்பதுதான் பிரசித்தமான உண்மை.

நேமத்திப் பட்டியிலிருந்து நாமக்கல்லுக்குத் தினசரி போகும் வயல் வரப்பு வழியில் எல்லாம் என்ன என்னவோ சிந்தித்துக் கொண்டுதான் போவான் செல்வம்.

அவனுடைய இந்த யோசனையெல்லாம் டிராயிங் வாத்தியார் நல்லகண்ணுப் பிள்ளைக்குத்தான் தலைவலியாக வந்து முடியும்.

ஒரு நாள், டிராயிங் வகுப்பில் ஒரு சம்பவம் நடந்தது.

நல்லகண்ணுப் பிள்ளை தம்முடைய கடமையைப் 'போர்டி'ல் ஆற்றிக் கொண்டிருந்தார். ஒரு மேஜையை அந்தக் கரும் பலகையில் எழுதியிருந்தார். வகுப்பில் இருந்த சிறுவர்கள் எல்லாரும் தத்தம் டிராயிங் நோட் புக்குகளில் அந்த மேஜை வடிவத்தைக் கொண்டு வர முயற்சி செய்து கொண்டிருந்தார்கள்.

செல்வம் ஒன்றுமே வரையாமல், கையில் பென்சிலை வைத்துக் கொண்டு சும்மா உட்கார்ந்து கொண்டிருந்தான். நல்ல கண்ணு பார்த்தார். கோபம் பொத்துக் கொண்டு வந்து விட்டது அவருக்கு.

"ஏய், செல்வம்! வரையாமல் என்ன சும்மா உட்கார்ந்து கொண்டிருக்கே? எழுந்திருச்சு நில்லு" என்றார் நல்லகண்ணு.

செல்வம் தன்னிருப்பிடத்தில் எழுந்திருந்து நின்றான்.

"யோசிச்சுக் கிட்டிருந்தேன் சார்!" என்றான் அவன்.

"டிராயிங் வரையாமல் என்னடா யோசனை?" என்று கேட்டார்.

"அதைப் பற்றித்தான் சார், யோசிச்சுக்கிட்டிருந்தேன்."

"டிராயிங் வரையாமல், டிராயிங்கைப் பத்தித்தான் யோசிச்சுக்கிட்டிருந்தாயா? என்னடா உளறுகிறாய்?" என்று கத்தினார் நல்லகண்ணு.

"ஆமாம், சார்! இந்த மேசை, நாற்காலி, பெஞ்சு இதையே திருப்பித் திருப்பி வரைஞ்சுக்கிட்டிருப்பதைவிட, ஒரு தோப்பு-துரவு, நிலா இப்படி ஏதாச்சும் ஒரு காட்சியை வரையக் கூடாதா, சார்? இந்த மாதிரி உருவங்களெல்லாம் போட்டுப் போட்டு எனக்கு அலுத்து விட்டது, சார்! நம்ம நேமத்திப் பட்டியிலிருந்து, இங்கே நாமக்கல்லுக்குப் பள்ளிக்கூடத்துக்கு வருகிற பாதையிலே, வயல் ஓரத்திலே, சும்மாய்க் கரைக்கு மேல் நின்னு, சூரியன் மறைகிறதைப் பார்க்கும்போது அதையே படமாக வரையலாம்னு தோணுது, சார்!" என்று செல்வம் சொன்னதும் நல்லகண்ணுப் பிள்ளை அன்று ஆவேச மூர்த்தியானார்.

"உட்காருடா, மடையா! பெரிய ரவிவர்மா சித்திரம் போடுகிறதாகக் கணக்கு! இவர் பெரிய சைத்திரிகர் ஆகப்போகிறாரு! பத்து நிமிஷத்தில் மேஜைப் படத்தைப் போட்டுக் கொண்டு வந்து என்னிடம் காட்டாவிட்டால் அப்புறம் பார்த்துக்குவோம்!" என்றார் நல்லகண்ணுப் பிள்ளை.

அதற்கு அடுத்த வருஷம் நான்காவது பாரத்துக்குப் போய்விட்டான் செல்வம். அந்த வகுப்பிலிருந்து 'டிராயிங் வகுப்புகள்' செல்வத்துக்கு இல்லை.

பள்ளிக்கூடத்தில் ஒரு சின்னப் பொருட்காட்சி வைத்தார்கள். அதில், யாரும் எதிர்பார்க்காத ஒரு சந்தர்ப்பத்தில், எல்லாரும் புகழ்ந்து சொல்லும் விதமாக, செல்வம், ஒரு பெரிய அட்டையில் சித்திரம் ஒன்று வரைந்து, அதற்கு அந்தந்த இடத்தில் நேர்த்தியான வர்ணத்தைத் தீட்டி எல்லாரும் பார்க்கும்படியான ஓரிடத்தில் அதை வைத்தான்.

ஏரிக் கரையின் மேல் ஒருவன் நின்று கொண்டு சூரியாஸ்தமனத்தைப் பார்ப்பதாகத்தான் கற்பனை. அப்படி யொன்றும் பிரமாதமான சித்திரமாக இருக்கவில்லை அது; ஆனால் செல்வத்தின் முதல் கற்பனைத் திறத்தை அனைவரும் மெச்சத்தான் செய்தார்கள்.

செல்வத்தின் சிநேகிதப் பிள்ளைகள் எல்லோரும் அவனிடம் "நீ ஒரு பெரிய டிராயிங் மாஸ்டராகலாம்" என்று கூறினர். அதைக் கேட்டுச் செல்வம் ஒரு புன்னகைதான் செய்தான்.

ஆனால் நிச்சயமாகச் செல்வம் ஒரு டிராயிங் மாஸ்டர் ஆகவில்லை. சித்திரப் பள்ளிக்



# பல்டாக்டர் அங்கீகரித்த இவ்வழியில் பற்சீதைவைத் தடுக்க முயலுங்கள்

2-நிமிஷ கால்கேட்
பழக்கத்தை
4,000க்குமேல்
பல் டாக்டர்கள்
அங்கீ
கரிக்கின்றனர்






✔ இனிய சுவாசம்!

✔ ஒளிவீசும் பற்கள்!

✔ சொத்தைகுறைகிறது!

...ஆம், இம்மூன்றையும் பெற கால்கேட் டூத் பவுடரை, வழக்கமாக உபயோகியுங்கள்!

- சாப்பிட்டவுடன் கால்கேட் டூத்பவுடரால் பிரஷ் கொண்டு 2-நிமிஷம் தேய்க்கவும்.
- பல்லின் முன்புறம், பின்புறம் நுனிபாகம் மூன்றையும் தேய்க்கவும்.
- எப்பொழுதும் ஈறிலிருந்து எதிர்த் திசையில் தேய்க்கவும்.

# கால்கேட் டூத் பவுடர்

TPC/15

# வயிற்றுவலியை அலக்ஷியம் செய்யாதீர்!

வயிற்றில் புளிப்பு அதிகரித்தால்தான் வலியும், இருதய எரிச்சலும், வயிற்றுப்பிசமும் ஏற்படுவது சகஜம். ஏதேனும் வயிற்றில் கோளாறு ஏற்பட்டால் இயற்கையே அதை உடனே அறிவித்து விடுகின்றது. ஆகவே முதற்சின்னங்களைக் கண்டவுடன் ஒரு டோஸ் மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பௌடர் சாப்பிடவும். அது உடனடி நிவாரணம் தரும். ஹானியற்றது மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பௌடர் இருக்கும்போது ஏன் சங்கடம்?




**ஒரே டோஸ் நிவாரணம் தருகிறது!**

மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பௌடர், வயிற்று வலிகள், வயிற்றுப்பிசம், இருதய எரிச்சல், வயிற்றுப் புளிப்பு, குமட்டல் முதலியவைகளிலிருந்து துரிதமாக நிவாரணம் தரும். ஆனால் Alex C. Maclean என்ற கையெழுத்திட்டுள்ள அசல் சாக்கைப் பார்த்து வாங்குவது அவசியம்.

# மக்ளீன்

## பிராண்ட் ஸ்டமக் பௌடர்

பெரிய சைஸ் மற்றும் குடும்பசைஸ் ஜாடிகளிலும் கிடைக்கும்.
(விலை ரூ. 2/7 & ரூ. 5/11 உள்ளூர் வரிகள் பிரத்தியேகம்)

கூடத்தில் நாலு வருஷங்கள் முறையாகப் படிக்கத்தான் செய்தான்; ஆனால் ஒரு நல்ல சைத்ரிகன் ஆகிவிட்டான்; கற்பனை அவனுடைய எழுதுகோலில் வளமாகச் சொரிந்தது; நவீன சித்திரங்களையும் பழமை மரபு பாழ்பட்டுப் போகாமல் அவ்வளவு அழகாக வரைந்தான் அவன்.



விஜயதசமி யன்று கலாக்ஷேத்திரத்தின் நாட்டிய நாடகமான ''ராமாயணம்'' அரங்கேறியது. ராமாயண ச்லோகங்களுக்கு ஸ்ரீ வாசுதேவாச்சார் அவர்கள் மிக அருமையான முறையில் இசை அமைத்திருந்தார்கள். அன்று கூடியிருந்தவர்கள் அனைவரும் ஒரு முகமாக 'இந்த நாடகம் எல்லா அம்சங்களிலும் சிறந்து விளங்குகிறது' என்று அபிப்பிராயப் பட்டார்கள். அதில் பங்கெடுத்துக் கொண்ட அனைவருக்கும் நமது பாராட்டுதல்கள் உரியன.

அவனுக்குப் புகழும் பணமும் சேர்ந்தன. நேமத்திப் பட்டிக்கு அவன் வந்து பன்னிரண்டு வருஷங்களானாலும், ஊருக்குத் தன் தாயாருக்கு அவன் அனுப்பி வந்த அபரிமிதமான பணத்தினால் நொடித்துப் போயிருந்த குடும்பம் கொஞ்சம் கொஞ்சமாகச் செழிக்கலாயிற்று. அடமானமாகியிருந்த வீடு கைக்கு வந்தது; ஊரைச் சுற்றியும் வயலும் தோப்பும் சொந்தமாயிற்று; குடும்பத்தில் கலகலப்பும் மகிழ்ச்சியும் நிறைந்தன.

செல்வம், நீண்ட நாட்களுக்குப் பிறகு நேமத்திப் பட்டிக்கு வந்திருந்தான். ஊரே அவனுக்குப் புதுமையாகக் காட்சியளித்தது.

* * *

இப்போது நல்லகண்ணுப் பிள்ளை வேலையிலிருந்து ஓய்வு பெற்று விட்டார். வந்த 'பிராவிடண்ட்' பணம், அவருடைய சர்வீஸ் காலத்தில் பட்ட கடனை அடைக்கவே சரியாகப் போயிற்று. கொஞ்சம் நிலமிருந்தது; உட்கார்ந்திருந்த திண்ணையும் வீடும் இருந்தது. மனைவி வள்ளியம்மாளும் தள்ளாமைப்பட்டுப் போனாள்.

ஆனால் அவருடைய ஒரே அருமை மகள் சுந்தராம்பாளின் கலகலப்பான பேச்சும் சிரிப்பும்தான் அவருக்கு வாழ்க்கையில் அவ்வப்போது இதம் தந்தன. ஆனால் அந்த சுந்தராம்பாள் கூடச் செல்வத்தின் சித்திரங்கள் அவ்வப்போது பத்திரிகைகளில் வரும்போது, "பார்த்தீர்களா, அப்பா! உங்கள் சிஷ்யப் பிள்ளை எத்தனை அழகாக வரைந்திருக்கிறார்!" என்பாள்.

சுந்தராம்பாளுக்கு ஒரு கல்யாணத்தைப் பண்ணி வைத்து விட்டாரானால் நல்லகண்ணுப் பிள்ளைக்கு இப்போதைக்கு விசாரம் விட்டது.

ஆனால் இப்போது ஒரு சலசலப்பு நடந்திருக்கிறது. சிஷ்யப் பிள்ளை ஊருக்கே வந்திருக்கிறான். ஜட்கா வண்டியோசை தேய்ந்து மறைந்து இப்போது இரண்டு மணி நேரத்துக்கு மேலாகி விட்டது.

"காப்பி சாப்பிட வாங்கப்பா!" என்று சுந்தராம்பாள் அழைத்தபோது தான் அவருக்குச் சுய நினைவு வந்தது. உள்ளே எழுந்து போனார்.

* * *

இரண்டு நாட்களாகி விட்டன.

நல்லகண்ணுப் பிள்ளைக்கும் வள்ளியம்மாளுக்கும் ஏகத் தர்க்கம் நடந்து கொண்டுதான் இருந்தது. ஊரில் பெரிய குடும்பத்துப் பிள்ளை வந்திருக்கிற போது, அவனைப் போய்ப் பார்க்காமல் இருப்பது நன்றாக இல்லை என்று வாதித்தாள் வள்ளியம்மாள். குருவைப் பார்க்க வருவது சிஷ்யப் பிள்ளைக்குக் கடமை என்று வாதித்தார் நல்லகண்ணு.

அன்று மாலை நேரம். நல்லகண்ணு எங்கேயோ வெளியே போயிருந்தார். வள்ளியம்மையும் கோவிலுக்குப் போயிருந்தாள். வீட்டில் சுந்தராம்பாள் மட்டும் தான் இருந்தாள். அப்போது செல்வம் தன் கையில் தான் வரைந்திருந்த இரண்டு, மூன்று பெரிய சட்டம் போட்ட சித்திரங்களை ஒரு துணியில் சுற்றி எடுத்துக் கொண்டு வந்தான்.

நல்லகண்ணுப் பிள்ளையை அவன் மறந்து விடவில்லை. ஊருக்கு வந்ததுமே அவரைப் பார்க்க வேண்டும் என்றுதான் இருந்தான். ஆனால் வீட்டு வேலைகளை ஒரு வகைப் படுத்துவதில் இரண்டு நாட்களாகி விட்டன. சித்திரம் என்பது வெறும் கோடுகளாலானது ஆனாலும், அதை விடவும் உயர்வான ஓர் அனுபவத்தின் சாதனையாகிறது என்பதை அவனுடைய பிஞ்சு மனத்தில் டிராயிங் வாத்தியார் நல்ல



புது தில்லியில் வழுவூர் ராமையா பிள்ளையின் சிஷ்யையான குமாரி செல்வத்தின் நடன விருந்து மூன்று இடங்களில் அக்டோபர் மாதம் 24, 26, 28 தேதிகளில் வெகு சிறப்பாக நடந்தது. புது தில்லி லோதி எஸ்டேட்டிலும், தென்னிந்தியர் கிளப்பிலும், பழைய தில்லி தார்மீக லீசை கமிட்டியின் ஆதரவிலும் நடந்த நடனக் கச்சேரிகளில் உதவி ஜனாதிபதி, ரேதம மந்திரி, மற்றும் மத்திய சர்க்கார் மந்திரிகள் விஜயம் செய்து சிறப்பித்தனர்.

கண்ணுப் பிள்ளை உணர்த்தியதை அவன் உணராமல் போவானா, என்ன?

வாசல் மாடப் பிறையில் தீபம் வைக்க அப்போது வந்தாள் சுந்தராம்பாள். வாசலில் ஒரு சுந்தர வாலிபன் நின்று கொண்டிருப்பதைப் பார்த்தாள். 'சட்'டென்று அவனை அவளுக்கு அடையாளம் புரிந்து விட்டது. செல்வம் அல்லவா? அடாடா! எப்படி வளர்ந்து விட்டான்! அவனுடைய புகழுக்குத் தகுந்தமாதிரி இளமையும் அழகும் அவனுக்கு இருந்தன!

செல்வமும் சுந்தராம்பாளைப் பார்த்தான். அவள் இத்தனை அழகு பிம்பமாகக் காட்சியளிப்பாள் என்று அவன் எதிர் பார்க்கவில்லை. நேமத்திப்பட்டித் திண்ணைப் பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டிருந்த போது, சர்வ அசடாக இருந்த ஓர் அசட்டுப் பெண் இப்படி அடக்கமுள்ள அழகு மங்கையாக வளர்ந்து விட்டதில் அதிசயமடைந்தான் அவன். செல்வத்தின் சைத்ரிக உள்ளத்தில் மற்றெவரையும் விட, மற்றெந்தப் பொருளையும்விடச் சுந்தராம்பாளின் உருவம் கீர்த்தியானதொரு பீடம் ஏறி விட்டது.

"வாத்தியார் சார் இருக்கிறாரா?"

சுந்தராம்பாள் வாசற் கதவுக்குப் பக்கத்தில் நின்றுகொண்டு, "வெளியே போயிருக்கிறார். நீங்கள் உள்ளே வந்து உட்காருங்கள். இதோ வந்து விடுவார்!" என்றாள் மதுரமான குரலில்.

"நான்..."

"உங்களை அப்பா எதிர்பார்த்துக் கொண்டுதான் இருந்தார்..."

"நான் யாரென்று..."

"சித்திரம் போடுகிற..."

"ஆமாமாம். அவரிடம் தான் நான் படித்தேன்."

"ஏன், என்னை ஞாபகம் இருக்கலாமே. மறந்து விட்டீர்களா?" என்று தைரியமாகவே கேட்டாள் சுந்தராம்பாள்.

"இல்லை, இல்லை. எப்படி மறக்கமுடியும்? ஊரில் நான் யாரையும் மறக்கவில்லை. வந்து...சுந்தராம்பாள் தானே உங்கள் பெயர்?" என்றான் செல்வம்.

"பழைய சிநேகிதர்களுக்குக் கூடவா 'உங்கள்' மரியாதை தேவைப்படும்?"—சுந்தராம்பாள் விடாமல் கேட்டாள்.

'எத்தனை தைரியம்' என்ற எண்ணத்தோடு செல்வம் அவளை நிமிர்ந்து பார்த்தான். புன்னகையே உருவமாகச் சுந்தராம்பாள் அங்கே நின்றிருந்தது அவன் மனத்துக்கு வெகுவாக மயக்கத்தை உண்டு பண்ணியது.

"நான் வரட்டுமா?" என்று கேட்டான்.

"வேறே அவசரமான வேலை இருந்தால் போய் வாருங்கள். நீங்கள் வந்ததாக அப்பாவிடம் சொல்லி, வீட்டுக்கு வரச் சொல்லுகிறேன்" என்றாள் சுந்தராம்பாள்.

"ஒரு காரியம். இந்தப் படங்களை அவரிடம் கொடு. அவருடைய சிஷ்யன் வரைந்திருக்கும் ஒரு சில அற்புதமான படங்கள் இதில் இருக்கிறதாகச் சொல்லு" என்று கூறி விட்டு, படங்கள் இருந்த 'பார்ஸலை'ச் சுந்தராம்பாளிடம் கொடுத்தான் செல்வம்.

திரும்பித் தன் வீட்டுக்குச் செல்வம் நடந்த போது அவன் உள்ளம் அவன் வசத்தில் இல்லை; அதைச் சுந்தராம்பாளிடமே கொடுத்துவிட்டு வந்து விட்டான் அவன்.

* * *

ஹரிக்கேன் விளக்கொளியில் அந்தச் சித்திரங்களைப் பார்த்த நல்லகண்ணுப் பிள்ளை ஸ்தம்பித்தார்; பெருமூச்செறிந்தார்.

"எல்லாம் சுவாமி கொடுத்த அருட்பிரசாதம். சின்னப் பிள்ளை, இந்தச் சின்ன வயசிலேயே இத்தனை அழகாக வரைகிறது என்றால் பின்னே அருட்பிரசாதம் இல்லாட்டி வேறே என்ன......?" என்றாள் வள்ளியம்மாள்.

"அப்பா! அவரு இப்பவும் உங்க சிஷ்யப் பிள்ளைன்னு தானப்பா சொல்லிக் கொண்டு வந்தார்!" என்றாள் சுந்தராம்பாள்.

நல்லகண்ணுப் பிள்ளை பெருமைப்படத்தான் செய்தார்.

"நம் வீட்டில் ஒரு நாள் அந்தப் பிள்ளையாண்டானுக்கு ஒரு விருந்திட வேண்டும்" என்றாள் வள்ளியம்மாள்.

"ஆமாம். அவன் ஒப்புக் கொள்ளுவான்! நீயும் கறியும் பாயசமுமாகச்

சமைத்து விடுவாய்!" என்று கேலி பேசினார் நல்லகண்ணு.

"ஏனப்பா?" என்று கவலையும் ஏமாற்றமும் ததும்பக் கேட்டாள் சுந்தராம்பாள்.

நல்லகண்ணு பதில் சொல்லவில்லை. அவர் மனம் மட்டும், 'அவன் கலையாலும் பணத்தாலும் உயர்ந்தவன். ஒரு ஏழையான என்னை மதித்து விருந்து சாப்பிடுவதற்கு வருவானா?' என்று சொல்லிக் கொண்டிருந்தது.

மறு நாள் காலையில் நல்லகண்ணுப் பிள்ளை செல்வத்தின் வீட்டுக்குப் புறப்படத் தயாராகிக் கொண்டிருந்த சமயத்தில், செல்வத்தின் வீட்டு வேலையாள் ஒருவன் ஒரு கடிதத்தைக் கொண்டு வந்து தந்தான்.

"செல்வத்திடமிருந்தா?" என்று வள்ளியம்மாள் ஆச்சரியத்துடன் கேட்டாள்.

சுந்தராம்பாள் ஆவல் ததும்பப் பார்த்துக் கொண்டிருந்தாள். நல்லகண்ணுப் பிள்ளை சிறிதே நடுங்கிய கரத்துடன் கடிதத்தைப் பிரித்தார்.

"அன்புள்ள ஆசிரியருக்கு,

வணக்கம். நேரில் சொல்ல நான் தயங்குவதைக் கடிதத்தின் மூலம் தெரிவிக்கிறேன். மிகச் சுருக்கமான வார்த்தைகளில் தெரிவிக்க விரும்புகிறேன். தங்கள் அருமை மகள் சுந்தராம்பாளை மணம் செய்து கொள்ளும் தகுதி எனக்கு இருக்குமாயின் அதைத் தங்கள் பதில் கடிதம் மூலமாய் உடன் தெரிவிக்கக் கோருகிறேன். இவ் விஷயத்தில் என் அன்னையின் அனுமதியைப் பெற்று விட்டேன். லீவு நாட்களைச் சுருக்கிக் கொண்டு பட்டணத்துக்குச் சீக்கிரமாகத் திரும்பிச் செல்ல யோசனை. அதற்குள் முகூர்த்தம்......"

அதற்கு மேல் நல்லகண்ணுப் பிள்ளையால் படிக்க முடியவில்லை. 'நிச்சயம் அவன் நிகரற்ற கலைஞன் தான். எதையும் மனத்தில் வைத்துக் கொள்ளத் தெரியாத, நிர்மலமான மனமுள்ள உண்மைக் கலைஞன் தான்' என்று எண்ணவும் அவர் கண்களில் ஆனந்தக் கண்ணீர் ஆறுகப் பெருகிற்று.

செய்தியை அறிந்த தாயும் பெண்ணும் முருகன் படத்துக்கெதிரில் கை கூப்பி அஞ்சலி செய்தார்கள்.

* * *

பட்டணத்தில், மெரினா கடற்கரையில், செல்வமும் சுந்தராம்பாளும் கை கோத்து உலாவிக் கொண்டிருந்தார்கள்.

"ஆமாம், உங்களை ஒன்று கேட்க வேண்டுமே. உங்களைப் பற்றி நினைக்கும் போதெல்லாம் அப்பா மனத்தில் பெருமைப் பட்டாலும், வெளியில் சொல்லுவதில்லையே, ஏன்?" என்று கேட்டாள் சுந்தராம்பாள்.

"சுந்தரா! ஆசிரியர்களுடைய இயல்பே அது தான். அவர்கள் அப்படி இருந்தால் தான், சிஷ்யப் பிள்ளைகள் முன்னுக்கு வருவார்கள். உன் அப்பாவின் விஷயத்தில் இது எனக்குப் பிரமாதமாகத் தோன்றவில்லை. நேமத்திப் பட்டிக் கம்மாய்க் கரையில் சூரியாஸ்தமனத்தைப் பார்க்க எனக்கு ஓர் எழுச்சியூட்டியவர் அவர்தான். அது மட்டுமில்லை. என்னை விட உன் அப்பா ஒரு பெரிய கலைஞர். என்னை விட ஓர் அழகோவியத்தை எனக்காக அல்லவா அவர் தீட்டி வைத்தார்!" என்று கூறினான் செல்வம்.

"அது யார்?"

"உனக்கே தெரியுமே, சுந்தரா!"

"தெரியும். ஆனால் சொல்ல மாட்டேன்" என்று சொன்ன சுந்தராம்பாள், ஓர் அழகோவியமாகச் செல்வத்தின் தோள்களில் சாய்ந்து கொண்டாள்.

# டி.கே.சி.யின் கடிதங்கள்

முகாம்: சென்னை
7—1—50

அருமை.........

சென்னையில் இப்போது அமைதி உண்டாயிருக்கிறது.

பூனைக்கு ஒன்பது உயிர் என்பார்கள். எப்படிச் சித்திரவதை செய்தாலும் சாகாதாம்.

சங்கீதத்துக்குத் தொண்ணூறு உயிர்! என்ன கொலை செய்தாலும் தப்பி மீஞ்சி விடுகிறது. கர்நாடக சங்கீதம் இருக்கத்தானே செய்கிறது 1950-ல்!

வாழ்க தமிழ் நாட்டுக் கலை என்று நன்றாய்க் கோஷம் இடலாம்.

தமிழ்நாடு தயாள குணம் வாய்ந்த நாடு. சிவபிரானைச் சேர்ந்த நாடு. வைதாரையும் வாழ்த்தும் நாடு. பொருள் தெரியாமலே பாடும் நாடு. பொருள் தெரியாமலே கேட்கும் நாடு. பலே நாடு.

பாஷை எதுவாயிருந்தால் என்ன, சங்கீதம் நம்முடையதுதானே. ஊமைப் பெண்களுக்கும் தாலி கட்டித்தானே ஆகிறது.

சுபம்! சுபம்!! சுபம்!!!

அன்புள்ள
டி. கே. சிதம்பரநாதன்

# இதற்கு ஈடு நிகர்
# வேறு வாயில் இல்லை!




Two by Two

# FULL VOILE

சூபர்பைன்

மெர்ஸிரைஸ் செய்யப்பட்டது

பயனீர் -
பீஸ்குட்ஸ் கம்பெனி
பம்பாய்-2.

## மாபத்லால் பைன் மில்ஸ் — நவ்ஸாரி

# மாப்பிள்ளை மகாதேவன்



நீலா ராமமூர்த்தி

○

ஒவ்வொரு 'கம்பார்ட்மெண்டாக'ப் பார்த்துக் கொண்டே வந்த சுபத்ரா அந்த இடத்தைப் பார்த்ததும் "அப்பா, அப்பா! இங்கே வா. நிறைய இடம் இருக்கிறது" என்று ஆனந்தக் கூச்சலிட்டாள்.

சற்றுத் தூரத்தில் வந்து கொண்டிருந்த கைலாசம் ஓடோடி வந்து சுபத்ரா காட்டிய பெட்டியில் ஏறினார். மறுநாள் முகூர்த்த தினமாதலால் வண்டியில் ஏகக் கூட்டம். அவர்களுக்காகவே காத்திருந்தாற் போல் ரயிலும் உடனே புறப்பட்டது. ஆயாசத்துடன் ஆசனத்தில் சாய்ந்தார் கைலாசம்.

அதற்குள் அந்த இடத்தை ஒருதரம் சுற்றிப் பார்த்த சுபத்ரா வியப்புடன் "இன்னும் யாரோ இருக்கிறார்போலிருக்கிறது அப்பா!" என்று கூறினாள்.

அவள் இதைச் சொல்லி வாய் மூடுமுன் நகர்ந்து கொண்டிருந்த வண்டியில் ஒரு இளைஞன் சட்டென்று தாவி ஏறினான். அவனைக் கண்ட சுபத்ரா திடுக்கிட்டாள். வண்டியில் ஏறிய அந்தச் சுந்தர வாலிபன், மூக்குக் கண்ணாடியைக் கழற்றி ஒரு முறை துடைத்துப்

போட்டுக் கொண்டான். கைலாசத்தின் அருகில் வந்து அமர்ந்து கையிலிருந்த ஆங்கிலத் தினசரியைப் பிரித்து முகத்துக்கு நேராக வைத்துக் கொண்டான்.

கைலாசம் அவனைப் பார்த்து, "நீங்கள் எதுவரைக்கும் போகிறீர்கள், ஸார்!" என்று கேட்டார்.

அவன் அவரைப் பார்க்காமலே, "சென்னைக்கு!" என்று பதிலளித்தான்.

'முன்னே பின்னே தெரியாதவர்களோடெல்லாம் என்ன பேச்சு வேண்டிக் கிடக்கிறது!'' என்று தனக்குள் அலுத்துக் கொண்டாள் சுபத்ரா.

அவரோ உத்சாகத்துடன் "ரொம்ப நல்லதாய்ப் போச்சு. நாங்களும் சென்னைக்குத் தான் போய்க் கொண்டிருக்கிறோம்" என்று பேச்சைத்தொடங்கினார்.

காற்றைக் கிழித்துக் கொண்டு கன வேகமாகப் போய்க் கொண்டிருந்தது ரயில். வாலிபன் அப்போதும் தன்னைச் சுற்றி இருப்பவர்களைக் கவனியாமல் படித்துக் கொண்டிருந்தான். "உங்கள் பேர் என்ன, சார்! எங்கோ பார்த்த ஞாபகமாயிருக்கிறதே!" என்றார் கைலாசம்.

'அடேயப்பா! ஆள் மகா விடாக்கண்டனாயிருப்பார் போலிருக்கிறதே' என்று எண்ணித் தலை நிமிர்த்த வாலிபனின் பார்வை சட்டென்று சுபத்ராவின் மேல் பாய்ந்தது.

அதற்குள் "திருநெல்வேலி தானே உங்களுக்கு!" என்று கேட்டு விட்டார் கைலாசம்.

அவனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. அவரை உற்றுப் பார்த்தான். அடுத்த கணம் சட்டென்று அவன் சிரம் தாழ்ந்தது.

"உனக்குத் தெரியவில்லையா அம்மா, இவரை! தன் மாமாவுக்குப் பெண் கேட்க வந்தாரே இவர்!" என்றார் கைலாசம் மகளைப் பார்த்து.



கைலாசம் மாயவரம் சப் ரிஜிஸ்திரார் ஆபீஸ் தலைமைக் குமாஸ்தா. சுபத்ரா அவருடைய அருந் தவப் புதல்வி. அவளுடைய சிறு வயதிலேயே அவளுடைய தாய் மண்ணுலகை நீத்து விட்டதால் அவரே தாயாகவும் தந்தையாகவும் இருந்து காப்பாற்றினார் அவளை.

நாட்கள் ஓடிக் கொண்டேயிருந்தன. சுபத்ராவும் பதினாறு வயதை அடைந்தாள். கைலாசத்தின் கவலை அதிகரித்தது.

ஒரு நாள் அவருடைய நண்பர் ஒருவர், "திருநெல்வேலியிலே நல்லவரன் ஒன்று இருக்கிறது. வரவழைக்கட்டுமா!" என்று கேட்டார்.

"ரொம்ப சரி" என்றார் கைலாசம்.

விவரம் ஏதும் தெரிந்து கொள்ளாமல் வீடு சென்றார். மறு நாளே திருநெல்வேலி வரன் வரப்போகும் செய்தி நண்பர் மூலம் கைலாசத்துக்கு எட்டியது.

பத்துமணி சுமாருக்குச் சாப்பிட உட்கார்ந்த அவர், "சுபத்ரா, இன்று திருநெல்வேலியிலிருந்து ஒரு பையன் வருகிறான், உன்னைப் பார்க்க!" என்றார்.

அதற்கு மேல் காரியமே ஓட வில்லை அவளுக்கு. 'அவர் யாரோ! எப்படி யிருப்பாரோ!' என்ற யோசனையில் ஆழ்ந்து விட்டாள். "உருளைக் கிழங்கு பஜ்ஜியும் ரவா சொஜ்ஜியும் பண்ணி வை" என்ற தகப்பனாரின் கட்டளையை எப்படித் தான் நிறைவேற்றினாளோ, கடவுளுக்குத்தான் தெரியும். மூன்று மணி அடித்தது. செருப்புச் சப்தம் கேட்டது. அவள் நெஞ்சு படபட வென்று பலமாக அடித்துக் கொண்டது.

"வாங்கோ, வாங்கோ!" என்று வரவேற்றார் கைலாசம் வந்தவரை.

ஆவலை அடக்க முடியாமல் சமையலறை ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தாள் சுபத்ரா. பார்த்ததுமே உள்ளம் பூரித்தது. "ஆகா! என்ன அழகு! என்ன கம்பீரம்!" என்று தனக்குள் மகிழ்ந்து போனாள். ஒரு கணம் தன்னையே மறந்து போனாள்.

"உங்கள் பெயர் என்ன! திருநெல்வேலியே தான் இருப்பிடமா! தாயார் தகப்பனார் அண்ணன் தங்கை என்று யாராவது இருக்கிறார்களா! எங்கே வேலை! என்ன சம்பளம்!" என்றெல்லாம் விசாரித்தார் கைலாசம்.

"என் பெயர் மகாதேவன். அப்பா, அம்மா என் சிறு வயதிலேயே காலமாகி விட்டார்கள். திருநெல்வேலியில் பிரபல பாங்கரான மாமா தான் என்னை வளர்த்தார். இப்போது அந்த ஊர் பர்மாஷெல்லில் வேலை எனக்கு. சம்பளம் நூற்றைம்பது ரூபாய்" என்று சுருக்கமாக அவனும் பதிலளித்தான். ஏனோ அவன் குரல் பளிச்சென்றில்லை.

பிரயாண அசதியாயிருக்கும் என்று நினைத்த கைலாசம், "காப்பி பலகாரம் கொண்டுவா, அம்மா, சுபத்ரா!" என்றார்.

சுபத்ராவின் காதில் அது விழவே இல்லை.

"அலங்காரமெல்லாம் சரியா யிருக்கிறதா!" என்று நிலைக் கண்ணாடியில் பார்த்துக்கொண்டு விட்டுக் கூடத்துக்கு வந்த அவளது பார்வை அவன்மேல் திருட்டுத்தனமாகப் பாய்ந்தது. பார்த்த கணமே திகைத்தது.

அவன் முகத்தில் பெண் பார்க்க வந்த களையே இல்லையே, ஏன்!

"சாப்பிடுங்கோ, சார்" என்று உபசரித்தார் கைலாசம்.

"ஊஹூம், வேண்டாம்!" என்றான் அவன்.

"கொஞ்சமாவது சாப்பிடுங்கோ" என்று மீண்டும் தூண்டினார் கைலாசம். மகாதேவனும் தொட்டுப் பார்த்தான்.

ஐந்து நிமிஷத்துக்குப் பிறகு, "நமஸ்காரம் பண்ணம்மா" என்றார் கைலாசம்.

'இந்தக் காலத்திலே கூட இவ்வளவு சங்கோசப்படுகிற பிள்ளை இருக்கிறானே!' என்று வியந்தவாறே சுபத்ரா அருகில் சென்றாள்.

திடுக்கிட்டாற்போல் எழுந்த அவன், "வேண்டாம்! வேண்டாம்!" என்றான்.

"என்ன இது!" என்று கூச்சலிட்டார் கைலாசம். சுபத்ரா சிலையாக நின்றாள். தலையைக் குனிந்தவாறு நின்ற அவன் "மன்னிக்கணும் சார். உங்களுக்கு எல்லாம் தெரிந்திருக்கும் என்று நினைத்தேன். நாகராஜய்யர் சொல்லவில்லையா!" என்றான்.

அப்போது கைலாசத்தின் நண்பர் நாகராஜய்யரே பிரவேசித்தார். ஒன்றும் புரியாமல் விழித்த கைலாசம், "என்னய்யா இதெல்லாம்!" என்றார் அதட்டலாக.

"சொல்லத்தானே வந்திருக்கிறேன்!" என்று நாற்காலியில் உட்கார்ந்த அவர் மகாதேவனையும் தம் அருகில் உட்கார வைத்துக் கொண்டார். அவன் உடல் நடுங்கிக் கொண்டிருந்தது. 'உன்னை போவதா வேண்டாமா!' என்பதுபோல் சுபத்ரா நின்று கொண்டிருந்தாள்.

"இந்தப் பையனின் மாமா தான் சார், நான் சொன்ன வரன். நாற்பது வயசுதான் ஆகிறது. முதல்தாரம் போய் மூன்று வருஷங்களாகின்றன. வீட்டிலே விளக்கேற்றுகிறவர்கள் யாரும் இல்லை. சொத்தோ ஏராளமா யிருக்கிறது. நல்ல இடமா யிருந்து இரண்டாம் தாரமாய் இருந்தால்கூடப் பாதக மில்லை என்று நீங்கள் யாரிடமோ சொன்னதாகக் காதிலே விழுந்தது. அதனால்தான் நிச்சயம் பண்ணினேன். மனுஷன் தங்கக்கம்பி. நீங்களே பாருங்கோ! முதல் முதல்லே நாமே போனால் குழந்தை மனசோ உங்க மனசோ சங்கடப் படப் போகிறதே என்று தம் மருமானை அனுப்பி யிருக்கிறார். உங்கள் சம்மதம் நேரடியாகத் தெரிந்த பிறகு தான்..." என்று அவர் பேசி முடிக்கு முன்பே, ரௌத்ராகாரமாக எழுந்த கைலாசம், "போதுமய்யா, நிறுத்தும்! என் பெண்ணுக்குக் கல்யாணமே பண்ணப் போகிறதில்லை, இப்போதைக்கு" என்றார்.

சுபத்ராவின் தலை சுழன்றது. அழுகை பீறிட்டுக் கொண்டு வந்தது. ஓடியே போய் விட்டாள் உள்ளே.

முகத்தில் அசடு வழிய எழுந்த நாகராஜய்யர் "சரி, நான் வருகிறேன்!" என்றார்.

"போய் விட்டு வாருங்கள். இனியாவது தெரியாத விஷயத்திலே தலையிடாதீர்கள்!" என்றார் கைலாசம்.

"செத்தேன், பிழைத்தேன்" என்று நாகராஜய்யர் ஓட, அவமானமும் ஆத்திரமும் பொங்க அவரைத் தொடர்ந்தான் மகாதேவன். இரண்டு நாட்களில் ஊராருக்கு இச் செய்தி எட்டியது. சேதி வம்பாக வளர்ந்தது. சுபத்ரா வேதனைப் பட்டாள்.

இந்த வேதனைக்கு மாற்றுத் தேட விரும்பிய கைலாசம் சுபத்ராவை அழைத்துக் கொண்டு

ஸ்தல யாத்திரை போய் விட்டார். சுபத்ராவுக்கும் இந்த ஸ்தல யாத்திரை மிகவும் பிடித்திருந்தது.

யாத்திரை இன்பத்தில் நடந்த சம்பவத்தை மறந்தே விட்டார் கைலாசம். சுபத்ராவால் மட்டும் அது முடியவில்லை. அவன் நினைவும் மறக்கவில்லை. அவன் உருவம் அப்படியே பதித்து விட்டது அவள் நெஞ்சில். கனவு கண்ட கனவுபோல் உள்ளத்தோடு உருகினாள். ஆறு மாதமாகி விட்டது அதற்குள்.

பிரயாணமும் அலுத்துப் போய் விட்டதால் வீடு வந்து சேர்ந்தனர். வந்ததும் வராததுமாகக் கைலாசத்தின் ஒன்று விட்ட தம்பி பெண்ணின் கல்யாணப் பத்திரிகை சென்னையிலிருந்து வந்து அவர்களை மீண்டும் பயணப் படுத்தியது. அப்பொழுதுதான் தற்செயலாக அவர்கள் அவனைச் சந்திக்க நேர்ந்தது.

ரயில் வேகமாகப் போய்க் கொண்டிருந்தது. சுபத்திராவின் எண்ணங்களும் ஓடின. கைலாசமும் சிந்தனையில் ஆழ்ந்திருந்தார்.

"ஒரு முக்கியமான விஷயம். சொல்ல உத்தரவு கொடுப்பீர்களா, மாமா!"–மகாதேவனின் திடீர்க் குரலால் திடுக்கிட்டு விழித்தனர் தந்தையும் மகளும். கைலாசத்துக்கு ஒரு நிமிஷமாயிற்று, தம்மைச் சமாளித்துக் கொள்வதற்கு. பிறகு "உம்" என்றார் அழுத்தலாக.

சுபத்ராவைக் கடைக்கண்ணால் பார்த்தபடி, "என் மீது ரொம்பக் கோபமாயிருக்கும் உங்களுக்கு. என்னைச் சுத்த பைத்தியம் என்று கூட நினைத்திருப்பீர்கள். என்ன செய்வது! சந்தர்ப்பம் என்னை அப்படிப்பட்ட சோதனைக்குள்ளாக்கியது" என்றான் அவன்.

இதென்ன புதிர் என்பது போல் அவனையே பார்த்தார் கைலாசம்.

சுபத்ராவும் ஆவலும் ஆசையும் ததும்ப அவனையே பார்த்துக்கொண்டிருந்தாள். அவன் சொல்லத் தொடங்கினான் :

**நா**ய் தந்தையற்ற அநாதையான நான் மாமாவின் ஆதரவில் தான் வளர்ந்து பெரியவனானேன். "நீ உத்தியோகமே தேட வேண்டாம். நமக்கு இருக்கிற சொத்துத்தான் ஏழு தலைமுறைக்குக் காணுமே!" என்றார் அவர். இருந்தாலும் என் படிப்பு வீணாகாமலிருக்க, என் பொழுது நல்ல முறையில் போக, ஒரு உத்தியோகம் தேடிக் கொடுத்தார். "இனி உனக்குக் கல்யாணம் தான் பாக்கி" என்றார்.

ஒரு நாள் உங்களூர் நாகராஜய்யர் வந்தார். அவர் ஏதோ தூர பந்துவாம் என் மாமாவுக்கு. வந்தவர் எதையோ பேசிப்பேசி என் மாமாவை இம்சித்தார். சில வார்த்தைகள் தான் என் காதில் விழுந்தன. ஒரு நாள் அவர்களிருவருக்கும் நடந்த சம்பாஷணை என்னைத் திகைக்க வைத்தது.

"எனக்கு எதற்கு ஐயா, கல்யாணமும் கார்த்திகையும்! காடு 'வா' 'வா' என்கிறது. வீடு 'போ' 'போ' என்கிறது. மருமானுக்கு வேண்டுமானால் சொல்லுங்கள்!" என்றார் என் மாமா.

"அப்படி யெல்லாம் சொல்லக் கூடாது. வயது நாற்பது கூட ஆகவில்லை உங்களுக்கு. அரண்மனை மாதிரி வீடும் அளவில்லாத சொத்தும் கேட்பாரின்றிக் கிடக்கின்றன. 'உம்'என்று ஒரு வார்த்தை சொன்னால் போதும். ஆயிரம் பெண்கள் ராஜாத்தி மாதிரி யிருக்கிறார்கள்."

இன்னும் என்ன என்னமோ சொன்னார் அவர். பார்த்தார் மாமா. அவரிடமிருந்து மீண்டால் போதும் என்றாகி விட்டது. "சரி உங்கள் இஷ்டம், பையனை அனுப்புகிறேன். அவர்கள் பெண்ணைக் கொடுக்கச் சம்மதித்தால், பிறகு பார்க்கலாம்" என்றார்.

மாமா என்னைக் கூப்பிட்டார். "மாயவரம் போய் நாகராஜய்யர் குறிப்பிடுகிற பெண்ணைப் பார். பிடித்தால் நம் வீட்டில் பெண் கொடுப்பது பற்றி அவர்களும் மனதாரச் சம்மதித்தால் மேற்கொண்டு நடக்க வேண்டியதை நான் பார்த்துக் கொள்கிறேன்" என்றார்.

நான் அவர் பேச்சைத் தட்ட முடியாமல் புறப்பட்டேன். "அவசர காரியம் இருக்கிறது ஊரிலே. அவர்களிடமும் எல்லாம் முன்பே சொல்லணும்" என்று கூறிப் புறப்பட்டு விட்டார் நாகராஜய்யர். அவர்மேல் எனக்குக் கோபம் கோபமாக வந்தது. தம் விலாசத்தைக் கூடக் கொடுக்காமல், அவர் உங்களுடைய விலாசத்தை மாத்திரம் கொடுத்ததனால், நேரே நான் உங்களுடைய வீட்டுக்கு வந்துவிட்டேன்" என்று அவன் தயங்கிய குரலில் சொன்னான்.

"அடாடா! அப்படியா சமாசாரம்!" என்று கூறிக் கைலாசம் அநுதாபப்பட்டார்.

அவன் மீண்டும் தொடர்ந்து பேசினான் : "சார், இதையும் கேளுங்கள். அப்புறம் மாமா, 'பெண் பிடித்ததா உனக்கு!' என்று கேட்டுச் சிரித்தார். அப்புறம்தான் எனக்கு ஒருவாறு விளங்கியது. நடந்ததை யெல்லாம் மாமாவிடம் சொன்னேன். மாமா அதைக் கேட்டு, 'எப்படியாவது உனக்கு இந்தப் பெண்ணை முடித்து வைக்கணும்' என்ற தீர்மானத்துடன் 'கவலைப்படாதே! நானே அவர்கள் வீடுதேடிப் போய் விஷயத்தைச் சொல்லி முகூர்த்தமும் வைத்துக் கொண்டு வருகிறேன்" என்றார். ஏதோ அவசர வேலை இருந்ததால் ஒரு வாரம் கழித்துப் புறப்பட்ட அவர் அங்கு வந்து நீங்கள் இல்லாததை யறிந்து வருந்தினார். "எப்பாடு பட்டாவது கூடிய சீக்கிரம் அந்தப் பெண்ணையே உனக்குக் கல்யாணம் செய்து வைக்கிறேன்" என்றும் சொன்னார்.

மகாதேவன் தனது கதையைக் கூறி முடித்தான். கைலாசம் அப்படியே மகிழ்ச்சிக் கடலில் மூழ்கினார். சுபத்ரா அளவு கடந்த ஆனந்தத்தில் செய்வதறியாமல் திகைத்து நின்றாள்.

'கிரீச்' என்ற சத்தத்துடன் ரயில் நின்றது ஒரு ஸ்டேஷனில். "இதோ ஒரு நிமிஷத்திலே வருகிறேன், மகாதேவன்! சுபத்ராவைப் பார்த்துக் கொள்ளுங்கள்!" என்று கூறிக் கைலாசம் பிளாட்பாரத்தில் இறங்கினார். அவர் தலை மறைந்ததுமே, "என்னை மன்னிக்க மாட்டாயா, சுபத்ரா!" என்றான் மகாதேவன்.

வெட்கத்துடன் தலை குனிந்தாள் சுபத்ரா. "கோபமா!" என்று கேட்டவாறே நெருங்கினான். "இவ்வளவு ஆசையையும் எங்கே ஒளித்து வைத்திருந்தீர்கள்" என்று மெல்லிய குரலில் கேட்டே விட்டாள் சுபத்ரா.

இதே சமயத்தில் "சர்க்கரை இல்லாத காப்பி வேணுமா, மாப்பிள்ளை! சுபத்ரா கையாலே கொடுக்கச் சொல்கிறேன்" என்று சுவாதீனமாகப் பேசியபடி உள்ளே வந்தார் கைலாசம். சட்டென்று விலகிய மகாதேவன், "நீங்கள் கொடுத்தால் கூடப் பாதகமில்லை" என்றான் இலேசாக நகைத்தபடியே.

# மேலும் மலிவானது!

## குடும்பம் முழுவதற்கும் ஒரே டால்க்

ரம்மியமணம் கொண்ட ப்ரோடெக்ஸ் உயர்ந்தரக சர்வ பிரயோக வாசனைப் பௌடர்; மிக மிகக் குறைந்த விலையில் மிக மிகப் பெரிய டப்பா! இந்தியா வெங்கும் ஆயிரக்கணக்கான குடும்பங்கள் ப்ரோடெக்ஸ் டால்கம் பௌடரைவிரும்புகின்றன—அதன் வசீகரமான வாசனையினாலும் எல்லாவற்றிற்கும் உபயோகப்படும் பரிமள டால்கம் பௌடர் என்பதனாலும்......

## இன்று ப்ரோடெக்ஸ் உபயோகித்தீர்களா?

குணம் உத்தரவாதம் கால்கேட் பாமாலிவ் அளிக்கிறது




## ப்ரோடெக்ஸ்

சர்வப்பிரயோக

வாசனைப்பௌடர்



# கொலு பொம்மை

ராஜம்

"அம்மா, அம்மா ஓடி வாயேன், மன்னி மயக்கமா யிருக்கிறாள்" என்று தங்கம் பரபரப்புடன் ஓடி வந்து கூறினாள். ஊஞ்சல் பலகையில் படுத்துக் கொண்டிருந்த காவேரி அம்மாள் பரபரப்புடன் எழுந்து ஓடினாள்.

என்னதான் மாமியாரை ருக்கு வெறுத்தாலும் இந்தச் சமயத்தில் காவேரி அம்மாளால் தன் மருமகளை அலட்சியப் படுத்த முடியவில்லை. அவள் வாய் பல ஸ்தோத்திரங்களை முணுமுணுத்தது. அவள் மனம் நினைக்காத தெய்வங்களையெல்லாம் நினைத்து வேண்டிக் கொண்டது.

விடிந்தால் அமாவாசை. அன்று நிறைந்த நாள். வீட்டில் கொலு வைப்பது குறித்த பேச்சு வந்தது. சாதாரணமாக நடந்த பேச்சு பெரிய மனக்கிலேசத்தில் கொண்டு வந்து விட்டது.

மூன்று வருடங்களுக்கு முன்புதான் நரசிம்மனுக்கும், ருக்குவுக்கும் விவாகம் நடந்தது. தங்கத்துக்குக் கலியாணம் செய்யாமல் தான் செய்து கொள்வதில்லை என்ற சங்கல்பத்தில் நரசிம்மன் வருகிற வரன்களையெல்லாம் தட்டிக் கழித்து வந்தான். தங்கத்துக்கும் வரன் குதிரவில்லை. நரசிம்மனுக்கும் கலியாணம் நடக்கவில்லை. தங்கத்துக்கு வந்த ஓரிரண்டு வரன்களும் பணத் தட்டுக் காரணமாக நின்று விட்டன. இந்தச் சமயத்தில்தான் ருக்குவின் தந்தை வந்து சேர்ந்தார். நரசிம்மனுக்கு வரதட்சிணையாகவும் பணம் கொடுத்து, தங்கத்தின் கலியாணச் செலவையும் ஏற்றுக் கொள்வதாகக் கூறினார். நரசிம்மன் மறு பேச்சின்றிச் சம்மதித்தான். கலியாணம் நடந்தது. மறு மாசமே தங்கத்துக்கும் கலியாணம் சிறப்பாக நடந்தது.

ருக்கு புக்ககத்துக்கு வந்து சேர்ந்தாள். பணப்பசையுள்ள குடும்பத்துப் பெண்ணாதலால் மாமியாரின் சலுகைகள் ருக்குவுக்கு நிறையக் கிடைத்தன. காவேரி அம்மாள் எத்தனைக் கெத்தனை ருக்குவிடம் நெருங்க முற்பட்டாளோ அத்தனைக் கத்தனை ருக்கு தனது தனித் தன்மையைக் காட்டிக் கொண்டாள்.

தங்கத்தின் கலியாணம் முடிந்ததே ஒழிய மழை விட்டும் தூவானம் விடாதது போன்று மற்றச் செலவுகள் குறையவில்லை. அதைத் தவிர ஆடி, தீபாவளி, கார்த்திகை என்று தொடர்ந்து வந்த பண்டிகைகள் நரசிம்மனின் தொல்லையை அதிகப்படுத்தின. தங்கத்துக்குச் சீராகச் செய்ய வெளியே கடன் அகப்படாவிடில், நரசிம்மன் தனக்கு வந்த சீரையே எடுக்கலானான். முதலில் ஆட்சேபணை சொல்லாதிருந்த ருக்கு வெளிப்படையாகத் தன் எதிர்ப்பைத் தெரிவிக்கலானாள்.

நவராத்திரி நெருங்கி வந்தது. ருக்கு பிறந்தகத்துக்குக் கிளம்பத் திட்டமிட்டுக் கொண்டிருந்தாள். ஆனால், தங்கம் ஊரிலிருந்து வரவும் ருக்குவும் புக்ககத்திலேயே தங்கியிருக்க முடிவு செய்தாள். நவராத்திரிக் கொலுவைப் பற்றிய அவளுடைய திட்டம் பெரிதாக இருந்தது.

"அம்மா, பொம்மைகள் ஸெலக்‌ஷன் எல்லாம் என்னிடம் விட்டு விடுங்கள்" என்றாள் ருக்கு. "நானும்தான் பார்த்து

'ஸெலக்ட்' செய்வேன்'' என்றாள் தங்கம் வேடிக்கையாக.

"படிக்கட்டுகள் தனியே மரத்திலே 'ஸ்டாண்டு' போல் செய்ய வேண்டும். பெட்டிகளையும், தகர டப்பாக்களையும் வைக்கக் கூடாது'' என்றாள் ருக்கு.

"எல்லாம் செய்து விடலாம் ருக்கு! ஊருக்கு அப்பாவுக்கு எழுதிப் பணம் வர வழைத்து விடு'' என்று வேடிக்கையாகக் கூறினாள் தங்கம்.

ருக்கு ஒரு நிமிஷம் மௌனமாக இருந்தாள். பிறகு, "ஒவ்வொரு பண்டிகைக்கும் தான் அப்பா பணம் அனுப்புகிறார். நவ ராத்திரிக்குப் பிறந்தகத்துக்குத்தான் போக ணும். புக்ககத்தில் இருந்தால் செலவு உங்களுடையதுதான்'' என்றாள் ருக்கு.

"அப்படி யென்றால் தகர டப்பாவும், மரப்பாச்சியும்தான்'' என்றாள் தங்கம்.

"கொலுவே வேண்டாம்'' என்றாள் ருக்கு. காவேரி அம்மாள் தலையிட்டு நிறுத்த வேண்டி வந்தது, அவர்களது சம்பாஷணைத் தொடரை.

ருக்கு வெகு உற்சாகத்துடன் கொலுவைப் பற்றிய யோசனை— திட்டங்களில் ஈடுபட்டாள். பணம் அனுப்புமாறு அப்பாவுக்குக் கடிதம் எழுதினாள்.



நரசிம்மனுக்கு எதிலும் சிரத்தை இல்லை. நான்கு புறமுள்ள கடனைத் தீர்ப்பதிலேயே அவன் கவனம் செலுத்தி வந்தான். அன்று ஒரு நபருக்குப் பணம் கொடுப்பதாகத் தவணை சொல்லியிருந்தான். மணி பன்னிரண்டு அடித்தது. ஆபீஸில் அவனுக்கு வேலையே ஓடவில்லை. இன்னும் மூன்று மணி நேரத்தில் அந்தக் கடன்காரன் வந்து விடுவான். என்ன செய்வது என்ற யோசனை வாட்டியது. அப்போது சமய சஞ்சீவியாகத் தபால்காரன் வந்தான். நரசிம்மன் பெயருக்கு ஐம்பது ரூபாய் மணியார்டர் வந்திருந்தது. அவன் மாமனார் கொலு செலவுக்காக அனுப்பியிருந்தார். நரசிம்மனின் அன்றையத் தேவை பூர்த்தியாகி விட்டது.

நவராத்திரி ஆரம்பமாவதற்கு மூன்றே நாட்கள் தான் இருந்தன. ருக்கு ஒவ்வொரு நாளும் தந்தையிடமிருந்து பணத்தை எதிர் பார்த்தாள். கடிதமோ, பணமோ வராதது அவளுக்கு ஆச்சரியமாக இருந்தது. இருந்தாலும் துணிந்து தெருவில் பொம்மை விற்றுக் கொண்டு போனவனைக் கூப்பிட்டு விதம் விதமான பொம்மைகளை வாங்கி விட்டாள் கடனாக. எப்படியும் தந்தை அனுப்பி விடுவார் என்ற தைரியம் அவளுக்கு.

அன்று அதிகாலையில் தன் கணவரும், மாமியாரும் பேசிக்கொண்டதிலிருந்துதான், தன் தந்தை பணம் முன்பே அனுப்பி விட்டாரென்றும் அது வேறு செலவுக்கு உபயோகமாகிவிட்டதென்றும் தெரிந்தது. ருக்கு ஒன்றும் தெரியாததுபோல் இருந்துவிட்டாள்.

காலையில் நரசிம்மன் இருக்கும்போதே பொம்மைக்காரன் பணத்துக்கு வந்தான். ருக்கு அவனை ஒரு நிமிஷம் இருக்கச் சொல்லி விட்டு உள்ளே சென்றாள். வாங்கிய பொம்மை அனைத்தையும் திருப்பிக் கொண்டு வந்து கொடுத்து விட்டாள்.

"என்ன ருக்கு இது? ஏன் பொம்மைகளைத் திருப்பித் தருகிறாய்?'' என்று கேட்டான் நரசிம்மன்.

பொம்மைக்காரன் காதில் படும்படியாக, "அப்பா பணம் அனுப்புவார் என்று வாங்கினேன். இன்றுவரை வரவில்லை. திருப்பித் தருகிறேன்'' என்றாள். பொம்மைக்காரன் போய் விட்டான்.

"அதற்காகப் பொம்மையைத் திருப்பித் தர வேண்டுமா?'' என்று கேட்டான்.

"திருப்பித் தராமல் பணம்......?''

நரசிம்மன் வாயைத் திறக்கவில்லை. ஏதோ வாயெடுத்த தன் தாயாரையும் அடக்கி விட்டான். அவன் குளித்து விட்டு வரும்போது, ருக்கு பெட்டியில் எதையெல்லாமோ எடுத்து வைத்துக் கொண்டிருந்தாள். தங்கம் தன் தாயாரிடம் ஏதோ ரகசியமாகக் கூறிக் கொண்டிருந்தாள்.

குளித்து விட்டுத் தலை துவட்டிக் கொள்ளாமல் வந்து கொண்டிருந்த தன் பிள்ளையிடம், "ஏண்டா, நரசிம்மா! எங்கேயாவது பணம் வாங்கிண்டு வாடா. கொலு இந்தத் தடவை வைத்தாக வேண்டும். அவள் அப்பா அனுப்பின பணத்தையும் கடனுக்கு அழுது விட்டோம்'' என்றாள் தாயார்.

"எங்கப்பா அனுப்புகிறது எல்லாம் தான் அப்படியே போகிறது'' என்று குரல் கொடுத்தாள் ருக்கு. அதிலே அழுகை, ஏமாற்றம் எல்லாம் நிறைந்திருந்தன.

"இப்ப என்னை என்ன செய்யச் சொல்றே அம்மா. இந்தத் தடவை எங்கேயும் பணம் கிடைக்காது.''

"இந்த வருஷம் புதிசா மாட்டுப் பெண் வந்திருக்காள். தங்கமும் இருக்காள். கொலு வைக்காமல் இருந்தால் நன்றாயிருக்காது.''

"சரி கொலு வை. இரண்டு மூன்று ரூபாய்களுக்குள் முடித்துவிடு'' என்றான்.

"அதற்கு மரப்பாச்சிகூடக் கிடைக்காது'' என்றாள் ருக்கு. தொடர்ந்து, "வீணாக

ட்ரேயான்ஸ் ட்ரான்ஸ்பெரன்ட் ஸெல்யூலோஸ் பிலிம்

# சரக்குகளைக் காப்பாற்றுகிறது...
# விற்பனையைப் பெருக்குகிறது!

உங்கள் சரக்குகள் சாமான் வாங்குபவர்களால் பார்க்கப்பட்டால் தான் விற்பனையாகும். ட்ரான்ஸ்பெரன்ட் ஸெல்யூலோஸ் பிலிம் பாக்கிங் கண்ணைக் கவருகிறது...பார்த்த உடனேயே சாமான்களின் தரத்தை எடுத்துக் காட்டுகிறது...... விற்பனையும் எளிதாகி விடுகிறது!

மேலும் நல்ல பாதுகாப்பும் கூட: ட்ரேயான்ஸ் ட்ரான்ஸ்பெரன்ட் ஸெல்யூலோஸ் பிலிம் தூசி, அழுக்கு, ஈரம் உட்புகாமல் சரக்குகளைக் காப்பாற்றுகிறது... விற்பனையாகும் வரை அவைகளை புத்தம் புதிதாக வைத்திருக்கிறது.

*வியாபாரப் போட்டி நிறைந்த மார்க்கெட்டில் விற்பனையை துரிதமாக்க இந்த அநுகூலமான சாதனம் இன்றியமையாதது. இலவச சாம்பிள்களுக்கு இன்றே எழுதுங்கள்.*





TRAYONS

**ட்ரான்ஸ்பெரன்ட்**
**ஸெல்யூலோஸ் பிலிம்**

*கண்ணைக் கவருகிறது...விற்பனையை துரிதமாக்கிறது!*

## தி திருவாங்கூர் ரேயான்ஸ் லிமிடெட்

பாக்டரி: ரேயான்புரம், திருவாங்கூர்-கொச்சின்.
ஸேல்ஸ் ஆபீஸ்: யுனைடெட் இந்தியா லைப் பில்டிங்ஸ், மதராஸ்-1.
மானேஜிங் ஏஜென்ட்கள்: எம்சிடி & ஸன்ஸ் (திருவாங்கூர்) லிட்.

TR 58E

மதராஸ் ஸ்டாக்கிஸ்டுகள்:

ரேயான் டிரேடெர்ஸ் லிமிடெட், 27, பவழக்காரத் தெரு, சென்னை -1
(கிளை ஆபீஸ்கள்: மதுரை, சேலம், கோயமுத்தூர்)

பெங்களூர் ஸ்டாக்கிஸ்டுகள்:

மெஸர்ஸ் எச். சுப்பண்ணா & சன்ஸ், டாட்பெட், பெங்களூர்



**திருநெல்வேலி வண்ணார்பேட்டையில் திரு ஏ. வி. சங்கரய்யர் தம்பதிகளின் ஷஷ்டியப்தபூர்த்தி அக்டோபர் 31ந் தேதி வெகு விமரிசையாக நடந்தேறியது. அவ்வைபவத்துக்கு நண்பர்களும் உறவினர்களும் விஜயம் செய்து சிறப்பித்தனர்.**

ஏன் கஷ்டப்பட வேண்டும்? இன்று ராத்திரியே என்னை ஊருக்குக் கொண்டு விட்டுடுங்கோ. இங்கே இருக்கப் பிடிக்கவில்லை. நிலைமை சரியான பிறகு என்னை அழைச்சுக்கலாம்'' என்றாள் ஆத்திரத்துடன்.

''ஓ, பூச்சாண்டி காட்டுகிறாயா? இப்பொழுதே கிளம்பு'' என்று கோபத்துடன் பாய்ந்தான். ருக்கு அசைய வில்லை.

வாக்குவாதங்களும், தர்க்கங்களும் சமாதானங்களும் நடந்தன. ருக்குவின் ஆவேசம் தணிய வில்லை. ஊருக்குப் போகும் தீர்மானத்தை அவள் மாற்றவே யில்லை. நரசிம்மனும் சளைக்க வில்லை. ருக்குவை ரயிலேற்றி விட்டு வந்து விட்டான்.

சிறு சம்பவம் பெரும் பிளவை ஏற்படுத்தி விட்டது. ருக்கு கோபித்து வந்தது கூடப் பிரமாதமாகப் படவில்லை அவள் தந்தைக்கு. தனியே ரயிலேற்றி விட்ட மாப்பிள்ளையின் கொடிய இதயத்தை நினைக்க நினைக்க அவருக்கு ஆத்திரமாக வந்தது.

நவராத்திரி யெல்லாம் ஆகித் தீபாவளி நெருங்கும் தினமும் வந்து கொண்டிருந்தது.

காவேரி அம்மாள் நரசிம்மனிடம் ''அவள் தான் சிறிக கோபமாகப் போய்விட்டாள். நீ தான் கடிதாகப் போடக்கூடாதா?'' என்றாள்.

''அம்மா, அந்தப் பேச்சையே எடுக்காதே! அவள் அகம்பாவத்துக்கு நாம் தூபம் போடக் கூடாது. கொஞ்ச நாள் சும்மாயிரு, தானே சரியாய் விடும்'' என்றான். அவன் தாய் அதற்கு மேல் ஒன்றும் பேச வில்லை. தங்கமும் ஊருக்குப் போய் விட்டாள்.

ருக்குவின் தாயார் உலகம் அறிந்தவள். சிறு கொலு பொம்மைக்காக ருக்கு பிறந்தகத்தில் வந்து உட்கார்ந்திருப்பது அவளுக்குப் பிடிக்க வில்லை. குடும்பம் என்றால் இன்பமும் துன்பமும் கலந்துதான் இருக்கும் என்ற தத்துவப் பொருள் அறிந்தவள். தன் கணவரை வற்புறுத்தி ருக்குவைப் புக்ககத்தில் கொண்டு விடுமாறு ஏற்பாடு செய்தாள். ஒரு நாள் திடுதிப்பென்று ருக்குவை அழைத்துக் கொண்டு ருக்குவின் தந்தை வந்து சேர்ந்தார். நரசிம்மன் அப்பொழுதுதான் தூங்கி எழுந்திருந்தான். மாமனார் வண்டியிலிருந்து இறங்குவதைக் கண்டவுடன் ஒருகணம் ஸ்தம்பித்து விட்டான். ருக்குவைக் கண்டதும் அவன் மனத்திலிருந்த கோப மெல்லாம் பறந்தோடி விட்டது.

கஷ்டப்பட்டவன் கஷ்டப்பட்டுக் கொண்டே இருப்பதில்லை. நரசிம்மனுக்கு ஒரு நல்ல இடத்தில் வேலை கிடைத்தது. ஒரு வியாபார ஸ்தல நிர்வாகமே அவன் கையில் ஒப்படைக்கப் பட்டது. நல்ல காலமாக வியாபார முன்னேற்றம் அதி விரைவில் நடந்தது. நரசிம்மனுக்கும் ஊதியம் அதிகமாகக் கிடைத்தது.

மூன்றாவது நவராத்திரி நெருங்கிக் கொண்டிருந்தது. இந்த வருஷக் கொலுவைச் சிறப்பாக வைக்க வேண்டுமென்று காவேரி அம்மாள் விரும்பினாள். தங்கமும் வருவதாக எழுதி யிருந்தாள்.

ருக்குவுக்கு உடனே நவராத்திரிச் சம்பவம் நினைவு வந்து விட்டது. அவளுக்குக் கொலு வைப்பதென்றாலே மனம் கசந்தது. போதாக் குறைக்கு அவள் உடல் நலம் வேறு சரியில்லை. பிறந்தகத்துக்குப் போய் விடத் துடியாய் நின்றாள்.

ஆனால் தங்கம் ஊரிலிருந்து வந்து கொலுவுக்கு வேண்டிய ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன.

பரக்கப் பரக்க ஓடி வந்த காவேரியம்மாள் ருக்குவுக்கு என்ன உடம்பு என்பதைப் புரிந்துகொண்டு விட்டாள். இத்தனை நாட்களும் எதை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தாளோ அந்த பாக்கியம் கைகூட விருக்கிறது என்பதை நினைத்ததும் அவளுக்கு மகிழ்ச்சி ஏற்பட்டது.

''என்ன, அம்மா! டாக்டருக்கு ஆள் அனுப்ப வேண்டாமா?'' என்றாள் தங்கம்.

''எனக்கு உடம்பு சரியில்லாமல் இருக்கும் போது நவராத்திரி என்ன வேண்டிக் கிடக்கிறது?'' என்று உடல் சரியற்ற அந்த நிலையிலும் ருக்கு கடிந்து கொண்டாள்.

காவேரி அம்மாள் ''டாக்டருக்கு ஒன்றும் ஆள் அனுப்ப வேண்டாம். உனக்கு மருமான் பிறக்கப் போகிறான்!'' என்றாள்.

ருக்குவின் முகம் வெட்கத்தால் சிவந்தது.

''ருக்கு! இனிமேல் இந்தமாதிரி ஏதாவது பேசினால் என் மருமானை விட்டு அடிக்கச் சொல்லுவேன்!'' என்று கூறித் தங்கம் கொல்லென்று சிரித்தாள்.

அதே சமயம் நரசிம்மன் கையில் முருகன் பொம்மை ஒன்றுடன் உள்ளே வேகமாக நுழைந்து கொண்டிருந்தான்.

பாப்பா மலர் தொடர் கதை

# பர்மா ரமணி

அழ.வள்ளியப்பா

## 20. அவசர வேலை

ஒரு சர்க்கஸ் கம்பெனி முதலாளியிடம் ஒரு குண்டோதரன் வந்து, வேலை வேண்டுமென்று கேட்டான்.

"உனக்கு நான் ஒரு வேலை தருவேன். அதை உன்னால் சரிவரச் செய்ய முடியுமா?" என்று கேட்டார் சர்க்கஸ் கம்பெனி முதலாளி.

"எந்த வேலை கொடுத்தாலும் நான் சரியாகச் செய்வேன். உங்களுக்குச் சந்தேகம் வேண்டாம் முதலாளி" என்றான் குண்டோதரன்.

"தினசரி இங்கே இரண்டு ஆட்டங்கள் நடக்கும். ஒவ்வொரு ஆட்டத்திலும் நூறு இட்டலிகளைத் தின்று காட்ட வேண்டும். உன்னால் முடியுமா?"

"ஓ! கட்டாயம் தின்று காட்டுவேன்!"

"இன்னொரு விஷயம். வைகுண்ட ஏகாதசி, மகாசிவராத்திரி போன்ற விசேஷ நாட்களில் மூன்று ஆட்டங்கள் நடத்துவோம். அந்த மூன்று ஆட்டங்களிலும், ஆட்டத்துக்கு நூறு இட்டலிகள் வீதம் தின்று காட்ட வேண்டும். சம்மதமா?"

"அப்படியே முதலாளி. ஆனால், ஒரே ஒரு சிறு வேண்டுகோள். ஒரு ஆட்டத்துக்கும் இன்னொரு ஆட்டத்துக்கும் இடையிலே கொஞ்ச நேரம் 'லீவு' வேணும்."

"லீவா! எதற்கு?"

"வேறு எதற்குமில்லை. அந்த நேரத்தில் வீட்டுக்குப் போய்ச் சாப்பிட்டு விட்டு வரத்தான்!"

இந்தப் பதிலைக் கேட்டதும், அந்த சர்க்கஸ் கம்பெனி முதலாளிக்குத் தாங்க முடியாத சிரிப்பு வந்து விட்டது. ஆட்டத்துக்கு நூறு இட்டலி சாப்பிடுகிறவனுக்கு வீட்டிலே வேறே சாப்பாடாம்! எப்படி இருக்கிறது கதை!

அந்தக் குண்டோதரனைப் போல் நூறு நூறாக உள்ளே தள்ளாத போனாலும், பத்துப் பத்தாகவாவது தள்ளிக் கொண்டுதானிருக்கிறான் குண்டுமணி. சரி, அவனுடைய சாப்பாட்டைப் பற்றி இனி விஸ்தாரமாகப் பேசக் கூடாது. பாவம், திருஷ்டி பட்டு, அவனுடைய சுற்றளவு குறைந்து விடப் போகிறது!

'குண்டுமணி! குண்டுமணி!!" என்று ஆனந்தன் பல தடவை கூவி அழைத்தும், குண்டுமணி கண் திறக்கவில்லை. அப்படி இப்படி அசையக் கூட இல்லை. ஆனந்தனும் விடவில்லை. திரும்பத் திரும்பப் பலமாகச் சத்தம் போட்டு அழைத்துக் கொண்டேயிருந்தான்.

சத்தம் கேட்டு, குண்டுமணியின் அம்மா பின் கட்டிலிருந்து ஓடி வந்தாள். 'யாரது?' என்று கேட்டுக் கொண்டே ஜன்னல் பக்கமாகப் பார்த்தாள். பார்த்ததும், "ஆ! ஐயையோ! திருடன்! திருடன்!" என்று கதறி விட்டாள்.

ஆனந்தன் ஆங்கில உடை அணிந்து கொண்டு, கண்களுக்கு நேராக 'பைனாகுலர்'ரை வைத்திருந்ததால், அவனை ஒரு நவநாகரிக முகமூடித் திருடனாக நினைத்து விட்டாள் குண்டுமணியின் அம்மா. அதனால் தான், அப்படிக் கதறினாள். ஆனால், நல்ல வேளை, அந்தச் சத்தத்தைக் கேட்டுத் தெருவில் கூட்டம் கூடி விடவில்லை!

அதற்குள், "அம்மா, என்னம்மா இது! நான் தானம்மா ஆனந்தன்! அடையாளம் தெரியவில்லையா!" என்று கூறிக் கொண்டே பைனாகுலரைக் கீழே தொங்க விட்டான் ஆனந்தன்.

உடனே, குண்டுமணியின் அம்மா அவனை உற்றுப் பார்த்தாள். பார்த்ததும், அவளுக்குச் சிரிப்பு வந்து விட்டது. "என்ன தம்பி, அடையாளமே தெரியவில்லையே! பயந்து போய் விட்டேன்!" என்றாள் அவள்.

"சரி அம்மா. கதவைத் திறந்து விடுங்கள். குண்டுமணியைப் பார்க்கத் தான் வந்தேன்" என்றான் ஆனந்தன்.

குண்டுமணியின் அம்மா உடனே கதவைத் திறந்து விட்டாள். "என்ன, குண்டுமணிக்கு இன்னும் விடியவில்லை போலிருக்கிறதே!" என்று கேட்டான் ஆனந்தன்.

"இன்னும் சூரியன் உச்சிக்கு வரவில்லையே!......உன் சிநேகிதன் சமாசாரம் உனக்குத் தெரியாதா?" என்று கூறிவிட்டுப் பின் கட்டுக்கு அவள் போய் விட்டாள்.

ஆனந்தன் நேராகக் குண்டுமணி படுத்திருந்த இடத்துக்குச் சென்றான். "டேய் குண்டுமணி! குண்டுமணி!" என்று கூப்பிட்டுப் பார்த்தான். ஊஹூம். அவன் அசையவே இல்லை!



நன்றாகக் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்தான்.

உடனே, ஆனந்தனுக்கு ஒரு வேடிக்கையான எண்ணம் தோன்றியது. அந்த அறையில் கிடந்த தினசரிப் பத்திரிகையின் ஒரு தாளை எடுத்தான். அதை நீளவசத்தில் இரண்டு பாதிகளாகக் கிழித்தான். ஒவ்வொரு பாதியும் வால் போல நீளமாக இருந்தது. அவற்றில் ஒன்றை எடுத்து, குண்டுமணியின் முகத்தில் இருந்து நெஞ்சு வரை போர்த்தினான். தாளின் அடிப்பாகம், அதாவது நெஞ்சுப் பக்கம் இருந்த பகுதியின் மேல் தன் கை விரல்களை வைத்து அழுத்திக் கொண்டான். உடனே, நடக்கப் போவதை ஆவலாகக் கவனித்தான். அது வேடிக்கையாகத்தான் இருந்தது.

குண்டுமணி வெளியே மூச்சை விடும் போது, முகத்தை மூடியிருக்கும் தாள் 'விர்'ரென்று மேலே எழும்பும். மூச்சை உள்ளே இழுக்கும் போது, 'விருட்'டென்று கீழே இறங்கி முகத்தோடு ஒட்டிக் கொள்ளும். திரும்பவும் மூச்சை வெளி விடும்போது மேலே எழும்பும்; உள்ளே இழுக்கும்போது, முகத்தோடு ஒட்டிக் கொள்ளும். இப்படி அந்தத் தாள் மேலே கிளம்புவதும், கீழே இறங்குவதும் வேடிக்கையாக இருந்தது ஆனந்தனுக்கு. கொஞ்சநேரம்வரை இப்படியே நடந்தது. அப்புறம் வேடிக்கை பார்க்க விரும்பவில்லை ஆனந்தன். தட்டி எழுப்ப ஆரம்பித்தான். குண்டுமணி எழுந்தால்தானே! அடித்து எழுப்பிப் பார்த்தான். அதற்கும் பலனில்லை!

பிறகு, அங்கு ஜன்னலிலிருந்த மூக்குப் பொடியில் கொஞ்சம் அள்ளிக் குண்டுமணியின் மூக்குக்கு நேரே பிடித்தான். சிறிது நேரம்வரை ஒரு பலனையும் காணோம்! பிறகுதான் 'அஸ்க்' என்று தும்மல் தும்மினான் குண்டுமணி. ஆனாலும், எழுந்திருக்கவில்லை! திரும்பவும் கொஞ்சம் பொடியை மூக்குக்குள்ளே செலுத்தினான் ஆனந்தன். அப்போது, அந்தப் பொடி 'விர்'ரென்று உள்ளே சென்று, குண்டுமணியின் மண்டையைத் தாக்கி விட்டது போலிருக்கிறது. இல்லாத போனால், 'அஸ்க், அஸ்க்' என்று சேர்ந்தாற் போல் தும்மிக் கொண்டே அவன் எழுந்து உட்காருவானா?

குண்டுமணி எழுந்து உட்கார்ந்ததும், "என்னடா குண்டு சிகாமணி, கும்பகர்ணன் சாகிறபோது அவன் தூக்கத்தை யெல்லாம் உன்னிடத்திலேதான் ஒப்படைத்துவிட்டுச் செத்தானோ!" என்று கேட்டான் ஆனந்தன்.

"யாரது?" என்று கண்களைத் திறக்காமலே கேட்டான் குண்டுமணி.

"கொஞ்சம் கண்களைத் திறந்து பாரப்பா. நீ இருக்கிறது பூலோகம் தான் என்கிறதும், உன் எதிரே இருப்பவன் உன் நண்பன் ஆனந்தன்தான் என்கிறதும் நன்றாகத் தெரிந்துவிடும்" என்றான் ஆனந்தன்.

உடனே குண்டுமணி கண்களைத் திறந்து நிமிர்ந்து பார்த்தான். பார்த்ததும் அவனுக்குச் சரியாகத் தெரியவில்லை. கண்களைக் கசக்கி விட்டுக் கொண்டு திரும்பவும் பார்த்தான். உடனே அவன் முகம் மலர்ந்தது.

"அடடே! ஆனந்தனா! இது என்னடா சூட்டும், கோட்டும்! பெரிய துரைமாதிரி இருக்கிறாயே! எந்தக் கப்பலிலே வந்து இறங்கி யிருக்கிறீர் இந்தத் துரை? கத்திக் கப்பலிலா, சண்டைக் கப்பலிலா, நீர்மூழ்கிக் கப்பலிலா? அல்லது..."

"அல்லது, காகிதக் கப்பலிலா என்று தானே கேட்கிறாய்? உனக்கு எல்லாமே வேடிக்கையாகத்தான் இருக்கும்!"

"ஆமாம், இதெல்லாம் என்னடா வேஷம்?"

"எல்லாம் விவரமாகச் சொல்லுகிறேன். முதலில் நீ இப்போதே என்னோடு கிளம்பி வர வேண்டும். மிகவும் அவசரமான ஒரு வேலை!" என்று கூறினான் ஆனந்தன். (தொடரும்)




# ஸானடோஜன்

இப்போது புதிதாக

## 5 விட்டமின்கள்

சேர்க்கையால் பலப்படுத்தப் பட்டிருக்கின்றது

மிகச் சிறந்த ஜெர்மன் டானிக்

25,000க்கு மேற்பட்ட டாக்டர்களால்
நன்கு பரிசோதித்து முடிவு செய்யப்பட்டது!

பசியின்மை * பொதுவான தளர்ச்சி
பலவீனம் * நரம்புத் தளர்ச்சி * விடாத
களைப்பு * நோய்க்குப்பின் தெம்பு பெற

இவற்றிற்கெல்லாம் சிறந்த டானிக்




## 33. கோமாளிக் கூத்து

இலஞ்சிச் சாமியாரைப் பளிஞர்கள் மத்தியில் சொக்கி குடியிலே குடியேற்றி விட்டு டாக்டர் சுரேஷ் திருச்சிக்குத் திரும்பியபோது, இலஞ்சிச் சாமியாரோ அல்லது பளிஞர் தலைவனோ மீண்டும் அத்தனை சீக்கிரம் டாக்டர் திரும்பவும் மலைக் காட்டுக்கு வருவார் என்று எதிர்பார்க்கவில்லை. ரவீந்திரன் வருவான் என்றோ அவர்கள் கனவில் கூட எண்ணவில்லை. அதிலும் அந்த நிலையில் அவன் வருவான் என்று எப்படி எதிர்பார்த்திருக்க முடியும்?

அன்று அமாவாசை தினம். சாமியார் காட்டில் கொஞ்ச தூரம் நடந்து சென்று, மலையருவியிலே குளித்து விட்டு நிலவுப் பாறையை யடுத்த காட்டு வழியே நடந்து வந்து கொண்டிருந்தார். அப்பொழுது மனத்தைக் குளுமைப் படுத்துகிற ஒரு ரம்யமான வாசனை அந்தக் காட்டுக்குள்ளேயிருந்து வந்தது. சாமியார் திகைத்தார். நாகலிங்கப் பூவின் வாசனை அது!

நாகலிங்க மரம் என்றால் இலஞ்சிச் சாமியாருக்கு ஒரு பக்தி அதில்! பல ஆண்டுகளுக்கு முன்பு தானும் மற்ற மனிதர்களைப் போல வீடும் வாசலுமாக இருந்த காலத்தில், தாம் தர்மகர்த்தாவாக இருந்து மேற்பார்த்து வந்த சிவன் கோவிலிலே வைத்து வளர்ப்பதற்காக எங்கெங்கோ சென்று தேடி ஒரு நாகலிங்கக் கிளையைக் கொண்டு வந்து நட்டார். ஆனால் கவனிப்புக் குறைவினாலோ அல்லது வேறு என்ன காரணத்தாலோ நாகலிங்கக் கிளை அந்த பூமியிலே பிடித்து வளரவில்லை. 'அச்சானியம்' என்று ஒன்று சொல்வார்களே, அப்படி அவருடைய மனத்தில் அந்தச் சிறு சம்பவம் ஒரு பெருங் கறையை உண்டாக்கியிருந்தது. சிவபெருமானுக்கு மிகவும் பிரீதியானதும், சிவ பூஜைக்கு மிகவும் புனிதமானதுமாக விளங்குகிற அந்த நாகலிங்கம், தம்முடைய கையினால் நட்டது, வளராமல் போகவே அது ஒரு பெரும் துர்ப்பாக்கியம் என்று அவருக்குப் பட்டது. பிறகு வாழ்க்கையிலே நடந்த அதிர்ச்சி நிரம்பிய சம்பவம் எல்லாம், அந்த மரம் பட்டுப் போனதன் விளைவு என்றும் அதுவே பின்னால் ஏற்பட்ட துர்ப்பாக்கியத்துக்கு முன் அறிகுறி யென்றும் பலமுறை அவர் எண்ணிப் பார்த்திருக்கிறார். இதெல்லாம் காரணமாக அவருக்கு நாகலிங்க மரத்தினிடத்தில் ஒரு பய பக்தியே இருந்தது.

எனவே இப்பொழுது அந்த மரத்தைப் பார்த்ததும், தம்முடைய பிராயச்சித்தத்துக்கு உரிய காலம் வந்து விட்டது போல ஒரு நினைப்பு எழுந்தது. 'விறுவிறு' என்று தலைவனுடைய குடிசைக்கு நடந்தார். அவனிடம் விஷயத்தைச் சொன்னார்.

மறு நாளே இலஞ்சிச் சாமியாருடைய ஆசிரமத்துக்கு அருகிலே ஒரு நாகலிங்கக் கிளை நடப்பட்டது. மரத்தோடு பழகிப் போன பளிஞர்களின் கவனமான பாதுகாப்பிலே பேணப்பட்டு அந்தக் கிளை 'நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமும்' என்ற நைந்து போன பழைய சொல்லுக்கு ஏற்பத்





தளிர்க்க ஆரம்பித்தது. இலஞ்சிச் சாமியார் அங்கே ஒரு சிவலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்ததோடு, அருகில் ஒரு சூலாயுதத்தையும் வேலையும் கட்டுத் தமக்குத் தெரிந்த விதத்தில் நித்திய பூஜை தவறாமல் நடத்தத் தொடங்கினார்.

கோவில் ஸ்தாபிதம் ஆகிறதென்றால், பளிஞர்களுக்கு ஏதேதோ பழம்பெரு நம்பிக்கைகள் உண்டு. அந்த நம்பிக்கைகளுக்கு ஏற்ப அவர்களும் அந்தக் கோவிலுக்கு வெளியே மரத்திலிருந்து சில அடி தூரத்தில் ஒரு கோமாளி பொம்மையை நிறுத்திவைத்து விட்டார்கள்! கம்பீரமான மண் ஆனை ஒன்று; அதன்மேல் கோமாளி உட்கார்ந்து அந்த வட்டத்துக்குள்ளே விலங்குகளோ துஷ்டப் பூச்சிகளோ அல்லது பேய் பிசாசுகளோ அண்டிவிடாதபடி காவல் காப்பான் என்பது அந்தச் சொக்கிகுடிப் பளிஞர்களுக்கே உரிய பரம்பரை நம்பிக்கை. சொக்கப்பன் சொன்னான்: "சாமி, கோமாளியையும் இங்ஙனே வச்சாச்சாக்கும். இனி, நிலா அன்னிக்கு, கோமாளித் திருநாளும் கொண்டாடணுமாக்கும்!"

இலஞ்சிச் சாமியார் கோமாளி திருவிழாவைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறார். அவருடைய சிறு பிராயத்தில், மழை பெய்வதற்காகவும், நிலம் விளைந்து, அறுவடை சரியாக நடப்பதற்காகவும் சில கிராமங்களில் கோமாளித் திருவிழாக் கொண்டாடுவதை அவர் பார்த்திருக்கிறார். பளிஞருடைய குடியிருப்பிலும் கூட இப்படி ஒரு திருவிழா — சில மாறுதல்களுடன் — நடக்கும் என்றும், அது ஒரே வேடிக்கைக் கூத்தாக இருக்கும் என்றும் கேள்விப்பட்டதுண்டு. ஆகவே இப்பொழுது தலைவன் அதைப் பற்றிச்



சொன்னதும் "பலே! அப்படியே நடத்தி விடுவோம்!" என்று உரத்த குரலிலே உத்சாகத்தோடு ஆமோதித்தார் அவர்!

ஆசிரமத்துக்கு வெளியே ஆலமரத்தின் அடியிலே, புதிதாக நடப்பட்ட நாக லிங்கத்துக்கு அருகிலே நின்று இவர்கள் இப்படிப் பேசிக்கொண்டிருந்த போதுதான் காலைந்து பேர் குடியிருப்பை நோக்கி நடந்து வருவது தொலைவிலே தெரிந்தது. தலைவன் கூர்ந்து பார்த்தான். அவனுக்கு எப்பொழுதுமே நல்ல தீர்க்கமான பார்வை.

"சாமி! நம்ம டாக்டரு சாமி!" என்று ஒரு துள்ளுத் துள்ளினான் சொக்கப்பன். சாமியார் கண்ணை இமைக்காமல் பார்த்தார். இதற்குள் அருகிலே வந்து விட்டார்கள் அவர்கள்.

"சாமி! சேவிக்கிறேன்!" என்றார் டாக்டர் சுரேஷ். அடுத்த நிமிஷம் தலைவனுக்கு அருகிலே வந்து நின்று அவனுடைய கையைத் தமது கையிலே பிடித்துச் சேர்த்த வண்ணம் சுரேஷ் வணக்கம் செய்தார். இரண்டு கைகளும் ஒரு துண்டினால் வரிய வரியக் கட்டப்பட்டு, பக்கத்திலே இரண்டு மனிதர்களின் கண்டிப்பான கண்காணிப்பிலே நடத்திக் கொண்டு வரப்பட்ட அந்த விசித்திர மனிதனை டாக்டர் சுரேஷ் அறிமுகம் செய்வித்தார்: "இதோ ரவீந்திரன்!"

"என்ன? என்ன?" என்று ஏககாலத்தில் அதிசயத்தோடு குரல் வந்தது! இலஞ்சிச் சாமியாரும் சொக்கப்பனும் அப்படித் திகைத்துப் போய்க் கேட்டார்கள்!

"ஆமாம், எந்த அதிசய கலைஞனுடைய வரவை நீங்கள் ஆவலோடு எதிர் பார்த்தீர்களோ, எந்த அதிசய கலைஞனுடைய புல்லாங்குழல் வாசிப்பு இந்த மலைக் காட்டைப் புனிதப் படுத்த வேண்டும் என்று நீங்கள் விரும்பினீர்களோ, அந்த அதிசய கலைஞனை அழைத்து வந்திருக்கிறேன். ஆனால் — சரி, அதெல்லாம் சாவகாசமாகப் பேசிக் கொள்வோம். முதலில் சாமியாருடைய ஆசிரமத்துக்குள்ளே இவர்கள் போகட்டும்!" என்று டாக்டர் சொல்லி, ரவீந்திரனையும் அவனோடு வந்த இரண்டு மனிதர்களையும் ஆசிரமத்தினுள் அழைத்துக் கொண்டு சென்றார்.

இதன் பிறகு டாக்டர் சுரேஷ் தமது திட்டத்தின்படி ஒரு வாரம் அங்கே தங்கவில்லை. இலஞ்சிச் சாமியாரும் சொக்கப்பனும் பௌர்ணமியன்று 'கோமாளிக் கூத்து விழா' நடத்தப் போவதைப் பற்றிச் சொன்னதும் அவர் மறு நாளே திருச்சிக்குப் புறப்படுவதாகச் சொன்னார். இலஞ்சிச் சாமியாருக்குத் திகைப்பாக இருந்தது. டாக்டர் சொன்னார்:

"சாமிகளே! என்னையும் உங்களுடைய திருக் கூட்டத்திலே சேர்த்து விடாதீர்கள். அடியேன் ஒரு சம்சாரி. குடும்பஸ்தன். அத்தோடு எத்தனையோ குடும்பங்களின் ஆரோக்கியத்தைப் பாதுகாக்க வேண்டியவன்! ஒரு வாரம் இப்பொழுது தங்கி விட்டு, பிறகு பௌர்ணமியன்றும் இங்கே வரவேண்டும் என்றால் அது எப்படி முடியும்? சர்க்காரிலேதான் அந்த மாதிரி லீவு கொடுப்பானா?"

"என்ன! அப்படியானால் பௌர்ணமிக்கு நீங்கள் வருகிறீர்களா?" என்று கேட்டார் சாமியார்.

"கோமாளித் திருநாளுக்கு நீங்களும் வர்றீங்களாக்கும்! அட வேலப்பா!" என்றான் சொக்கப்பன். எல்லையற்ற ஆனந்த உணர்ச்சியை 'வேலப்பா' என்ற சொல்லினால் வெளிப்படுத்துவது பளிஞர் தலைவனின் பழக்கம்.

"அதனால்தான் இப்பொழுது எடுத்துள்ள ஒரு வார லீவில் ஐந்து நாளை மிச்சம் பண்ணலாம் என்று பார்க்கிறேன்.

ஆனால் புறப்படுவதற்கு முன்பு ரவீந்திரனைப் பாதுகாப்பதற்கு வேண்டிய சில விஷயங்களைச் சாமியோடு கலந்து கொள்கிறேன்'' என்றார் சுரேஷ்.

சொக்கப்பனுக்கு டாக்டர் சுரேஷ் வந்தது, வேலப்பனே எழுந்தருளி வந்தது போல இருந்தது. ஆனால் ரவீந்திரனை அந்த நிலையிலே கண்டது அவனுடைய மனத்தில் ஆற்ற முடியாத துயரத்தைக் கொடுத்தது. 'நாகரிகம்' என்ற பெயரில் இதயத்தில் பாசத்தையும் அன்பையும் வற்றச் செய்து, வெறும் சம்பிரதாய நமஸ்காரங்களும் வணக்கங்களும், பொருளற்ற வரவேற்புச் சொற்களும், அர்த்தம் இல்லாத நன்றி வார்த்தைகளுமாக வலைய வருகிற நகர மனிதர்களோடு பழகிப் பழகிச் சலித்துப் போன டாக்டர் சுரேஷுக்குச் சொக்கப்பனுடைய உள்ளத்தின் ஆசாபாசம் தெய்வ தரிசனமாக இருந்தது.



"முன்பின் தெரியாத எங்களிடம் இத்தனை அன்பு உங்களுக்கு எப்படி ஏற்படுகிறது? எங்களால் இதைப் புரிந்து கொள்ளவே முடியவில்லை!'' என்றார் டாக்டர் சுரேஷ். இதற்குப் பதில் சொல்லத் தெரியாமல் சொக்கப்பன் அன்பின் வசமாகிக் கண் கலங்கி நின்றான். அவனுடைய சார்பிலே இலஞ்சிச் சாமியார் பேசினார்:

"டாக்டர், இவர்களுடைய அன்பு தெய்விகமாக இருக்கிறது. நான் இங்கு குடியேறிய வினாடியிலிருந்து ஒவ்வொரு கணமும் அதை அனுபவிக்கிறேன். ஒன்று தோன்றுகிறது. நமது நாட்டில் முன் காலத்தில் எல்லாருமே இப்படித்தான் அன்பாக இருந்திருக்கிறார்கள். இந்த இங்கிலீஷ்காரன் வந்துதான் மயில் சிம்மாசனத்தையும் கோஹினூர் வைரத்தையும் நம்முடைய மக்களுடைய இதயப் பண்பையும் — மூன்றையும் கொள்ளையடித்துக் கொண்டு போய் விட்டான்!''

டாக்டர் சுரேஷ் சிரித்தார். சொன்னார்: "சாமி, உங்களுக்கு இத்தனை பாலிடிக்ஸ் தெரியும் என்று எனக்குத் தெரியாதே! சபாஷ்! ஆனால் ஒன்று சொல்லுகிறேன். மயில் சிம்மாசனத்தையும், கோஹினூர் வைரத்தையும் திரும்ப வாங்கிக் கொண்டு விடலாம். இதயப் பண்பு என்றீர்களே அதை எப்படி வாங்குவது? அதற்கு வழி நம்மிடந்தான் இருக்கிறது!''

இப்படி டாக்டர் சொன்னதும் சாமியார் கூறினார்: "இதயப் பண்புதானே? ஆமாம். அதற்கு வழி நம்மிடந்தான் இருக்கிறது. என்னைக் கேட்டால் டையும், புல் சூட்டும் போட்ட ஒவ்வொரு கறுப்புத் துரை மகனும் ஒரு மாசம் நம்முடைய நாட்டு மலைக் குகைகளிலே வாசம் செய்ய வேண்டும் என்பேன். நமது நாட்டுப் பூர்வ குடி மக்களோடு பழக வேண்டும் என்று சொல்வேன். அவர்களை நாம் நாகரிகப் படுத்த வேண்டும் என்று அன்று நான் பேசினேனல்லவா? அது தவறு. இவர்களோடு பழகினால் நம்மை நாமே நாகரிகப் படுத்திக் கொள்ளலாம்! உண்மையில் இந்தச் சில நாட்களில் என்னுடைய அநுபவம் அதுதான். என்னை இவர்கள் ஏதோ தெய்வசக்தி உள்ளவன் என்று என்ன மாதிரிக் கொண்டாடுகிறார்கள் தெரியுமா! அந்த உண்மையான நம்பிக்கையைப் பார்த்தால், எனக்கு மெய்யாகவே தெய்வசக்தி - இதுவரை இல்லாதது இனி மேல் — உண்டாகிவிடும் என்று தோன்றுகிறது. இந்த வெறும் வேஷத்துக்கே இத்தனை மதிப்புக் கொடுக்கிறார்களே என்று நினைக்க நினைக்க, இந்த வேஷத்துக்கு ஏற்ற காரியங்களை உண்மையாகவே செய்து அவர்களுடைய நம்பிக்கைக்கு அருகதையாக வேண்டும் என்று மனப் பூர்வமாக நினைக்கிறேன் டாக்டர். என் வார்த்தையை நம்புங்கள்!''

இலஞ்சிச் சாமியார் மிக்க உணர்ச்சியோடு பேசினார். டாக்டர் சுரேஷ் இதையெல்லாம் கேட்டு விட்டுப் பிறகு அவரைத் தனியாக அழைத்துப் போய் ரவீந்திரனுடைய சிகிச்சை விஷயமாக ஆலோசனைகள் சொன்னார். சர்ப்பகந்தியில் எத்தனை விதங்கள் இருக்கின்றனவோ, அத்தனை விதங்களைப் பற்றியும் ஜெர்மனி தேசத்து நிபுணர்களும் மற்ற மேனாட்டு வைத்தியர்களும் என்னென்ன கண்டிருக்கிறார்களோ அவற்றையெல்லாம் எடுத்துச் சொன்னார்.

"இதெல்லாம் உங்களுக்குத் தெரிந்திருக்கட்டுமே என்று சொன்னேன். எதற்



சேலம் கன்னங்குரிச்சி பிரபல காப்பிக் கொட்டை வியாபாரிகளான C. கோபாலசாமி செட்டியார் & பிரதர் உரிமையாளரும் 'சாதுல் காப்பி' தயாரிப்பாளருமான ஸ்ரீ C. ராதா கிருஷ்ண செட்டியார் அவர்களின் குமாரன் சிரஞ்சீவி பக்தவத்சலத்திற்கும் வாணியம்பாடி பிரபல மிராசுதார் ஸ்ரீ V. N. K. ராமலிங்கம் செட்டியார் அவர்களின் புத்திரி வெங்கடரத்தினத்திற்கும், 31-10-55 அன்று வாணியம்பாடியில் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது. ஏராளமான பிரமுகர்கள் விஜயம் செய்து சிறப்பித்தனர். இரவு புஷ்பக் கார் ஊர்வலமும் மறுநாள் சத்திய நாராயண பூஜையுடன் திருமணமும் இனிது நடந்தேறியது. வாழ்க, பக்தவத்சலம்-வெங்கடரத்தினம்!




ரெடிமேட் உடைகளில்--உடம்புக்குப் பொருந்தாதபடி அவை ஒருபொழுதும் சுருங்கவே செய்யாது

நீங்கள் ரெடிமேட் ஷர்ட்டுக்களோ, கிஜார்களோ அல்லது வேறு உடைகளோ வாங்கும்பொழுது "ஸான்பொரைஸ்ட்" (Sanforized) டிரேட் மார்க்கைப் பார்க்க வேண்டுமென்று வற்புறுத்தவும். அவ்விதமிருந்தால் உங்கள் உடைகள் உடம்புக்குப் பொருந்தாதபடி சுருங்கவே செய்யாது என்று உறுதி செய்துகொள்ளலாம்.

அநேகப்படியான உடைதயாரிப்பாளர்கள் சுருக்கம் செய்யப்பட்ட "ஸான்பொரைஸ்ட்" துணிகளையே உபயோகித்து வருகிறார்கள். இந்தத் துணி, மில்களில் விஞ்ஞான முறையில் முன்னதாகவே சுருக்கம் செய்யப்பட்டது.

"ஸான்பொரைஸ்ட்" என்ற அடையாளம் நீடித்த உழைச்சிக்கு உங்களுக்கு உத்திரவாதம்.




ஸான்பொரைஸ்ட்-மே-மெஜ்மான்ஸ்

பிரதி செவ்வாய்க்கிழமை இரவு 7-30 மணிக்கு ரேடியோ ஸிலோனிலிருந்து 41 மீட்டரில் ஒலிபரப்பப்படும் இனிமையான [illegible] நிகழ்ச்சியைக் கேளுங்கள்.

ஸான்பொரைஸ்ட் ஸெர்வீஸ்

'பாரிஜாத்', நேதாஜி ஸுபாஷ் ரோடு, மெரீன் டிரைவ், பம்பாய் 2

ACP. 1788

கும் மேனாட்டாரை மேற்கோள் காண்பித்தால்தான் நம்முடைய ஜனங்கள் நம்புகிறார்கள். அந்தப் பழக்கத்தில் சொன்னேன். மற்றப்படி சர்ப்பகந்தியைப் பக்குவப் படுத்துகிற முறை சித்தர்களுடைய முறையாகவே இருக்கட்டும். நம்முடைய சித்த வைத்தியத்தை ஆராய்ந்து மேனாட்டான் அதிசயப்படுவதற்கு இன்னும் அரை நூற்றாண்டு ஆகும். அவனுடைய சாஸ்திர ஞானம் அவ்வளவுக்கு இன்னும் விருத்தியாக வில்லை! உங்களிடமானதால் துணிந்து இப்படிப் பேசினேன். வெளியே நாலு பேர் கேட்டால் என்னையும் சாமிகளுடைய திருக் கூட்டத்திலே சேர்த்து விடுவார்கள். சுரேஷ்ச் சாமியார் என்று பட்டம் வேறு கொடுத்து விடுவார்கள்!''

இவ்வாறு சொல்லி விட்டு டாக்டர் சுரேஷ் தாம் வைத்தியக் கல்லூரியில் படித்த காலத்தில் தமக்கு ஆசிரியராக இருந்த பேராசிரியர் திருப்பதிநாதன் என்ற அறிஞரின் ஆராய்ச்சிக் குறிப்புகளை — தமிழிலே எழுதியிருந்ததை — இலஞ்சிச் சாமியாரிடம் கொடுத்தார்.

''இந்தக் குறிப்புகள் எல்லாம் சர்ப்பகந்தியைப் பற்றியவை. சென்னை வைத்தியக் கல்லூரியில் பல வருஷங்கள் ஆராய்ச்சி செய்து தன்னைப் பற்றி உலகத்துக்கு விளம்பரம் செய்து கொள்ளத் தெரியாமல் உயிர் விட்ட ஒரு ஞானியினுடைய குறிப்புக்கள் இவை. சித்த வைத்தியத்திலும், ஆயுர்வேதத்திலும், யூனானி முறையிலும் மேனாட்டு வைத்தியச் சோதனைகளிலும் ஒருமித்த அனுபவம் வாய்ந்த லக்ஷத்தில் ஒரு மனிதர் இந்தத் திருப்பதிநாதன். இதைப் படித்து விட்டு ஏதாவது சந்தேகங்கள் இருந்தால் கேளுங்கள். இன்று இரவிலிருந்தே சிகிச்சையை ஆரம்பியுங்கள்'' என்றார் சுரேஷ்.

இதன் பிறகு டாக்டரும் சாமியாரும் சுமார் இரண்டு மணி நேரம் வைத்தியப் பேச்சுக்கள் பேசிக் கொண்டிருந்தார்கள். அந்தக் குறிப்புக்களிலே கண்ட முறையில் மருந்துகளைச் சேர்வதற்கு வசதியான இடம் அந்த மலைக் காடுதான் என்பதிலே சாமியாருக்கு அளவில்லாத சந்தோஷம். மூளைக் கோளாறு குணமாவதற்கு அந்த மருந்து எத்தனை முக்கியமோ அத்தனை முக்கியம் அந்த அருவிச் சூழ்நிலையும், ரம்யமான அந்தக் காடும். மூளை பிசகிய ஒருவனைச் சுற்றி மனிதர்கள் எத்தனைக்கு எத்தனை குறைவாக இருக்கிறார்களோ, அத்தனைக்கு அத்தனை நல்லது என்று குறிப்பிலே எழுதியிருந்ததைப் பார்த்ததும் சாமியார் அப்படியே ஸ்தம்பித்து விட்டார்.

''டாக்டர்! நீங்கள் கவலையே பட வேண்டாம். நரம்பு சம்பந்தமான வியாதிகளிலே எனக்கும் ஓரளவு பயிற்சி உண்டு. நீங்கள் கொடுத்திருக்கிற குறிப்புக்களோ மிக மிக அருமையான ரத்தினங்கள். நீங்களும் பௌர்ணமிக்கு வருகிறீர்கள். பௌர்ணமி தினங்களிலேதான் மூளைக் கொதிப்பு பொதுவாக அதிகரிக்கும் என்று சொல்வதுண்டு. நான் அதற்குள்ளாகவே வியாதியின் நாடியைக் கண்டு தேர்ந்து வாசிப்படுத்த முயல்கிறேன். உதவிக்கோ இந்தச் சொக்கிகுடிப் பளிஞர்கள் இத்தனை பேரும் இருக்கிறார்கள். நீங்கள் நிம்மதியாகப் போய் வரலாம்!''

''ரொம்ப சரி சாமிகளே! எதற்கும் என்னோடு வந்துள்ள ஒரு மனிதனை இங்கே விட்டுச் செல்கிறேன். கம்பௌண்டராக இருந்து நல்ல அநுபவம் பெற்றவன் இவன். உங்களைவிட அதிகம் தெரிந்தவன் என்றில்லை. உங்களுக்கு உதவி செய்வதற்கு வேண்டிய அநுபவம் உள்ளவன் என்று சொல்கிறேன்! அத்தோடு ரவீந்திரன் மனம் விட்டுச் சிரிப்பதற்கு வேண்டிய சூழ்நிலையை அடிக்கடி உண்டாக்குங்கள்!''

இவ்வாறு சொல்லி டாக்டர் சுரேஷ் தம்மோடு வந்த ஒரு மனிதரை இலஞ்சிச் சாமியாருடைய ஆசிரமத்திலே விட்டு விட்டு மற்றவர்களோடு திருச்சிக்குப் புறப்பட்டார்.

** ** **

பம்பாயில் சந்திரிகா சாவித்திரி அம்மாளின் அன்பிலும் பராமரிப்பிலும் பாதுகாக்கப்பட்டு வந்த அதே சமயம், சொக்கிகுடியில் இலஞ்சிச் சாமியாருடைய சிகிச்

சையில் பளிருடைய அன்பான கவனிப்பில் மலைக் காடுகளிலே பாதுகாக்கப்பட்டு வந்தான் ரவீந்திரன். கல்யாணி அம்மாளோ, தானும் அந்தக் குத்து விளக்கும், தனிமையுமாக லால்குடியில் தகப்பனார் வீட்டில் தன் தாயாருடைய ஆறுதல் மொழியிலே திருநீறும் குங்குமமும் தியானமுமாகப் புனிதச் சூழ்நிலையில் பாதுகாக்கப்பட்டு வந்தாள்.

மூன்று வெவ்வேறு இடங்களில், மூன்று விதக் காவல்களில் இந்த மூவரும் இருந்த போதிலும் மூவருடைய மன நிலை மட்டும் ஒரே மாதிரியாகத்தான் இருந்தது! ரவீந்திரனுக்கோ கோளாறு காரணமாகப் புத்தி நிலையில் இல்லை! அது என்ன ஆகும் என்று யாரால் எப்படிச் சொல்ல முடியும்? சந்திரிகாவோ சாவித்திரி அம்மாளோடு எத்தனை சுற்றினாலும், எவ்வளவு அலைந்தாலும் இரவு நேரங்களிலே மெழுகுவத்தி விளக்கின் வெளிச்சத்திலே நிலையற்ற மனத்தோடு போராடிக் கொண்டிருந்தாள். கல்யாணியோ — அவளுடைய நிலையைக் காணவே மனம் தாங்கவில்லை கனகசுந்தரத்துக்கு! பொழுது விடியும், பொழுது அஸ்தமிக்கும். ஆனால் அவளுடைய கண்ணீருக்கு அஸ்தமனமோ, விடிவு காலமோ இல்லை. தப்பித்தவறி உடம்பின் களைப்பினால் இமை சோர்ந்து போய் மூடினால் பயங்கரமான கனவுகள். தன் கணவன் கூச்சலிடுவது போலவும், நாலைந்து பேர் அவனைக் கயிற்றினால் கட்டி இழுத்து வந்து சாட்டையினால் 'பளீர் பளீர்' என்று அடிப்பது போலவும் சொப்பனம் கண்டு "ஐயோ! ஐயோ!" என்று கதறிக் கொண்டே கண் விழிப்பாள் கல்யாணி! குத்து விளக்குக்கு முன் போய் நின்று கண்ணீர் விடுவாள். தன்னுடைய மாங்கல்யத்தைத் தொட்டுக் கண்களிலே ஒற்றிக் கொள்வாள். அதற்குக் குங்குமம் இடுவாள். "அம்மா! தாயே! ஜோதியே! என் குல விளக்கை அணைத்து விடாதே, அம்மா!" என்று கதறி அழுவாள். இப்படி அவள் பிரார்த்தனை செய்யும் போது தற்செயலாகக் கனகசுந்தரம் அந்தப் பக்கம் வர நேரிட்டு, அவருடைய காதிலே இந்த வார்த்தைகள் விழுந்தால், பெரியவருக்கு அப்படியே இதயம் வெடித்து விடும்போல் இருக்கும்.

இந்த நிலையிலேதான் பௌர்ணமி வந்தது. அந்தப் பௌர்ணமி தினத்தில் மூன்று இடங்களிலும் மூன்று வித விசேஷங்கள் நடைபெற்றன. லால்குடியில் கல்யாணி அம்மாள் விளக்குக்குப் பூஜை செய்து பிரார்த்தனைகளும் நேர்த்திக் கடன்களும் செய்து கொண்டாள். பம்பாயில் பௌர்ணமி அன்றுதான் 'நட்சத்திரநங்கை' மேடையிலே ஆடி மயங்கி விழுந்தாள். சொக்கிகுடியிலோ அன்றுதான் கோமாளிக் கூத்து கோலாகலமாக நடைபெற்றது.



ஆமாம்; "ரவீந்திரன் மனம் விட்டுச் சிரிக்க வேண்டும்" என்று டாக்டர் சுரேஷ் சொன்னார் அல்லவா? அந்த வார்த்தைகளின் பொருளை இலஞ்சிச் சாமியார் நன்கு ஆராய்ந்தார். 'மூளைக் கோளாறு உள்ளவர்கள் அடிக்கடி சிரிக்கிறார்கள். ஆனால் அது மனம் விட்டுச் சிரிக்கிற சிரிப்பு இல்லை. மனத்துக்குள்ளேயே, தன்னுடைய மனத்துக்குள்ளேயே தானாகச் சிரிக்கிற சிரிப்பு அது. பின் மற்றவர்களுடைய சிரிப்பு எப்படி? தானே தன்னுடைய மனத்தின் போக்கில் சிரிக்கிறான் ஒரு பைத்தியம். ஆனால் நாமோ சிரிப்பு மூட்டுகிற புற விஷயங்களைப் பார்த்து, அல்லது சிரிப்பு மூட்டுகிற புற விஷயங்களைக் கேட்டுச் சிரிக்கிறோம். நமக்குள்ளேயே நாம் சிரிக்கும்போதுகூட நம்முடைய மனத்தில் சிரிப்பு மூட்டுகிற ஏதோ ஒரு விஷயம் அல்லது சிந்தனை ஞாபகத்துக்கு வந்து அது காரணமாகச் சிரிக்கிறோம். எனவே மனம் விட்டுச் சிரிப்பது என்பது இதுதான்! உண்மையில் கோமாளிகளின் கூத்தைப் பார்த்து அந்த விஷயங்களின் வேடிக்கைகள் மனத்திலே தாக்கி ரவீந்திரன் சிரிக்க முடிந்தால் எப்படியிருக்கும்?''

இவ்வாறு யோசித்தார் இலஞ்சிச் சாமியார். எனவே சொக்கப்பனிடம் சொல்லி, சொக்கிகுடியில் மட்டுமல்லாமல், சுற்று வட்டாரங்களில் உள்ள மலைக் குடியிருப்

# பிரஷ் - கிர்லோஸ்கர்

**BRUSH**
**KIRLOSKAR**

ELECTRIC MOTORS



## மோட்டார்கள் 350 H. P. வரையில்

மேலே உள்ளது போன்ற TB டைப் மோட்டார்கள் 1500 RPM.யில் 100 HP. வரை தயாரிக்கப்படுகிறது. ஸ்குரல் கேஜ் மற்றும் ஸ்லிப்ரிங் டிசைன்களிலும் கிடைக்கும்.

ஈரமான அல்லது தூசி, துப்புகள் அதிகம் சேரக் கூடியதாக உள்ள பௌண்டரிகள், கல் உடைக்கும் இடங்கள், ஸிமெண்ட், பேப்பர், இரும்பு அல்லது மாவு அரைக்கும் தொழிற்சாலைகளில் எந்தக் கடினமான வேலைகளுக்கும் பிரஷ் கிர்லோஸ்கர் மோட்டார்களுக்கு ஈடு வேறு கிடையாது.

**KIRLOSKAR ELECTRIC**

KIRLOSKAR ELECTRIC COMPANY LIMITED, BANGALORE - 8.

சோல் ஏஜெண்டுகள்

**PARRY & CO. LIMITED**

மதராஸ் : தபால் பெட்டி நெ. 12
பம்பாய் : தபால் பெட்டி நெ. 508
கல்கத்தா : தபால் பெட்டி நெ. 208
நியூடெல்லி : தபால்பெட்டி நெ. 172

புக்களிலிருந்தும், மலையடிவாரக் கிராமங்களிலிருந்தும் விதம் விதமான கோமாளிகளை வரவழைத்தார் சாமியார். ஆசிரம வாசலில் ஆனைக் கோமாளிப் பொம்மையை நிறுத்தியிருக்கும் இடத்துக்குப் பக்கத்தில் ஒரு பெரிய மண் மேடை அமைத்து அதில் கோமாளிக் கூத்து நடைபெறுவதற்கு ஏக தடபுடலாக ஏற்பாடுகள் நடைபெற்றன. மேலகரம் என்ற கிராமத்திலிருந்து புகழ் பெற்ற கோமாளி – வேஷக்காரன் ஒருவன் இந்தத் திருவிழாவுக்கு என்றே விசேஷமாக அழைத்துவரப்பட்டான். திரிகூட ராஜப்ப கவிராயர் என்ற உன்னதக் கவிஞரின் மரபிலே வந்த பல பாடல்களையும் கேட்டுப் பழகியவன் என்றும், தானே நூதனமாகக் கவி பாடக் கூடிய வல்லவன் என்றும் அவனுக்கு அந்த வட்டாரத்தில் நல்ல பெயர். அவன் தான் கோமாளிகளின் தலைவனுக வேடம் தாங்கி அந்தத் திருவிழாவிலே ஆனை மேலே அம்பாரி வைத்து அதில் ஒய்யாரமாக வந்து இறங்கினான்.

ஏராளமான கூட்டம். இடது கையிலே தூபக் காலைத் தாங்கிக் கொண்டு வலக் கையில் மயில்த் தோகை பிடித்து இலஞ்சிச் சாமியார் நிகழ்ச்சியை வகைப்படுத்தினார். ஒரு குறிப்பிட்ட கட்டத்தில் ரவீந்திரனைக் கூட்டத்துக்குள்ளே அழைத்து வந்து ஆலமரத் திரையிலே உட்கார்த்துவது என்று ஏற்பாடு.

கோமாளி பாட ஆரம்பித்தான் :—

**கோமாளி வேஷக்காரன் ராமராமா—நான்**
**ஏமாளி யல்லவடா ராமராமா !**
**ஆனையைப் பிடித்திழுப்பேன் ராமராமா-அந்தப்**
**பூனையைக் கண்டோடுவேண்டா ராமராமா !**
**புலியைப் பிடித்திழுப்பேன் ராமராமா !—அந்த**
**எலியைக் கண்டோடுவேண்டா ராமராமா !**
**சிங்கத்தைப் பிடித்திழுப்பேன் ராமராமா—**
**பெண்டாட்டித்**
**தங்கத்தைக் கண்டோடுவேண்டா ராமராமா !**

இப்படி மேலகரம் கோமாளி பாடி முடித்ததும் இன்னொரு கோமாளி அவனுக்கு எதிரே வந்து நின்று, “அப்படியானல், ஏ கோமாளி ! உன்னுடைய பெண்டாட்டியைத்தான் பூனை என்றும், எலி என்றும், தங்கம் என்றும் சொன்னாயோ !” என்று வசன நடையிலே கேட்டு விட்டுக் கீழ்க் கண்டவாறு பாட ஆரம்பித்தான் :—

**கோடாலிக் கொண்டை போட்டு**
**— ஏ தங்கமே தங்கம்**
**கோயிலுக்கு வாற பெண்ணே**
**— ஏ தங்கமே தங்கம்**
**கோடாலிக் கொண்டையிலே**
**— அடியே தங்கமே தங்கம்**
**கொழுந்திருந்து வாடுதடி**
**— தங்கமே தங்கம்**

இப்படிக் கோமாளிகளின் சம்பாஷணை நடந்து கொண்டிருக்கும் போதே ஒரு பெண்கள் கோஷ்டி புறப்பட்டு வந்தது.

**நன்னானே என்றுதான் சொல்லுங்களேன்**
**—உங்க**
**நாவுக்குச் சர்க்கரை நான்தாரேன்**
**தில்லாலே என்றுதான் சொல்லுங்களேன்**
**— நீங்க**
**தின்னச் சர்க்கரை நான்தாரேன்**

**ஆனை வாரதைப் பாருங்களேன்—ஆனை**
**அசைஞ்சு வாரதைப் பாருங்களேன்**
**ஆனைப்படலம் போலே நம்ப தேவதை**
**அட்டிகை மின்னலைப் பாருங்களேன் !**

**குதிரை வாரதைப் பாருங்களேன்-குதிரை**
**குதிச்சு வாரதைப் பாருங்களேன்**
**குதிரைப் படலம் போல நம்ப தேவதை**
**கொலுசு மின்னலைப் பாருங்களேன் !**

இதைத் தொடர்ந்து கோமாளி பாட ஆரம்பித்தான் :

**தங்கத்தாலே தாம்பாளமாம்—பெண்டுகளா**

இப்படிக் கோமாளி ஆரம்பித்ததும் அடுத்த அடியைப் பெண்கள் பாடினார்கள்.

**சரம் சரமாப் பூச்சரமாம்—ஏ கோமாளி !**

கோமாளி ஒரு அடி பாடவும், பெண்டுகள் அடுத்த அடி பாடவுமாக இந்தப் பாடல் மாறி மாறி நடந்தது.

**தங்கத்தாலே தாம்பாளமாம்—பெண்டுகளா**
**சரஞ்சரமாப் பூச்சரமாம் — ஏ கோமாளி!**

**பூச்சரத்தைக் கைப்பிடிக்க — பெண்டுகளா**
**புறப்பட்டாளே மாரியம்மா — ஏ கோமாளி**

**வெள்ளியாலே தாம்பாளமாம் — பெண்டுகளா**
**விதம் விதமாப் பூச்சரமாம் — ஏ கோமாளி**

**பூச்சரத்தைக் கைப்பிடிச்சார் — பெண்டுகளா**
**புறப்பட்டாரே அய்யனாரு — ஏ கோமாளி**

**அருவிக்கரை அரசமரம் — பெண்டுகளா**
**ஆனைகட்டும் பூவரசாம் — ஏ கோமாளி**

**ஆனைமேலே அம்பாரியாம் — பெண்டுகளா**
**அம்பாரியில் கோமாளியாம் — ஏ கோமாளி**

பாட்டு இப்படி நடந்து கொண்டிருக்கும் போது, கூட்டத்தில் ஒரு பரபரப்பு உண்டாயிற்று. சேவற் கோழி கூவுவது போல ஏதோ ஒரு சப்தம் கேட்டுப் பனிஞர்கள் திகைத்தார்கள். இலஞ்சிச் சாமியார் தூபக் காலைப் பக்கத்திலே நின்ற ஒரு பனிஞனிடம் கொடுத்து விட்டுக் கையிலே பிடித்திருந்த மயில் பீலியோடு சப்தம் வந்த திசையை நோக்கி ஓடினார் !

(தொடரும்)

Printed & Published by T. Sadasivam at the "Kalki" Press, No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras - 10. Editor : Mi Pa. Somasundaram.

# இந்த ஆச்சரியமான சோப்புத்தூள் வெள்ளைத் துணிகளை—வெள்ளை வெளேரென்று—வெளுக்கிறது—கஷ்டப்பட்டுக் கசக்காமல்!

ரின்ஸோவினால்—இந்த ஆச்சரியமான சோப்புத் தூளினால் — வெளுக்கப்பட்ட எந்த ஆடையையும் சாதாரணமாக வெளுக்கப்பட்ட ஆடையுடன் ஒப்பிட்டுப் பாருங்கள். நீங்கள் உடனே காண்பீர்கள் — ரின்ஸோ எவ்வளவு அதி வெண்மையாக வெளுத்திருக்கின்றது என்று! ரின்ஸோவின் சக்தி வாய்ந்த நுரை எல்லா அழுக்கையும் வெளிப்படுத்துகிறது. வீட்டில் விழும் எல்லா, கலர், மற்றும் வெள்ளை ஆடைகளையும் வெளுப்பதற்கு ரின்ஸோவை உபயோகப்படுத்துங்கள். நீங்களே காண்பீர்கள் — அது உங்களுடைய பாதி வேலையை செய்துவிடுகிறது என்பதை! கஷ்டப்பட்டுக் கசக்க வேண்டியதில்லை! அடித்துத் துவைக்க வேண்டியதுமில்லை! நீங்கள் அதனுடைய அதிகப்படியான வெண்மைக்கு வேறொன்றும் சேர்க்கவேண்டியதில்லை. ரின்ஸோவை இன்றே உபயோகியுங்கள்!









**ரின்ஸோ மிக வெண்மையாக வெளுக்கிறது!**

R. 4-30 TM லீவர் பிரதர்ஸ் (இந்தியா) லிமிடெடினால் இந்தியாவில் தயாரித்தது

REGISTERED No. M
Registered as a Newspaper in Cey